# TAMIL
# SEVENTH READER

E. MARSDEN, B.A.

## ஏழாம் வாசகப் புஸ்தகம்





MACMILLAN & CO., LIMITED
MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON
1918



[Price, 8 Annas] [விலை, 8 அணா]

TAMIL

# SEVENTH READER

BY

E. MARSDEN, B.A.

*Indian Educational Service (Retired)*

AND

RAO BAHADUR C. W. TAMOTHARAM PILLAY, B.A., B.L.

# ஏழாம் வாசக புஸ்தகம்



MACMILLAN & CO., LIMITED

MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON

1918



rice, 8 Annas.] [விலை, 8-அணா.

# CONTENTS

## சூசீபத்திரம்

### முதற் பகுதி: வாசகபாகம் (PROSE)


| | | பக்கம் |
|---|---|---|
| 1 | துஷ்யந்தன் வேட்டைக்குச் செல்லுதல் | 1 |
| 2 | துஷ்யந்தன் சகுந்தலையைக் காணப்போதல் | 8 |
| 3 | ஔரங்கசீப் தமது குருவுக்கு எழுதிய கடிதம் | 15 |
| 4. | சகுந்தலையை அரசன் பரிசோதித்தல் | 17 |
| 5 | கங்காநதி | 23 |
| 6 | ஸர் ஐஸாக் நியூடன் | 31 |
| 7 | பருந்தலை மேய்ப்பவன் | 37 |
| 8 | தாஜ் மஹால் | 42 |
| 9 | சித்தார்த்தரது இளமை | 46 |
| 10 | மனிதனுடைய ஊழியக்காரர்களான யந்திரங்கள் | 53 |
| 11 | சித்தார்த்தர் உலகியலறிதல் | 58 |
| 12 | பிரிட்டிஷ் ராஜ்யம் | 64 |
| 13 | சித்தார்த்தர் கனவு: அழைக்கப்பட்டமை | 69 |
| 14 | தமிழ் நாட்டுப் பழைய அரசர்கள் | 79 |
| 15 | சித்தார்த்தர் நெறியறிந்து புத்தரானமை | 82 |
| 16 | புகழேந்திப் புலவர் | 86 |
| 17 | தேசிங்குராஜன் | 90 |
| 18 | நம்மைப் படைத்தவர் கடவுள் | 93 |
| 19 | நல்லொழுக்கம் | 95 |
| 20. | ஒளி | 98 |
| | புத்தருடைய உபதேசங்கள் | 100 |
| | உபயோகமான சில மரங்கள் | 102 |

# ஏழாம் வாசக புஸ்தகம்.

## 1. துஷ்யந்தன் வேட்டைக்குச் செல்லுதல்.

சந்திரகுலத் தரசனான பூருவின் பரம்பரையினர் பௌரவர் எனப்படுவர். அவர்களில் துஷ்யந்தன் மிகுந்த மேன்மை வாய்ந்தவன். முற்காலத்தில் அரசுபுரிந்தவர்களுள் அவன் மகா பாக்கியசாலி. அவன் செங்கோல் செலுத்திய காலத்தில், பருவம் தப்பாமல் வானம் மழை பெய்துவந்தது: ஆறுகளிலும் ஏரிகளிலும் கிணறுகளிலும் எக்காலும் சுத்த ஜலம் நிறைந்திருந்தது. ஜனங்களுடைய முயற்சி அதிகம் இல்லாமலே பூமி விசேஷமான பலனை அளித்தது. ஜனங்கள் அனைவரும் நல்லொழுக்கமுடையவர்களாய் இருந்தனர். பஞ்சம், பிணி, களவு முதலியவற்றால் அச்சம் கொஞ்சமும் இல்லை. எல்லா வருணத்தாரும் தத்தம் கடமைகளை முறையாக நிறைவேற்றி வந்தனர். அந்தணர்கள் வாய்மை தவறாதிருந்தார்கள். அரசர்கள் தருமநெறியிலும் தைரியத்திலும் பெருமை அடைந்திருந்தார்கள். ஆயர் அரசரிடத்தில் அன்பும் மரியாதையும் உடையவராயிருந்தார்கள். அரசர்களுடைய செங்கோல் தழைத்தது: அவர்கள் முயற்சிகள் யாவும் கைகூடின. அவர்கள் படைப்பயிற்சியில் மிக வல்லவர்களாயும், காட்டு மிருகங்களை வேட்டையாடுவதில் திறமையுடையவர்களாயும், யானையேற்றம் குதிரையேற்றம் முதலியவற்றில் மிக்க தேர்ச்சியுள்ளவர்களாயும் இருந்தனர்.

ஒருநாள் துஷ்யந்தன், படைகள் தாங்கி, ஏவலாட்கள் பின்தொடரக் காட்டகத்தில் வேட்டைக்குச் சென்றான். யானை, தேர், குதிரை, காலாள் என்னும் நால்வகைச் சேனைகளும் உடன் சென்றன. வழிமுழுதும் சங்குகள் சப்தித்தன: மேளங்கள் முழங்கின: தேர்க்கால்களின் ஓசையும், யானைகளின் ஆர்ப்பும், குதிரைகளின் கனைப்பும், ஆயுதங்கள் ஒன்றோடொன்று கலத்தலால் உண்டாகும் ஒலியும், ஆகிய

டைய பலவித ஆகாயப் பறவைகள் மரக்கிளைகள்தோறும் நெருங்கியிருந்தமையால், புஷ்பங்களுக்கும் பறவைகளுக்கும் பேதம் தெரியவில்லை. பல நிறம் இலகுறும் பறவைகள் வரிசை வரிசையாய் இருந்தமையால், வனமுழுவதும், மாலையில் அடுக்கி வைத்தாற்போல, அரசனுக்கு ஆச்சரியம் உண்டாயிற்று.

துஷ்யந்தன் அவ்வனத்திலே பின்னும் சிறிது உள்ளே நாடிப்போனான். மரங்களிலே குரங்கினங்கள் நெருங்கி விளையாடுவதைக் கண்டான். அப்பால் வனத்தின் நடுவே ஓடிக் கொண்டிருந்த தெளிவான ஒரு நீரூற்றை அடைந்தான். அதன் இருகரையிலும் மான் கூட்டங்கள் ஒரு பயமுமின்றிப் பசும்புல் மேய்ந்துகொண்டிருந்தன. நீர்ப்பறவைகள் அவ் வூற்றின் பிரவாகத்தில் நீந்தின. அவ்வூற்றின் பக்கத்தில் அரச அன்னங்கள் விரசி ஒழுகின. சக்கரவாகங்கள் பங்கத்திற் புக்கு விளையாடின.

பின்னும் சிறிதுதூரம் சென்று, இடந்தோறும் இடந்தோறும் பரிசுத்தமுள்ள ஞானிகள் தமது நித்திய கருமங்கள் செய்துகொண்டிருப்பதைப் பார்த்தான். ஜபதபத்திலும் தியானத்திலும் வேதபாராயணத்திலுமன்றி வேறொன்றிலும் புலனைச் செல்லவிடாத மகரிஷிகள் அநேகர் இருந்தனர். அரசனுக்குக் கங்காதீரத்தில் நாராயணர் இருக்கும் இடத்தைத் தான் அடைந்ததுபோல அப்போது ஒரு தோற்றம் உண்டாயிற்று. எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமான கண்ணுவ முனிவருடைய ஆச்சிரமம் சமீபத்தில் இருப்பதாக அரசனோடு சென்ற துணைவன் சொன்னான். அரசன் அந்த மகரிஷியைத் தரிசிக்கவேண்டுமென்று ஆசைகொண்டான்.

கண்ணுவரது ஆச்சிரமம் இருந்த வனம், கண்டோர் மனத்தைக் கவரத்தக்க இடம். அதனைப் பூலோக கைலாசமென்றே சொல்லலாம். அதிமதுரமான கனிகள் நிறைந்து தழைப்பட்டம் தலைவணங்கிய மரங்களுக்கு இடையே எவரும் செல்ல அசாத்தியமாயிருந்தது. ஆகாய வெளியில் பரிமள மணம் பரந்தது. உதிர்ந்த புஷ்பங்கள் படை படையாய் அடர்ந்த மலர் மெத்தையாக நிலம் காணப்பட்டதேயன்றி, வெறுமிடமாகக் காணப்படவில்லை. அண்மையில் மதுவை

யுண்ட வண்டுகள் பாடின. செய்மையில் களிமயில்கள் சிறை விரித்து ஆடின. பறவைக்கூட்டங்கள் மகிழ்ச்சியுற்று இசை பாடித் திசையனைத்தையும் மூடின. பந்தல்போன்ற மரங் களின் கீழ் அந்தணர்கள் செந்தீ வளர்த்துத் தத்தம் நியம நிஷ்டையில் இருந்தனர். சிலர் ருக்குவேதம் உரைத்தனர். சிலர் யஜுர்வேதம் இசைத்தனர். பிறர் அதர்வணவேதம் பகர்ந்தனர். மற்றையோர் சாமவேதத்தை முறைப்படி ஓதி னர். எங்கும் இனிய வடமொழியின் ஒலி வியாபித்திருந்தது. பறவைகள் பாடும் பண்ணும் அறுபதம் முரலும் இசையும் வேதகீதங்களை ஒத்தன.

கூடவந்த பாங்களைப் புறக்கடையில் நிறுத்தித் துஷ்யந்த மன்னன் கண்ணுவரது ஆச்சிரமத்தி னுள்ளே புகுந்தான். ஒரு வரும் காணப்படவில்லை. உரத்த குரலில் "யார் உள்ளே இருக்கின்றவர்?" என்று கூப்பிட்டான்; கூப்பிட்ட ஒலியே எதிரொலியாய் மீண்டது.

பின்பு இலக்குமிபோலும் வடிவினளாய் ஓர் இளம் பெண் துறவிகளின் பெண்கள் தரிக்கும் ஆடையொடு பர்ண சாலையினின்றும் வெளியே வந்தாள். அவள் அரசனைக் கண் டவளவிலே, அவனை வணங்கி உபசரித்தனள். காலவழக்கிற்கு ஏற்ற மரியாதை செய்து அர்க்கியபாத்தியம் வழங்கி ஆசனம் அளித்து அரசனது க்ஷேமம் விசாரித்தாள். பின்பு அரச னுக்குமுன்னே நடந்துகொள்ள வேண்டிய வந்தனை வழிபாட் டுடனே, "அரசரே! உமக்கு யாது வேண்டும்? அடியவள் செய்யக்கூடிய பணிவிடை ஏதேனும் உளதோ?" என்று வின வினாள்.

களங்கமற்ற லக்ஷணங்கள் பொருந்திய இளங்கன்னிகை யின் மாதுரிய வசனத்தைக் கேட்டு ஆனந்தம் மேலிட்ட வனாகி, துஷ்யந்தன், "பெண்ணே! மகரிஷியாகிய கண்ணு வரைத் தரிசிக்கும்பொருட்டு யான் இங்கு வந்தேன். அவரை எங்கே காணலாம்?" என்று கேட்டான்.

**சகுந்தலை** என்ற நாமம் தரித்த அக்கன்னிகை, "என் தந்தையாகிய அவர் காய்கனிகள் கொணரும்பொருட்டுச் சோலைக்குப் போயிருக்கலாம். சிறிது நேரத்தில் திரும்பி வருவார். சதானந்த முனிவரென்பவர் இங்கே வந்திருந்தார்.

ஒருவேளை அவரது ஆச்சிரமத்திற்குப் போயிருக்கலாம். எப்படியும் விரைவில் திரும்பி வருவார் அதுவரையும் இருந்தால் காணலாம்" என்றனள்.

இப்படி அவள் மொழிந்தபொழுது, அரசன் அவளை முற்றிலும் உற்று நோக்கி, முனிவர்கள் வனவாசத்தில் இவ்வளவு அழகிய பெருஞ்செல்வம் எவ்விதம் வந்ததோ என்று ஆச்சரியமடைந்தான் பிறகு அவளை நோக்கி, "நீயார்? உன் தந்தையின் பெயர் என்ன? இந்தத் தபோவனத்தில் நீ யாதுசெய்கிறாய்?" என்று வினவினான்.

"ஞானத்திலும் நல்லொழுக்கத்திலும் சிறந்த கண்ணுவ முனிவர்தம் பெண்ணென்று நான் முன்னமே மொழிந்தேனன்றோ?" என்று புன்முறுவலுடன் சகுந்தலை விளம்பினாள்

துஷ்யந்தன், "முனி புங்கவராகிய கண்ணுவர் கடுமையான விரதங்களை அனுஷ்டிப்பவர் ஞானநெறியையே கைக்கொண்டு உலகப் பற்றைத் துறந்திருப்பது உலகம் அறிந்த விஷயம் அப்படியிருக்க, அவருக்கு நீ மகளாவது எப்படி? உன் பேச்சானது பொருத்தமற்றதாய் இருக்கின்றதே?" என்றான் அதன்மேல் சகுந்தலை தன் சரித்திரம் உரைக்கப் புகுந்தனள்:

"ஒருமுறை ஒரு தபோதனர் இவ்விடம் வந்தவர்; அவரிடம் என் பிறப்பு முதலியவற்றைக் கண்ணுவர் சொன்னார் அவற்றை நான் கேட்டபடி சொல்லுகிறேன்.

"நெடுங்காலம் கொடுந்தவம் இயற்றிப் பெரும்பேறு பெற்ற **விசுவாமித்திரர்**து நோன்பின் முதிர்ச்சியும், விரத வைராக்கியமும் உலகப் பிரசித்தமா யிருந்தன அவருக்கு மனைவியில்லை; மக்களும் இல்லை. வேதமோதுவதிலும் தெய்வ வழிபாட்டிலுமன்றி, அவர் வேறொன்றிலும் காலத்தைச் செலவிடார். மனோதிடத்திலும் பரிசுத்த மேன்மையிலும் ஞானதிருஷ்டியிலும் வேதவிளக்கத்திலும் அவர் தமக்கு இணையில்லாதவர். அவரை அணுக யாவரும் அஞ்சுவாராதலால், அவர் சமீபத்தில் ஒருவரும் போவதே இல்லை. அவர் நியம நெறி தவறாதவர்.

"அவர் இவ்வாறு தவத்தின்கண் பலநாள் கழித்தனர். பிறகு **மேனகை** யென்ற அரம்பையைக் கடிமணம் புரிந்து,

கொள்ளப் புகுந்தனர் உடனே மேனகையைத் தவிர்க்கா மல் அவளைக் கைவிட்டு வேதாப்பியாசத்தில் காலத்தைப் போக்கினூர். அதனைக் குறித்து அவரிடம் பேசுதற்கே அவள் அஞ்சினுள்.

"அப்பால் மேனகைக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. மகள்மேலுள்ள அன்பால் விசுவாமித்திரர் மீளவும் தன்னி டம் வருவாரென்றும், தமது குழந்தையைக் கண்டால் அவர் ஆனந்தமடைந்து அதனைக் கைகளில் ஏந்திக் கொண்டாடுவா ரென்றும் நினைந்து அதனை எடுத்துப் போய் ஒன்றும் பேசா மல் அவர் சன்னிதியில் விட்டனள் அவரோ, பற்றனைத்தை யும் துறந்து பழைய விசுவாமித்திரராய் மாறி யிருந்தனர் கண்ணினுல் குழந்தையைக் கண்டவுடன் துண்ணெனத் திடுக் கிட்டு, மேனகை ஒருபொழுதும் தமமிடம் அணுகாமலிருக் கும்வண்ணம் கட்டளையிட்டனர். மனம் புண்பட்டு மேனகை வந்தவழியே மீண்டாள் ஆதரிப்பாரின்றித் தன்னந்தனியே குழநதை கிடநது அழுதால் அவர் மனம் ஒருவேளை நெகிழ் ந்து உருகுமென் றெண்ணி, ஆற்றங்கரையில் குழந்தை யைக் கிடத்திவிட்டு அப்பால் திரும்பிவரும் எண்ணமின்றி மேனகை போய்விட்டாள்

"ஆற்றிற்கு நீராடச் சென்றபோது, அதனைத் தாம் கண் டெடுத்ததாகக் கண்ணுவர் தமது விருநதினர்க்குச் சொன்னூர். குழந்தை தனியே கிடந்தது. சகுந்த புட்கள் அதனைச் சூழ்நது காவல் காத்தன அதனுல் 'சகுந்த சரணவதி' என் னும் பொருள்படும்படி அக்குழந்தைக்கு, சகுந்தலை என்று பெயரிட்டனர்.

"அரசரே! இதுதான் என் சரித்திரம். என் தந்தை தம் மிடம் விருந்தினராய் வநதிருந்த முனி புங்கவருக்கு மொழிந் ததும் நான் அறிந்ததும் இவ்வளவே. இங்கே, இருந்து வளர்ந்து கண்ணுவரையே எனது பிதாவாகக் கொண்டாடு கின்றேன். முனிவர்களுடைய நியம நிஷ்டை விதிகள் யாவும் அவர் எனக்கு நன்கு உபதேசித்து, வேதபாராயணம் பயிற்று வித்தனர். யான் வேறொரு வாழ்க்கையையும் அறியேன்.

## 2. துஷ்யந்தன் சகுந்தலையை மணந்துபோதல்.

சகுந்தலை தன் சரித்திரத்தைத் துஷ்யந்தனுக்குச் சொல்லி முடித்தவளவில் அவன், "உன் சொல் நயமும் உன் வரலாறும் என் மனத்தில் அழுந்தின. உன்னைப்போல் இது வரையில் நான் ஒருத்தியையும் கண்டிலேன். நீ என் மனைவி ஆகுக. தங்கமாலைகளையும், இரத்தினாபரணங்களையும், பட்டாடைகளையும் உனக்கு அளிப்பேன். என் பொருள்கள் யாவும் உன்னுடையனவே. இன்றைக்கே என்னை மணம்புரிக. என் விருப்பம் இதுவே" என்றான்.

துஷ்யந்தனும் உள்ளபடியே அழகிய ஓர் ஆடவன். அவனுக்கு இணையான ஆடவனைச் சகுந்தலை ஒருநாளும் பார்த்ததில்லை. அவன்மேல் அவளுக்கும் விருப்பம் உண்டாயிற்று. அவள் அரசனை நோக்கி, "யானே என்னைத் தத்தம் பண்ணலாமோ? பெண் கொடுத்தற்குப் பிதாவல்லவா உரியவர்? கண்ணுவர் வரும்வரையில் காத்திருந்து அவரிடம் உமது விருப்பத்தைத் தெரிவியும். பிறகு அவர் உத்தரவின்படி நான் நடந்துகொள்வேன்" என்றனள்.

அதற்குத் துஷ்யந்தன், "அழகிய மாதர் திலகமே! அவர் வருமளவும் காத்திருக்கவேண்டிய அவசியம் இல்லை. என் உயிர் இனி உன்னது, என் மனம் உன்னது. அவர் இன்ன காலத்தில் வருவாரென்பதை யாம் அறியோம். ஒருவேளை பல மாதங்கள் வரையில் அவர் வாராமல் இருக்கலாம். அவரைப்போன்ற மகரிஷிகள் அடிக்கடி வெளியே சென்று விடுவது வழக்கம். அவர்கள் அவ்வாறு சென்றதற்குக் காரணம் கேட்கவாவது, அவர்கள் இப்பொழுது திரும்பிவருவாரென்று சொல்லவாவது ஒருவராலும் இயலாது. அன்றியும், க்ஷத்திரியர்களுக்குள், தந்தை வெளியில் சென்றிருந்தால், அவருடைய அனுமதியின்றியே. ஒரு கன்னிகை தான் வேண்டிய தலைவனைத் தெரிந்துகொள்ளலாம். அதற்கு 'சுயம்வரம்' என்று பெயர். சாஸ்திரம் அதற்கு இடங்கொடுக்கிறது. நான் மோசம் செய்வேனென்று அஞ்சாதே. நான் உன் மீது கொண்ட பிரியத்துக்கு ஏற்றவாறு நீயும் என்மீது பிரீதி

கொண்டால், இந்தக்ஷணமே நாம் விவாகம் செய்துகொள்ள லாம்" என்றான்

இத்தனை அவாவுடன் அரசன் பேசிய மொழிகளைக் கவனமாகக் கேட்ட சகுந்தலை சற்று நாணமுற்று, "அரசர் பெருமானே! நீர் சொல்லியது உண்மையாயின், இவ்வாறு மணந்துகொள்ளல் கடவுள் விதிக்கு ஒத்ததாயின், அதில் பழிபாவம இல்லையாயின், தந்தை கண்ணுவருக்கு அதனால் வெறுப்பு உண்டாகாதென்பது உறுதியாயின், யானே என்னை ஒருவர்க்குத் தீத்தம செய்துகொடுப்பது தவறாகாதாயின், ஒரு நிபந்தனைக்கு நீர் உடன்படுவீரானால், நான் உமக்கு மனைவியாகிறேன் அதாவது, கடவுளருளால் எனக்கு ஒரு புத்திரன் உதித்தால், அவனே இளவரசாகி உமது பட்டத்திற்கு வருதலவேண்டும க்ஷத்திரிய வமிசத்து அரசர்கள் பொய்பேசாமல் தமது வாக்கை நிறைவேற்றுவார்களென்று எண்ணி உம்மை முற்றும் நம்புகின்றேன் என்னை மோசம் செய்யாதிருப்பீராக" என்றாள்

அப்போது துஷ்யந்தன், "பெண்ணே! நீ கேட்டபடி செய்வேனென்று கடவுள் சாட்சியாக வாக்களித்தேன் இது நான் என் மனமாரச் செய்யும காரியம். உன் புத்திரன் என் ராஜ்யத்துக்கு இளவரசனாவதே எனக்குப் பெருமையும் ஆனந்தமுமாகும எனது நாயகியும அரசியுமாவதற்கு உலகம் முழுவதிலும நீயே தகுந்தவள் ஓர் அரசிக்குள்ள உரிமையனைத்தும உனக்குமுண்டு எனக்குப் பின், உன் மகனே பௌரவ குல அரசனாகி, என் சிங்காசனத்தில் வீற்றிருப்பான்" என்று உறுதியாகச்சொல்ல, அவன் அன்பினோடும உரைத்த மொழிகளைச் சகுந்தலை நம்பிக் கலியாணத்திற்கு இணங்கினாள். உடனே அவ்வனத்திலேயே இருவரும் மனமபொருந்தி விவாகம் செய்துகொண்டனர்

சிலகாலம் கழித்துத் தன் பரிவாரத்துடன் வந்து, அவளை இராசதானிக்கு அழைத்துப்போவதாகச் சொல்லி, அரசன் பிரியாவிடை பெற்றுப் புறப்பட்டான். அவன் போன உடனே கண்ணுவர் பர்ணசாலைக்குத் திரும்பி வந்தார்.

நாயகனது பிரிவினாலும், தான் செய்துகொண்ட விவாகத்தைக் குறித்துக் கண்ணுவர் என்ன சொல்லுவாரோ என்று

பயத்தினாலும், சகுந்தலை வழக்கம்போல் அவரை எதிர்கொள்ளவில்லை. நடந்த செய்தி அனைத்தும் முனிவருக்கு ஞானதிருஷ்டியினால் தெரியலாயிற்று. அதைப்பற்றி அவருக்குச் சிறிதளவும் வெறுப்பு உண்டாகவில்லை. நடுநடுங்கி நின்ற மகளை உச்சிமோந்து அவளை ஆசீர்வதித்து, "மகளே! நீ ஒரு தவறும் செய்திலை; நாணம் அடையவேண்டாம். பயப்பட வேண்டுவதுமில்லை. நீ செய்தகாரியம் எனக்குச் சம்மதமானதே. உன் நாயகன் பெருந்தன்மையுள்ள க்ஷத்திரியன்; க்ஷத்திரியர்களுக்குச் சுயம்வரம் உரியதுதான். அதற்கு மந்திரங்கள் முதலியன வேண்டாம். மணமகளைத் தகப்பன் தத்தம் பண்ணவேண்டுவதில்லை. துஷ்யந்தன் சற்குணன்; நீ அவனை நம்பலாம். கடவுளருளால் உன் வயிற்றில் ஒரு மகன் பிறந்து, மிகுந்த வன்மையும் கீர்த்தியும் பொருந்திய அரசனாவான். அவன் பௌரவ குலத்திலேயே பெரிய ராஜ்யத்தை ஆண்டு சத்துருக்கள் அனைவரையும் வெல்லுவான்" என்றார்.

சகுந்தலை மகிழ்ச்சியடைந்து கவலை நீங்கி, தந்தையாரிடம் வந்து அவர் பாதங்களைச் சுத்திசெய்து அவர் கையிலிருந்த கூடையை வாங்கி, அதில் உள்ள கனிகளில் சிலவற்றை அவருக்குக் கொடுத்து அவரது களைப்பைப் போக்கினாள். பின்பு தனது நாயகனை நினைந்து, "அருமையான தந்தையே! என்னை ஆசீர்வதித்தீர்; என் நாயகனையும் ஆசீர்வதிக்க" எனலும், முனிவர், "அப்படியே செய்கின்றேன். அரசனுக்கு என்ன நன்மை சித்திக்கவேண்டுமென்று விரும்புகின்றாயோ அதனையும் அளிக்கிறேன்" என்றார். சகுந்தலை, தன் காதலன் தருமநெறி தவறாது நன்றாய் வாழவேண்டுமென்றும், பௌரவகுலத்தின் செங்கோல் எந்நாளும் செழித்தோங்கவேண்டுமென்றும் பிரார்த்தித்தாள். முனிவர், "அங்ஙனமே ஆகுக" என்றார்.

சகுந்தலை தனது நாயகன் வரவை நெடுங்காலம் எதிர்பார்த்திருந்தாள். விரைவில் வருவதாகச் சொல்லிப் போனவன் சொன்னபடி வரவில்லை. நாட்கள் போய் வாரங்களாயின; வாரங்கள் போய் மாதங்களாயின; அவனிடமிருந்து ஒரு செய்தியும் வரவில்லை. பிறகு சகுந்தலைக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அதனால் அவள் மனக்களிப்புற்று வேறு சிந்தனையின்றிக் காலம் போக்கினாள். குழந்தை மிகவும் அழகு

வாய்ந்திருந்தது. அதனை அதிக அன்புடன் பாராட்டி வளர்த்தாள். வடிவிலும் வலிமையிலும் மேம்பட்டு வருதலால், குழந்தையைப் பார்த்தவர் யாவரும் வியந்து புகழ்ந்தனர் அவன், முத்தினை ஒத்த பல்லும், சுருள்வாய்ந்து ஒளிபாய்ந்த மயிரும், அகன்ற நெற்றியும், திடமான அவயவமும், கம்பீரமான தோற்றமும் பொருந்தியிருந்தான். அவன் அஞ்சாத நெஞ்சு படைத்தவன்; சிறு பிள்ளையாய் வளரும் காலத்திலேயே வனத்திலுள்ள துஷ்டமிருகங்களோடு சண்டைசெய்து அவற்றைத் தோற்றோடச் செய்வான். கண்ணுவர் ஆச்சிரமத்திலிருக்கும் முனிவர்களும், பெரியோர்களும், முனிபத்தினிகளும், அவன் பலத்தையும் திறத்தையும் பார்த்து அவனுக்கு, "சர்வதமனன்" என்று பெயரிட்டார்கள். எல்லாவற்றையும் தன் வசப்படுத்தி அடக்கியாளுவோன் என்பது அதன் பொருள்.

துஷ்யந்தன் வராவிட்டாலும் அவனிடத்திலிருந்து ஏதேனும் சமாசாரமாவது வருமென்று சகுந்தலை நெடுநாள் எதிர்பார்த்திருந்தனள். ஆனால் அது வீணாயிற்று. வருஷக்கணக்காய் இவ்வாறு காலங்கழியவே, அவளுக்குக் கவலை அதிகரித்தது. கண்ணுவமுனிவரின் செல்வக் குமாரியாதலால் அவளுக்கு ஒரு குறையும் இல்லை. அவள் தன்னைக் குறித்துக் கவலைப்படவும் இல்லை. அவள் கவலையெல்லாம் புத்திரனைப் பற்றியதே. கடைசியில் காதலனுக்கு ஒரு கடிதம் அனுப்ப நிச்சயித்தாள். வனத்திலுள்ள மாநிழலிலே படுத்தபடி, அயலிலே வசித்த ஒரு முனிவர் புத்திரியான தனது தோழியின் முன்னிலையில் ஒரு சிறு கடிதம் வரைந்தாள். அதில், "நீர் வருவீரென்று வழிபார்த்திருந்த என் கண்கள் பூத்துப்போயின; நானும் காத்திருந்து இளைத்துவிட்டேன். உமது குமாரன் உம்மைக் காண விரும்புகிறான்; நீர் எப்போது வருவீரென்று கேட்கிறான்" என்று எழுதி, அதனை முனிவரிடம் கொடுத்து அரசனுக்கு அனுப்பினாள். அதற்கு ஒரு விடையும் வரவில்லை. அதனால் அவளுக்கு மனத்தில் சந்தேகம் உண்டாயிற்று. ஆச்சிரமத்துக்கு வருகிறவர்களும் போகிறவர்களும் துஷ்யந்தனுடைய க்ஷேமாதிசயங்களைக் குறித்து அப்போதைக்கப்போது பேசிக்கொள்ளுவதனால், அரசன் சௌக்கியத்தைக்குறித்து அவள்



சகுந்தலை துஷ்யந்தனுக்கு நிருபம் எழுதல்.

Y. E. Alagirisamy.



கவலைப்படவில்லை. அவனது நல்லொழுக்கங்களையும் வீரச் செயல்களையும் யாவரும் புகழ்ந்து வாழ்த்தினர். அவன் தன்னிடத்திலே மிக்க அன்புவைத்திருப்பதாகவும் தன்னை விரைவில் அழைப்பிப்பதாகவும் வாக்குறுதி செய்து சென்றவன் இத்தனை வருஷமாகத் தன்னைக் கவனியாததும், தன்னை மறவாமலிருப்பதற்கு அடையாளமாக ஒரு சீட்டாவது வாய்மொழியாவது அனுப்பாமல்விட்டதும் அவளுக்குப் பெருங்கவலையை விளைவித்தன. சகுந்தலை நன்மனைவி என்பதில் குறைவற்றவளாயினும், தன் மேம்பாட்டையும் தகுதியையும் கவனியாதவளல்லள். தன்னையும் மகனையும் அழைப்பிப்பது, ஒரு மணமகன் மணமகளுக்கும், ஒரு பிதா புத்திரனுக்கும் செய்யவேண்டிய கடமையென்றும், ஒரு க்ஷத்திரியன் தான் சொன்ன வாக்கை மறந்திருப்பது குற்றமென்றும், ஓர் அரசன் தன் பெயரைக் காத்துக்கொள்வது நியாயமென்றும் நினைத்து, அவனுக்கு நினைப்பூட்டும்படி அவள் இரண்டாவது கடிதம் எழுதவேயில்லை. "என்னை அழைப்பிப்பது துஷ்யந்தன் கடமை. அன்றியும் அவர் திரும்பி வருமளவும் நான் ஆச்சிரமத்தில் இருக்கவேண்டுமென்பதே அவரது கட்டளை. அவ்வாறு இருப்பதே எனக்கு முறைமை" என்று அவள் எண்ணினாள்.

எல்லாவற்றையும் குறிப்பால் உணர்ந்த கண்ணுவர், ஒருநாள் சகுந்தலையை நோக்கி, "மகளே! பிள்ளை வளர்ந்து வாலிபனாகிறான். இனி அவனுக்குரிய மேலான பதவியில் அவனை ஏற்றி இளவரசாக்குதலே அரச தருமமாகும். அவன் பயிலவேண்டிய கலைகள் யாவும் யான் அவனுக்குக் கற்பித்துவிட்டேன். பர்ணசாலைப் பழக்கமும் கற்றிருக்கும் கல்வித்தேர்ச்சியும் அவனது உயர்குலத்திற்கும் அரச ஒழுக்கத்திற்கும் போதுமானவை. அவனை இனிமேல் தந்தையிடம் ஒப்பிக்கவேண்டும். நீயும் உன் தந்தையின் வீட்டில் நெடுநாள் தங்கிவிட்டாய்; இனி உன் நாயகனோடு இருந்து இனிது வாழவேண்டும். உன் மகனை அழைத்துக்கொண்டு நீ உன் காதலனது அரண்மனைக்குப் போகலாம். உனக்கு மெய்காவலர்களாக என் சிஷ்யர்கள் உன்னுடன் வருவார்கள்" என்று சொல்லி அருகிலிருந்த மாணாக்கர்களை அழைத்து, "நீவிர், சகுந்தலையையும் அவள் குமாரனையும் அழைத்துக்கொண்டு

ஷ்யந்தனது இராசதானிக்குப் போய், அவனிடம் அவ ளை ஒப்பித்துவிட்டு வாரும்” என்று கட்டளையிட்டார்.

அது பிதாவின் ஆணையாகையால் சகுந்தலை, பின்னி டாமல் மகனை அழைத்துக்கொண்டு புறப்பட்டாள். கன ந்த கண்ணீருடன் வனத்தில் சிநேகிதர்களுக்கு வந்தனை செய்தாள் பர்ணசாலையை மனத்துயரோடு நோக்கினள். ஆதலோ அவள் அருமையில் அறிந்த வீடு. பிதாவின் காலில் விழுந்தழுது பிரியாவிடை பெற்றனள். முன்பு ஒரு காலும் அவள் தந்தையைப் பிரிந்தவளல்லள்.

பிரயாணம் நெடிதாயும் வழி கடிதாயும் தோற்றின. எல் லாரும் காட்டு மார்க்கமாகவே போனார்கள். சர்வதமன னுக்கு வழியிலே புதிய ஜனங்களைப் பார்க்கப் பார்க்க ஆச்சரியம் அதிகரித்தது. அவனுடன் வந்த முனிவரின் மாணாக்கர்களே, அவன் அறிந்த சிநேகிதர்கள். அவன் அவர் களைவிட்டு அகலாமல் அவர்களோடு சேர்ந்து போனான். துஷ் யந்த மன்னனுடைய நகரமாகிய அஸ்தினாபுரி நெருங்கியமாத் திரத்தில், சகுந்தலைக்கு மனம் பதைத்தது. முன்பு வனத் திலே தன்முன் வந்து இனிமையுடன் வாக்களித்த வாலிப னுடைய கோலம், அவள் ஞாபகத்துக்கு வந்தது. அவள் பிதாவின் மாணாக்கர் அவளுக்கு ஆறுதல் சொல்லி அரசன் அவளையும் மகனையும் பார்த்து ஆனந்தம் அடைவானென் றும், அவர்கள் நகரம் புகுந்த தினமே சகல வாத்திய கோஷத்துடன் மகனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டிப் பிர சித்தம் செய்வானென்றும் புகன்றனர்.

பிரயாணம் முடிந்து அனைவரும் அஸ்தினாபுரியை அடைந் தனர் இரவில் ஓரிடத்திலே தங்கி, விடியற்காலம் ஸ்நானம் முதலியவற்றை முடித்துக்கொண்டு சகுந்தலையும் மகனும் பரி சுத்தமான வெள்ளை வஸ்திரம் தரித்து மெய்காவலருடனே அரசனது மாளிகையை அடைந்தார்கள். உலக ஆடம்பரங் களில் சற்றும் பற்றுவையாத தவசிகளின் மாணாக்கர்கள் ஆச் சிரமத்திற்கு மீள எண்ணி, அரசன் சமுகத்தில் சகுந்தலையைக் கொண்டுவந்து விட்டனர் அப்போதே தங்கள் கடமை முடி வுற்றதென்றெண்ணி, அவர்கள் அங்கே பின் நிகழ்வதை அறி யவும் பொறாதவர்களாய் வந்த வழியே திரும்பிவிட்டனர்.



# 3. ஔரங்கசிப் தமது குருவுக்கு எழுதிய கடிதம்.

பரதகண்டத்தை ஒரு குடையின்கீழ் ஆண்ட சக்கரவர்த்திகளுள் பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகளில் இருந்த மொகலாய சக்கரவர்த்திகள் முதன்மை பெற்றவர்களாவர். அவர்களுள் மிகவும் பிரசித்திபெற்ற மகா அக்பர் தமது ராஜ்யத்திலுள்ள பிரஜைகளையெல்லாம் தமது மக்களைப்போலவே கருதி அவர்களுக்கு வேண்டிய அனுகூலங்களைச் செய்துவந்தார். அதனால் சூரிய சந்திரர்கள் உள்ள அளவும் அழியாப் புகழை அவர் அடைந்தார் அவருடைய பேரரான ஷாஜஹான் என்பவர் தமது மனைவியின் பெயரால் தாஜ்மஹால் என்னும் அருமையான சலவைக்கல் கட்டிடத்தைக் கட்டினார். இவ்வரலாறு எட்டாவது பாடத்தினால் நன்கு விளங்கும். அவருக்கு நான்கு புத்திரர்கள் உண்டு. அவர்களுள் ஔரங்கசிப் சக்கரவர்த்தி நான்காம் புத்திரராவர். அவருடைய காலத்தில் மொகலாய ராஜ்யம் மகோன்னத நிலைமையை அடைந்தது. அது சீர்குலைய ஆரம்பித்ததும் அவருடைய காலத்திலேதான். சிறந்த வைபவங்களையும் மற்றவர்களுக்கெல்லாம் இல்லாத மேலான பதவியையும் அனுபவித்த மன்னர்களுள் அவரே கடைசியாவார். ஔரங்கசிபினிடம் பலவகையான நற்குணங்கள் நிரம்பியிருந்தன அவர் ஒருகாலத்தும் மதுபானம் செய்ததேயில்லை. அல்லாமலும் தமது ராஜ்யத்தில் ஒருவரும் மதுபானம் செய்யக்கூடாதென்றும் யாரேனும் மதுபானம் செய்வாராயின் அவருடைய கைகளும் கால்களும் துண்டிக்கப்படும் என்றும் ஒரு விளம்பரம் செய்தார். ராஜ்யத்தில் பாட்டும் கூத்தும் இருக்கக்கூடாதென்று அவர் கட்டளையிட்டிருந்தார். தம்மிடம் வரும் வழக்குக்களையெல்லாம் நன்றாக விசாரணை செய்து நியாய வழியிலேயே அவர் முடிவு செய்வார். ஆனால் மதசம்பந்தமான வழக்குக்களில்மட்டும் அவர் தமது மதத்தின் சார்பாகவே இருப்பார். தம்முடைய கீழ் அதிகாரிகள் ஜனங்களுக்கு அநியாயமாகத் துன்பத்தை உண்டாக்கினால் அவர்களைக் கடுமையான தண்டனைக்கு உள்ளாக்குவார்.

அவர் ஒரு சிறந்த கல்விமான். அரபிபாஷையிலும் பாரசீகபாஷையிலும் அவர்காலத்தில் அவருக்கு நிகராக ஒருவரு

கஷ்டப்பட்டுக் கற்றுக்கொண்டதனால் நான் அடைந்த பயன் யாது? நான் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்களையெல்லாம் என் சொந்த பாஷையிலேயே நீங்கள் கற்பித்திருந்தால் மிக வும் சுலபமாகவும் சீக்கிரமாகவும் நான் தெரிந்துகொண்டிருப் பேன். ராஜ்யத்தை ஆளவேண்டிய எனக்குத் தத்துவஞான சாஸ்திரத்தினால் என்ன பயன்? கற்கத்தக்கவை இன்னவை யென்பதும் கற்கத்தகாதவை இன்னவை என்பதும் அக்காலத் தில் எனக்குத் தெரியாமற் போய்விட்டன. என்னுடைய புத்தி முழுவதும் உபயோகமற்ற வழிகளில் செலவாயிற்று.

"என்னுடைய் சமஸ்தானத்தில் உங்களை ஒரு ஸர்தாராக நியமிக்கவேண்டுமென்று விரும்புகிறீர்கள். உங்களுடைய ஞானத்துக்கு அந்த உத்தியோகம் தகுதியானதன்று. ஆத லால் அதனை உங்களுக்குச் செய்விக்க எனக்கு இஷ்டமில்லை. லௌகிகத்தில் இனிமேல் நீங்கள் புகாமல் கடவுளைத் தொழுது கொண்டு காலத்தைப் போக்குவதே உங்களுக்கு இப்போது ஏற்றதாகும் என்று நினைக்கிறேன்"

மேலேயுள்ள கடிதத்தினால் நம்முடைய இளமைப் பருவத்தை உபயோகமற்ற விஷயங்களைப் படிப்பதில் செலவிடக் கூடாதென்பதும் ஒவ்வொருவரும் அவரவருடைய தொழி லுக்கேற்ற வித்தையைக் கற்றுக்கொள்ளவேண்டுமென்பதும் தாய்ப்பாஷையை நன்றாகக் கற்றுக்கொள்ளுவதால் விசேஷ மான பயன் உண்டென்பதும் நன்கு வெளியாகின்றன



## 4. சகுந்தலையை அரசன் பரிசோதித்தல்.

உடம்பு முழுவதும் நடுங்க நாணத்தினால் தலைகுனிந்தபடி சகுந்தலை, தன் சிறுவனைக் கையிலே பிடித்துக்கொண்டு பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் முதலியவர்களினிடையே சிங்காதனத்தில் வீற்றிருந்த அரசனை அணுகி, பணிவுடன் வணங்கி, "ராஜராஜ! துஷ்யந்த மகிபதி! இக்குழந்தை உமது புத்திரன்; நான் உமது மனைவி சகுந்தலை கண்ணுவ ரிஷியின் பர்ணசாலையில் நீர் என்னை விவாகம் செய்ததையும் எனக்கு அளித்த வாக்கையும் மறவாமல் உமது சொற்படி இவனை இளவரசனாகச் செய்க" என்றாள்



அரசன் சகுந்தலையைப் பரிசோதித்தல்

துஷ்யந்தன் தன் மனைவியை மறந்தவனல்லன் சர்வதமனன் தன் மகனென்பது அவனுக்கு நன்றாக விளங்கிற்று. தான் வந்தபின்பு, ஆச்சிரமத்தில் நிகழ்ந்த அனைத்தையும், அப்போதைக்கப்போது தனது ஒற்றால் அறிந்திருந்தான்.

சகுந்தலையின் கற்புநிலையையும், அவளது அன்பின் உறுதியையும் பரீக்ஷிப்பதே அவன் கருத்து. தன் மகனைக் கண்ணுவர் நன்றாய்ப் பார்த்துக்கொண்டு நல்லொழுக்கங்களிலும் பலகலைகளிலும் செவ்வனே பயிற்றுவிப்பா ரென்பதிலும் அவனுக்குச் சந்தேகம் இல்லை. வன வாழ்க்கையினால் மகன் உடம்பு திடம்பெற்றுச் சௌக்கியம் அடையுமென்பதும் அவனுக்கு நிச்சயமாகத் தெரியும். புத்திரனை அவன் சிறிதும் கவனியாதவன்போல இருந்ததற்கும், நாயகியைத் தன்னிடம் அழைப்பியாததற்கும் காரணம் இதுவே.

அநேக வருஷமாகக் காணாமலிருந்த சகுந்தலையைப் பார்த்தவுடனே அவளைத் தழுவ விரும்பியும், அழகிலும் தோற்றத்திலும் சிறந்த தன் மகனை முதல் முதல் கண்டவுடனே அளவில்லாத ஆனந்தம் அடைந்தும், அவர்களை ஆதரிப்பதற்குமுன், சகுந்தலையின் அன்பையும் மனவுறுதியையும் பின்னும் சிறிது சோதிக்கவும், அவள் தன்மேல் வைத்திருக்கும் அன்பைப் பிறருக்குத் தெரிவிக்கவும் எண்ணினான் தன் ஆனந்தத்தை அடக்கிக் கோபங்கொண்டவன்போல் அவளை நோக்கி, "தவ உடை தரித்த பெண்மணி! நீ யார்? இச் சிறுவன் யாவன்? உன்னையும் அவனையும் குறித்து எனக்கு ஒன்றும் தெரியாது. நான் உன்னை விவாகம் செய்ததில்லை; ஒருவருக்கு வாக்கு அளித்ததும் இல்லை. நீ நின்றாலும் சரி, போனாலும் சரி; அதைப்பற்றி எனக்கு வருத்தம் இல்லை. உன்னோடு எனக்கு ஒரு தொடர்பும் இல்லை" என்றான்.

இப்படி அரசன் மொழிந்தமாத்திரத்தில் சகுந்தலை மனம் பிளந்துபோயிற்று: இடி விழுந்தாற்போல் பிரமித்து, ஞாபகம் தவறி அசைவற்ற தூணைப்போல் நின்றாள். கொஞ்சம் அறிவு வந்தவுடன் அரசன் வீற்றிருக்கும் சிங்காசனத்தைப் பார்த்தனள்; தனக்கு அவன் செய்த தீமையையும் அவன் வாக்கை மீறின செய்கையையும் எண்ண அவளுக்குக் கோபம் பொங்கி வழிந்தது: அச்சம் ஒழிந்தது. உண்மை கடந்து பொய்ச் சத்தியம் பண்ணின புருஷன் நாணித் தலை குனியும்படி அவனைச் சினந்து நோக்கினாள். கோபத்தினால் வாய் பேசமாட்டாமல் அவளுக்கு உதடு துடித்தது. கடைசியில் மனத்தைத் திடமாக்கிக்கொண்டு துக்கமும் எரிச்ச

னும் மேலிட நாத் தழுதழுக்க அரசனை நோக்கி, "ராஜாதி ராஜ! நீர் அறிவிற் சிறந்த கீர்த்தியுடையீர். வலிய அரசராகிய நீர், இழிந்த குணமுடைய கீழ்மக்கள்போல, நன்றாக அறிந்தவர்களைத் தெரியாதாராக வேஷம் போடலாமா? உமது மனத்தையே வினவும்; மனச்சாட்சி ஒருபொழுதும் பொய் பகராது. பொய் பேசி உம்மை நீரே இழிவு படுத்திக் கொள்ளாமல் இனிமேலாயினும் சத்தியம் புகலும். நீர் என்னை அறியேனென்று மறுத்ததனால் எனக்குக் கேடொன்றும் வாராது. நான் உம்மையன்றிப் பிறர்க்கு உரியவளல்லேன். இவ்வாறு பழியை செய்தலும் உமக்குத் தகுமா? நீர் செய்வது வேறு ஒருவருக்கும் தெரியாதென்று நினைக்கின்றீரா? நித்தியரும் சர்வஞ்ஞரும், சர்வவியாபகருமான ஸ்ரீமந் நாராயணன் உமக்குள்ளே இருக்கின்றார். உமது நினைவு அவருக்குத் தெரியும். அவர் சந்நிதியிலே நீர் இப்பாவஞ் செய்கின்றீர். பொல்லாங்கு புரிபவன் எவனும் கடவுள் கண்ணுக்குத் தப்பமாட்டான். மனிதன் கடவுளை மறந்திருப்பினும், கடவுள் அவனைப் பார்க்கின்றார். அவர் மாத்திரமா? அம்மம்ம! சூரியன் சந்திரன், வாயு வருணன் முதலான ஆறுவரும் பார்க்கின்றார்கள். சன்மார்க்கர் மாத்திரமே யமனுடைய தண்டனைக்குத் தப்புவார். அவர்களுக்குக் கடவுளின் கிருபை உண்டு. பாவியையோ, அவன் மனம் இம்மையிலும் துன்புறுத்தும். தேள் கொட்டியதுபோல் உமது மனம் உம்மைச் சுடவில்லையா? நான் பேசப் பேச உமக்கு இரக்கம் வரவில்லையா? வனத்திலே நீர் என் தந்தையின் ஆச்ரமத்தில் வந்து என்னைக் கைப்பற்றினீர். அன்று தொட்டு யான் உமது பிரிய நாயகியாய் இருக்கிறேன். மனத்தினாலாவது வாக்கினாலாவது காயத்தினாலாவது யான் ஒரு குற்றமும் செய்திலேன். நீர் என்னை அழைப்பிக்குமுன் யான் உமது அனுமதியின்றி வந்தது மெய். ஆனாலும் நான் என் பிதாவின் கட்டளைப்படி வந்தேன். இதற்காக யான் இகழத்தக்கவளல்லேன். இவ்விடத்தில், இவர்கள் முன்னே, என்னை நீர் ஒரு பொதுமகளைப் போலவும், முன்பின் அறியாத அன்னிய ஸ்திரீயைப்போலவும் நடத்தினீர். யாரும் இல்லாத இடத்திலும், கணவனானவன் மனைவியை மரியாதையோடு நடத்துவான். பிறர் சமுகத்தில் அநியாயமாய் அவளை மரியாதைகெட நிந்தித்தல்

பெரும்பாவம். சாதாரண மனிதருக்கே இது தவறு. ஒரு மகாராசனுக்கு இது பாவமானமல்லவா!"

"துஷ்யந்த! என் சொல் செவியிற் புகவில்லையோ? காது செவிடா? நான் உமது உண்மையான மனைவி யல்லவோ? இனி யான் வெடியுண்டு ஆயிரம் பொடிகண்டு போவேனாக" என்று அடுகடுத்து உரைத்தாள்.

அக்க சாகரத்திலே அமிழ்ந்தித் தான் பேசினது இன்னதென்று தனக்குத் தெரியாமல் துஷ்யந்தனை நிந்திக்கவும் ஆரம்பித்தாள். அரசன் ஒன்றுஞ் சொல்லாமல் அசைவற்று மௌனமாயிருந்தான். அவள் மறுபடியும்,

"என்னை அலட்சியம் பண்ணினால், பண்ணுக; உமது மகனையாவது பாரும். ஒருவனுடைய வாழ்வு முழுதும் புத்திரனாலே ஆகின்றதன்றோ? பிள்ளையிற் பெரிதொன்று பிறாவுண்டோ? இவன் என் மகன்; உமது புத்திரன். நான் உமது உண்மையான மனைவி; மனைவி என்பவள் யார்? கணவனுடைய மனையிலுள்ள காரியங்களைச் சீர்பெற விசாரணைசெய்து, அவனுக்குச் சந்தானம் உண்டாக்கி, முழுமனமும் அவனிடத்திலே பற்றுயிருப்பவள். அவள் அவனையன்றி வேறொருவனையும் அறியாள். அவனது உருவமே அவள் மனத்தில் வியாபகமாயிருப்பது. காதலனிற் பாதி காதலியே; அவனே அவளது உத்தமத் தோழன். அவன் வீடு பெறுதற்கு அவளே வழி. அவனைத் தனிமையினின்று விலக்கிக் காப்பவளும் அவளே. மன்றல் புரிந்த மனிதர்க்கே, மகவைப் பூக்கங் காதற்கும் தெய்வ வழிபாட்டிற்கும் காலமும் கருத்தும் உண்டாகின்றன. இல்லறத்தை மனமகிழ்வுடன் நடத்துவோர் அவர்களை அன்னையாக மனப்பாக்கியம் மிகுவர்; அவர்கள் பிறரால் உபசரிக்கப்படுவர்; நட்டோர் உறவு நலப்படும். நன்மனைவியர் கணவரோடு ஒத்து வாழ்வர். அவர்கள் களிக்க இவர்கள் சந்தோஷமும், அவர்கள் வருந்த இவர்கள் துன்பமும் உறுவார்கள். அவர்களுக்கு நோய் வரின் இவர்கள் ஆதரித்துப் பேணுவார்கள். ஒருவன் தனி வனத்தில் வேறு உதவியற்ற காலத்தும், மனையாள் அவனுக்குக் கூட்டாளியும் வேண்டிய உதவிசெய்பவளும் ஆவாள். மனைவி மக்கள் உடையவனை யாரும் நம்புவார்கள். ஜனங்களுக்குள்ளே அவன் மிகவும் மதிக்கப்படுவான். ஓ! அரசனே! கவியா

ணத்திற்குக் காரணங்கள் இவையே. மனிதன் தனியே இருத்தல் தகாது. இல்லற வாழ்க்கையிலே சந்தோஷம் அடைதல் கடவுள் நியமனம்.

"ஒருவன், தன் புத்திரனிடத்தில், தன் அம்சமாகவே திரும்பவும் பிறக்கின்றானென்பது மெய். பேரரசனே! நீரே உம்முடைய இந்த மகன் அவனைத் தள்ளினால், உம்மைத் தாமே நீர் தள்ளுகின்றீர் இதனாலன்றோ, ஒருவன், தன் தாயாரை எவ்வளவு மதிக்கவேண்டுமோ, அவ்வளவு தன் தாரத்தையும் மதிக்கவேண்டுவது அவசியமாகின்றது! உமது குமாரனிடத்தில் உமது சொந்த உருவம் உண்மையாகக் காணப்படுவதை உற்றுப்பாரும். ஒருவன் தன் முகத்தைக் கண்ணாடியில் நோக்குவதுபோலத் தன் சொந்தச் சாயலை மகனிடத்திலே காண்கின்றான் ஒருவன் இடுக்கண் நேரிட்டுத் துக்கத்தோடு வீட்டுக்கு வந்தால் அங்கே அவனோடு அனுதாபமுறுவதற்கு உரியவர்கள் அவன் மனையாளும் மக்களுமாவர்

'மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்; மற்றவர்
சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு.'

தன் சிறுவர் பக்கத்தில் ஓடிவந்து மடியிலேறுவதைப்பார்க்கிலும் ஒருவனுக்கு வேறென்ன பேரானந்தம் உளது? பிள்ளை மண் அளைந்து விளையாடிப் புழுதியோடு வரினும், அவனை கையிலேந்தி மார்போடு அணைப்பானல்லனோ?

'அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.'

எறும்பும் தன் சவலையைப் புற்றிற்குக் கொண்டுபோய்ப் போஷிக்கின்றதே சாந்தின் தட்பமும், நீரின் குளிர்ச்சியும், குழந்தையின் ஸ்பரிசம்போல மென்மை பயவா.

"இந்தப் பாலன் ஓர் அழகான குழந்தை யல்லனோ? இவனிடத்தில் எதாவது அவலட்சணம் அல்லது அங்கக் குறைவு உண்டா? அன்பு உள்ளவர்கள், வீட்டை விட்டுத் தூரதேசங்களில் போயிருக்கும்போது, அன்னியர் குழந்தைகளை எடுத்து மடியில் வைத்து அவர்கள் உச்சியை மோந்து கொள்வது யாதுபற்றி? அவர்களைப் பார்க்கவே தமது குழந்தைகளின் ஞாபகம் வருவதனாலன்றோ?

"இனி என்ன பகர்வேன்? இவன் காயம் உமது சாயல். இவன் வடிவில் உமது உருவத்தைப் பாரும். துஷ்யந்த மகிபதி! மேலும் ஒருதரம் முன்பு நிகழ்ந்தது கூறுவேன். நீர் என்னைத் தேடி வந்தீரேயன்றி, யான் உம்மை நாடி வரவில்லை. வேட்டைக்கு வந்தபோது தற்செயலாய்ப் பிதாவின் வீட்டைச் சார்ந்தீர். அங்கே என்னை மணம் புரிந்தீர்; பின்பு பிரிந்தீர். அப்பால் இம்மகன் பிறந்தான். இவனை உம்மவனென்று உணர்ந்து உம்மிடம் கொணர்ந்தேன்.

"என் சொந்த மாதாவே என்னைப் பெற்று அருஞ்சுரத்தில் கைவிட்டுப் போயினள்; அதனை உமக்கு யானே முன்பு சொன்னேன். அம்மம்மா! இப்பொழுது என் நாயகனும் என்னைக் கைவிட நான் என்ன கொடுமை செய்தேனோ? மாதா கைவிட்டாள்! நாயகன் கைவிட்டீர்! எனக்கு என் பிதா இருக்கின்றார்; புண்ணிய மகாத்துமாவும் திண்ணிய முநியுமாகிய கண்ணுவர் என்னைக் கைவிடார். என்னைத் தமது பர்ணசாலையில் இன்னும் வைத்துப் போற்றுவார். அவரிடம் நாணமில்லாமல் போகின்றேன். இப்புத்திரனோ உமது சொந்த மகன்; உமது ஒரே குமாரன்! இவன் கதி யாது? இவனை அநியாயமாய்த் தள்ளற்க" என்று இடித்துரைத்தாள்.

சகுந்தலை இவ்வாறு தான் சொல்லவேண்டியவற்றையெல்லாம் சொல்லி, அப்பால் பேசுவதற்கும் வன்மையில்லாமல், ஆதரவு புரியாத காதலனது முகத்தை விழிகளால் மேலுங் கீழுமாய்ப் பார்த்தனள். அவளது கோபம் ஒருவாறு தணிந்தது. மனத்தில் துக்கம் மேற்பட்டது. பிள்ளையைவிட்ட பரிதாபம் தலையெடுத்தது. சர்வதமனன் சிறுகுழந்தையாதலின் அச்சமும் வெருட்சியும் உடையனாய், மாறிமாறி அங்கிருந்த அந்நிய முகங்களை நோக்கினபடி பிரமித்து நின்றான்.



## 5. கங்காநதி.

பரதகண்டம் எனப்படும் இந்தியாவிலுள்ள நதிகள் எல்லாவற்றிலும் கங்காநதியே மேலானது. இமயமலைகளில் ஜனங்களுடைய கண்ணுக்கெட்டாத தூரத்தில் உள்ள ஒதுக்கிடங்களிலே உற்பத்தியாகி, இந்தியாவிற்கு வடக்கேயுள்ள சமபூமிகளின் வழியாய்ப் பாய்ந்து, கிழக்குமுகமாகத் திரும்பி, ஆயி

ரத்தைஞ்நூறு மைல் வரையில் இமயமலையின் அடியோரமாய் வெகு கம்பீரத்துடன் ஓடி அது வங்காளக் குடாக்கடலின் வடபாகத்தில் விழுகின்றது.

இந்நதிக்கு வடமொழியிலே **கங்கா** என்று பெயர். எப்பொழுதும் போகின்ற ஜீவநதி என்பது அதன் பொருள். கங்கையின் இருகரையிலும் பல புண்ணியக்ஷேத்திரங்கள் உள்ளன.

ஒரு பொருள் ஜனங்களால் எவ்வளவு அருமையாக மதிக்கப்படுகின்றதோ, அதற்கேற்ப அநேக நாமங்கள் அதற்கு உலகில் வழங்குகின்றன. அவ்வாறே கங்கைக்குச் சுரநதி, வரநதி, ஜானவி, மந்தாகினி, பாகீரதி, திரிபதகை முதலான பல நாமங்கள் உண்டு. சைவர் வைஷ்ணவர் யாவர்களுக்குக் கங்கையின்மேலுள்ள அபிமானம், **நைடதத்தில்** உள்ள "கங்கையென்றுலகத்திய கடவுண்மாநதி" என்பதாலும்,

"ஆதி யுகத்தில் யோகத்தால் முத்தி அடையும்; அதன்பின்னர்
ஓதும் உகத்தில் அருந்தவத்தால் முத்தி உளதாம்; ஓங்கரிய
சோதி ஞானத் தால்முத்தி மூன்றாம் உகத்தில் துன்னும்; உயிர்
காத லோடுங் கலியுகத்தில் கங்கை படியின் வீடடையும்"

என்று காசிகாண்டத்திலுள்ள அருமைச் செய்யுளாலும், "கங்கை யென்றலைகளாங் கைதொழுத்தும்—மங்கை" என்னும் **வில்லிபுத்தூராழ்வார்** வாக்கினாலும் விளங்கும்.

சூரியன் சந்திரன் பூமி வாயு மலைகள் ஆறுகள் முதலியவற்றை ஆதிகாலத்து ஆரியர்கள் தெய்வங்களாக வணங்கினார்கள். இவையனைத்தும் அவர்களுக்குத் தெய்வத்தன்மையுடையனவாகக் காணப்பட்டன. வெண்மையான பனிப் படலங்கள் ஆகாயத்தினின்று இழிந்து இமயமலை உச்சியில் தங்கி உருகி அதன் சாரல் வழியாய்த் தாரை தாரையாக வெண்மையான நுரையுடன் இறங்குவதைப் பார்க்கவே, அவர்கள் அழகு சிறந்த ஒரு தேவ கன்னிகை வெள்ளைவஸ்திரம் தரித்துப் பூமியில் பிரசன்னமானதுபோல எண்ணினார்கள். இமயத்தினின்று இவ்வாறு இழிந்து வந்த அம்மாதின் அடிகள் பட்ட இடமெல்லாம் செழிப்படைந்து, தேசத்திற்குப் பெருநன்மையை உண்டாக்கவே, அவளைத் தேவலோகத்திலிருந்து இமயமலையின் புத்திரியாய்



கங்கையின் வரவு.

அவதரித்துவந்த ஒரு தேவதையென்று நினைத்து வணங்குவாராயினர். தொடக்கத்தில் மலைச்சாரலிலே கற்பாறைகளை மூங்கித் தாக்கிக்கொண்டு, அதிக வேகத்துடன் பேரிரைச்சலிட்டுப் புரண்டு பூமியைச் சேர்வது, அவள் வெகு கோபாவேசத்தோடு வருவதுபோல அவர்கட்குப் புலப்பட்டது. அல்லாமலும், இமயமலைச் சிகரமானது, மிக்க வல்லமையுடைய ஒரு கடவுளின் பெரிய வதனம் ஆகாயத்தை அளாவிக்கொண்டு மேகத்தை மேல்நோக்கிப் பார்ப்பதுபோலவும், கற்பாறைகளும் அவற்றின் உயரமான பிளவுகளும் அக்கடவுளின் புருவங்கள்போலவும் தெரிந்தன. விழுந்த நீராவிப் படலங்கள் உருகி நீராய்ப் பாயும்வரைக்கும், அவற்றை இமயமலைச்சாரலில் தடைப்படுத்தி வைத்திருந்த கருங்காடுகள் அக்கடவுளின் கரிய மயிர்க்கற்றைபோன்றிருந்தன. கங்காதேவி ஆகாயத்தினின்று இழிந்து, சிவபெருமானது சடாமகுடத்தில் மறியுண்டிருந்து, பின்பு பூமிக்குப் பெருகியதாக மகாபாரதத்தில் கூறப்பட்ட கதைக்குக் காரணம், மேற்சொல்லிய தோற்றமெனச் சாற்றினும் தவறாகாது.

இந்து மதத்தினர்களான எல்லாச் சாதியாரும் கங்கையை வணங்குகின்றனர்: பல நூறு காததூரத்திலிருந்து யாத்திரை போய் அதில் நீராடுவதைப் பெரும் புண்ணியமாக எண்ணுகின்றனர். வங்காளதேசத்திலே 'தசரா உற்சவம்' ஆரம்பமாகும்போது, வெகு தூரத்திலிருந்து அளவில்லாத ஜனங்கள் பத்திரம், புஷ்பம், பழம், தானியம், தின்பண்டங்கள், பட்டு வஸ்திரங்கள் முதலியவற்றைக் கொண்டுபோய், கங்கைக்கு நிவேதனஞ்செய்து ஆற்றில் விடுவார்கள். ஆற்றின் கூறுக்கே பல இடங்களில் தோரணங்கள் தொங்கும். அர்ச்சகர்கள் செய்யவேண்டிய பூசைகள் நிறைவேறினவுடனே, தாம் கொண்டுவந்த காணிக்கைகளை ஆற்றிலே போடுவார்கள். அகல்களில் விளக்கேற்றி ஆற்றிலே மிதந்தோட விடுவார்கள். பின்பு, கங்கைக்குத் தீபாராதனைசெய்து, தமது ஊருக்குத் திரும்புவார்கள்.

"கமலையில் பிறக்க முத்தி, காசியில் இறக்க முத்தி" என்றொரு முதுமொழியுண்டு. அதன்படி அநேகர், கங்காயாத்திரை செய்து, காசியில் மரிக்க மிகுந்த ஆவலுள்ளவராய் இருப்பார்கள். ஒருவன் மரணத்தறுவாயில் இருக்கையில் அவன் கங்



தசரா உற்சவம்: கங்கைக்கு ஆராதனை.

கையைத் தன் கண்ணால் பார்த்தபடியே சாகும்பொருட்டு, அவன் சுற்றத்தார்கள் அவனைக் கங்கைக்கரைக்கு எடுத்துக்கொண்டு போவார்கள். சில வேளைகளில் அவனை இடுப்பளவு தண்ணீரில் கொண்டுபோய், அங்கேயே சாகும்படி விடுவதுமுண்டு. கங்கையிலே ஸ்நானஞ்செய்து சாகும்பேறு கிடையாமல் தூர தேசங்களிலே இறந்தவர்களுடைய என்புகளை, அவ்வித் தேசங்களிலிருந்து கொண்டுவந்து கங்கையிலே போடுகிறார்கள்.

இமாலயத்தின் வடக்கே, **கங்கோத்தரி** என்னும் இடத்திற்கு ஒரு காததூரத்துக்கு அப்பால், கடல் மட்டத்துக்கு பதின்மூவாயிரம் அடி உயரத்தில், நீராவிப்படலம் படிந்திருக்கும் ஒரு கற்பாறையின் அடியிலே கங்கை உற்பத்தியாகிறது. அவ்விடத்தில் அதனைப் **பாகீரதிநதி** என்று வழங்குவர். அந்நதி அங்கே இருபத்தேழடி அகலமுள்ளதாயும் ஆழமும் உள்ளதாயிருக்கும். பதின் மூன்றேகால் யோசனையளவுக்கும் அந்தப் பெயரோடு வழங்கிவருகிறது. அப்பால், கடல் மட்டத்திற்கு இரண்டாயிரம் அடி உயரத்திலுள்ள தேவப்பிரயாகையில் **அலகநந்தம்** என்னுஞ் சிற்றாற்றோடு கூடின பின், **கங்கை** என்னும் பெயர் பெறும். அதன்மேல் தென்மேற்கு முகமாக நாற்பத்தேழு மைல் ஓடிக் கடல் மட்டத்திற்கு ஆயிரம் அடி உயரத்தில் உள்ள **ஹரித்துவார**த்திற்கு வந்து, பின்பு கிழக்குநோக்கி நானூற்றெண்பத்தெட்டு மைல் சென்று அலகபாத்தை அணுகும். அங்கேதான் அது **யமுனை** என்னும் பெரிய நதியோடு கலக்கிறது. அதுமுதல் அதன் வேகம் குறைந்துவிடும். அதுவரைக்கும் அதன் அகலம் மிகவும் ஒடுங்கி வெள்ளமும் வேகமாக வருவதனால், தோணிகள் அதில் செல்ல முடியாது. தனது உற்பத்தி ஸ்தானத்திலிருந்து அறுநூற்றறுபத்தெட்டு மைல் தூரத்தில் உள்ள அலகபாத்தில் வரும்போது, அகலமும் ஆழமும் அதிகரிக்க அது பெரியநதியாகின்றது. அலகபாத்துக்கும் கடலுக்கும் தொண்ணூறு காதம் இருக்கும். வடமேற்கு மாகாணம், அயோத்தி, பேகார், வங்காளம் என்ற இடங்களின் வழியாகப் போகும்போது வடக்கிலும் தெற்கிலும் இருந்து வரும் பற்பல உபநதிகள் அதில் சேர்கின்றன. கடலுக்கு இருபது காதம் தொடங்கி அது செல்லும்

தரை சமபூமியாதலால், ஆங்காங்குப் பலபல கிளையாகப் பிரியும். பதுமை, மேனை, குக்கிலி என்னும் மூன்றுமே அக்கிளைகளில் விசேஷமானவை. பதுமையாறு பிரமபுத்திர நதியிலே போய் விழுவது; மேனை கிழக்கிலும், குக்கிலி மேற்கிலும் பாய்வன. இவற்றின் இடையே மிக்க செழிப்புள்ள அநேக நாடுகள் உண்டு. கடலுக்கு அருகில் பூமியானது மிகுந்த சேற்று நிலமாகவும் அடர்ந்த காட்டுப்பிரதேசமாகவும் இருக்கின்றது.

கங்காநதி இவ்வளவு பெரியதாவதற்குக் காரணம், அதன் இருகரையிலும் வந்து கலக்கும் உபநதிகளின் பெரும் பிரவாகமே. அதன் வடக்கில் இமயமலையும் தெற்கில் விந்தியமலையும் இருக்கின்றன. இமயமலையின் தென்சாரலிலும் விந்தியமலையின் வடசாரலிலும் பெய்யும் மழை முழுவதும் இரண்டற்கும் இடையிலுள்ள பள்ளத்தாக்கில் சிறுநதிகளாய் ஓடிக் கங்கையுடனே கூடும். வடக்கே இமயமலையிலிருந்து வரும் உபநதிகள் வருகின்றன; அவை **இராமகங்கை, கோமதி, கோக்கிரு, கண்டகி, மகாநதி, கௌசிகி, அத்திரி** என்பன. தெற்கிலிருந்து வந்து சேர்வன யமுனையும் **சோண**முமாம். யமுனை, கங்கைபோல் அதன் தென்கரையில் வந்து சேர்ந்ததாயினும், வடக்கே இமயமலையிலேயே கங்கையின் மேற்றிசையில் உற்பத்தியாகி, கங்கையைப்போலவே மேற்கிலும் தெற்கிலும் சென்று, பின்பு கிழக்குமுகமாகத் திரும்பி, அதன் தெற்காக வரும். சம்பலாறு, விந்தியமலையின் நீர்ப்பிரவாகங்களைச் சேர்த்து வாரிக்கொண்டு வந்து யமுனையில் விழும்.

கங்கை உற்பத்தியாகும் இடந்தொடங்கிக் கடலொடு கலக்கும்வரையில் உள்ள இடங்கள் யாவும் மிகவும் பரிசுத்தமானவை; அவற்றுள் கங்கோத்திரியும், சங்கமத்திற்கு அடுத்த தீவாகிய சகரமும், ஹரித்துவாரமும், அலகாபாத்தும், காசியும் அதிக மேன்மைபெற்றவை. அவற்றிற்கு இந்தியாதேசத்தின் எல்லாப் பக்கங்களிலுமிருந்து ஆயிரக்கணக்கான ஜனங்கள் யாத்திரையாக வருவார்கள். இன்றைக்கும், அதன் உற்பத்தி ஸ்தலத்தினின்று சங்கமம்வரைக்கும் ஒருநாளும் இடைவிடாமல் ஆறுவருஷம் நடந்து யாத்திரை செய்பவர்களாக அநேகர் உளர். கங்காநதியிலே நீராடுவது பெரும் புண்ணியமாகக் கருதப்படுகின்றது. யாத்திரை பண்ணித்

திரும்பும்போது, ஜனங்கள் தங்கள் இனத்தாருக்கும் சிநேகிதருக்கும் செம்புகளிலும் கலசங்களிலும் கங்கா தீர்த்தம் கொண்டுபோய்க் கொடுப்பார்கள்.

மேற்கூறிய ஐந்து இடங்களில் யாத்திரைக்கு அதிமேன்மையாக எண்ணப்படுவது, தெய்வப்பிரயாகை எனப்படும் அலகாபாத்து அங்கே லட்சக்கணக்கான ஜனங்கள் போவார்கள். பன்னிரண்டு வருஷத்திற்கொருமுறை, அவ்விடத்தில் ஒரு பெரிய சந்தை கூடி, ஒரு மாதகாலம் நடக்கும் அந்தச் சந்தைக்குச் சிலவேளைகளில் பத்துலக்ஷம் ஜனங்களுக்கு மேற்பட்டு வருவதுண்டு. யாத்திரிகர்கள் நாள்தோறும் பகற்பொழுதில் பட்டினியிருந்து மாலையில் தீர்த்தமாடுவார்கள்

வியாபாரக் கப்பல்களின் போக்குவரவிற்கும், விவசாயத்திற்கும் இந்தியாவிலே, கங்கையைப்போல் மிகவும் உபயோகமான நதி வேறொன்றில்லை கோடிக்கணக்கான ஜனங்களின் பிழைப்புக்கு இந்நதி ஒரு காரணமாக உள்ளது இந்தியாவிலுள்ள மற்ற எந்த நதியும் ஒருவிதத்திலும் இதற்கு இணையாகாது மழைக்காலத்து வெள்ளத்தில் இது கொண்டுவந்து கரைதோறும் விடுகின்ற சேறும் வண்டலும், அளவற்ற கழனிகளை நிரப்பி அவற்றிற்கு நல்ல உரமாகிப் பயிர்களைச் செழிப்பிக்கின்றன. தேசத்தின் பெரும்பாகத்திற்குக் கங்கையிலிருந்தும், அதன் உபநதிகளிலிருந்தும், வெட்டப்பட்டுள்ள கால்வாய்களால் தண்ணீர் பாயும்

ஐம்பது வருஷங்களுக்கு முன், ஆங்கிலேய சிற்பிகளால் ஆறுகோடி ரூபா செலவழித்துக் கங்கையிலிருந்து அறுபது காத தூரம் வெட்டப்பட்ட இரண்டு கால்வாய்கள் உண்டு அவற்றிற்குக் கிளைவாய்க்கால்களும் உள்ளன தோணிகள் மூலமாக அவ்வவ்விடத்திற்குப் பண்டங்களை ஏற்றிக்கொண்டு போகவும், கழனிகளுக்கு நீர் பாய்ச்சவும், அவை மிகவும் உபயோகமாகின்றன

கங்காதீரத்தில் ஆதிகாலம் தொட்டுப் பெயர்பெற்ற பெரிய பட்டணங்கள் அநேகம் உள்ளன அவற்றில் பிரதானமானவை அலகாபாத்து, வாரணாசி, மாங்கீர், பாடலிபுரம், காளிகட்டம் (கல்கத்தா) முதலியனவாம்



# 6. ஸர் ஐஸாக் நியூடன்.

ஏறக்குறைய இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு இங்கிலாந்தில் லிங்கன்ஷயர் என்ற மாகாணத்தில் கணிதசாஸ்திர விற்பன்னர் ஒருவர் இருந்தார். சிறு பிராயத்திலேயே அவர் யாவரும் பார்த்து வியக்கும்படி மிகவும் கம்பீரமாக விளங்கினார். அவருக்குத் தேகபலம் அதிகமாய் இல்லையெனினும் புத்திபலம் அதிகம். ஆனாலும் பள்ளிக்கூடத்தில் அவர் மிகவும் சோம்பேறியாகவும் வகுப்பில் மாணாக்கர்களுக்கெல்லாம் கீழ்ப்பட்டவராகவும் இருந்தார். அவருக்கு **ஐஸாக் நியூடன்** என்று பெயர். கிராந்தமென்னும் பட்டணத்திலுள்ள பள்ளிக்கூடத்தில் அவர் முதலில் படித்துக்கொண்டிருந்தார்.

ஒருநாள் அவருக்கு மேலிருந்த மாணாக்கனொருவன் அவரை உதைத்தான். அவனை அவ்வாறு செய்யவொட்டாமல் செய்துகொள்ளத்தக்க தேகவலிமை அவருக்கில்லை. தம்மை அவமானப்படுத்தின மாணாக்கனைக்காட்டிலும் நாம் படிப்பில் அதிகரித்து அவனுக்கு மேலேபோய் அவன் கொழுப்பை அடக்கவேண்டுமென்று தமக்குள் அவர் அப்பொழுதே நிச்சயித்துக்கொண்டார். அந்த எண்ணப்படியே நன்றாக உழைத்துப் படித்துவந்து படிப்படியாக அபிவிருத்தியடைந்து வெகு சீக்கிரத்தில் தமது வகுப்புக்கு முதல் மாணாக்கரானார். அப்பால் மூன்று வருஷங்களில் பாடசாலையிலுள்ள எல்லா மாணாக்கர்களுக்குமே அவர் தலைவரானார்.

அவருடைய முன்னோர்கள் விசேஷமான பூஸ்திதியுடையவர்கள். அவரது தந்தையார் லிங்கன்மாகாணத்தில் விசேஷமான நிலங்களுடன் ஒரு மாளிகையில் வசித்துவந்தார். 1642-ஆம் வருஷத்துக் கிறிஸ்துமஸ் பண்டிகைநாளில் அவருக்கு நியூடன் பிறந்தார். பிறந்தபோது குழந்தை மிகவும் பலக்குறைவுள்ளதாகவும் நோய்கொண்டதாகவும் இருந்தமையால் அதிகநாள் பிழைக்காதென்றே எல்லாரும் எண்ணினார்கள். ஆனாலும் அப்படிப்பட்ட நியூடன் 84 பிராயம் வரையில் இருந்து கணித சாஸ்திரத்தில் அதிவிற்பன்னர் என்னும் பெயர் பெற்றது யாவரும் வியப்புறத்தக்கதே. நவக்கிரகங்கள் முதலியவற்றின் சலனத்தைப்பற்றியும் ஒளியைப்பற்றியும் பூமியின் ஆகர்ஷண சக்தியைப்பற்றியும்

அநேகம் விஷயங்கள் அவருடைய ஆராய்ச்சியினாலேயே ஜனங்களுக்கு முதன் முதலில் தெரியவந்தன.

அவர் பிறப்பதற்குச் சற்று முன்னே அவருடைய தகப்பனார் இறந்தனர். அவருடைய மூன்றாவது பிராயத்தில் அவருடைய தாய் மறுவிவாகம் செய்துகொண்டு வேறோரிடத்துக்குப் போய்விட்டனள். அவரை அவருடைய சொந்த வீட்டிலேயே வெகுகாலம்வரையில் அவரது பாட்டி வளர்த்துக் காப்பாற்றிவந்தனள்.

மறுவிவாகத்தினால் அவருடைய தாய்க்குக் கொஞ்சம் பூஸ்திதி கிடைத்தது. அதனை அவள் அவருக்குக் கொடுத்துவிட்டனள். அதனால் அவர் வருஷத்தில் 1200 ரூபாய் வரும்படியுள்ள நிலங்களுக்குத் தலைவரானார். அவருடைய பதினைந்தாம் பிராயத்தில் அவருடைய தாய் தனது இரண்டாம் கணவனையும் இழந்தனள். பிறகு தன்னுடைய சொந்த ஊருக்குத் திரும்பிவந்து வசிக்கலானாள். அதுமுதல் நியூடனைப் பயிர்த்தொழிலிலே பழக்குவிக்க எண்ணினாள். அவர் அதுமுதலாகப் பள்ளிக்கூடம் போவதை விட்டபிறகு தினந்தோறும் பயிர்த்தொழிலில் கொஞ்சங் கொஞ்சமாகப் பழகிவந்தார். ஆனாலும் அவருடைய மனம் அதில் அழுந்தவில்லை. வாரந்தோறும் கூடும் சந்தையில் சில தானியங்களை விற்று அவற்றிற்குப் பதிலாக வேறு சில தானியங்கள் வாங்கிவரும்படி அவரை ஒரு வேலைக்காரனோடு சேர்த்து அவரது அன்னை அனுப்புவது வழக்கம். ஆனால் அவர் நேரே அவ்விடம் போகாமல் வழியில் தங்கி ஏதேனும் ஒரு புஸ்தகத்தைப் பார்த்துக்கொண்டிருப்பார்; அல்லது ஒன்றைப்போல் பிரதிமை செய்வார். வேலைக்காரன்மட்டும் சந்தைவேலையைக் கவனிப்பான். அவர் அவ்வாறு இருந்துவந்ததைப்பற்றி அவரது தாய் தன் சகோதரனிடம் முறையிட்டனள். அவன் ஒருநாள் அவருக்குத் தெரியாமல் அவரைப் பின்தொடர்ந்து சென்று அவர் ஒரு கணிதபுஸ்தகத்தைப் படிப்பதைக் கவனித்தான். அதனால் மிகுந்த மகிழ்ச்சியடைந்து உடனே சகோதரியினிடம் வந்து, "உன் மகனை இன்னும் சிறிதுகாலம் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பவேண்டும். அவனுக்குப் படிப்பில் விசேஷமான ஊக்கம் இருக்கிறது. பயிர்த்தொழிலில் அவனுடைய மனம் செல்லாது; அதில் அவனுடைய காலத்தைக்

கழிக்கச் சொல்லுவதில் பயன் ஒன்றும் இல்லை. நன்றாக அவனைப் படிப்பித்தால் அவன் உயர்ந்த பதவிக்கு வருவான் என்று எண்ணுகிறேன்" என்று சொன்னான். அதனால் அவள் அவனை நன்றாகப் படிக்கும்படி செய்தனள்.

படிக்குங்காலத்தில் நியூடன் புஸ்தகப்படிப்போடு நில்லாமல் வேறு விஷயங்களிலும் தமது காலத்தைச் செலவிட்டார். ஒரு நிமிஷமும் அவர் வீண்பொழுது போக்கவில்லை. ஒவ்வொன்றிற்கும் காரணத்தைத் தெரிந்துகொள்ள அவர் முயலுவதன்றி, சிறு பிள்ளையாயிருக்கையிலேயே தம் கையினால் சிறு யந்திரங்களைச் செய்வதில் அவர் பிரியமுடையவராக இருந்தார். உளி, ரம்பம், அரம், கத்தி முதலிய ஆயுதங்கள் நிறைந்த பெட்டியொன்று அவரிடம் இருந்தது. அவர் வீட்டிற்கு அருகிலுள்ள வயல்வெளியில் ஒரு காற்று யந்திரம் வைக்கப்பட்டிருந்தது. அவர் தினந்தோறும் அங்கே சென்று அதனை நன்றாகக் கவனித்து அதன் உறுப்புக்களையெல்லாம் அறிந்துகொண்டார். பிறகு அதைப்போலவே ஒரு சிறிய யந்திரம் செய்து தம் வீட்டின் கூரையின்மேல் வைத்தார். காற்றடிக்காதபோது அவருடைய யந்திரத்தின் சில பாகங்கள் அசைவதைக் கண்டு அவர் ஆச்சரியமடைந்தார். அப்பால் வேறொரு யந்திரஞ்செய்து அதற்குள் சுண்டெலியை விட்டுவைத்தார். அந்த யந்திரத்தின் ஒரு சக்கரத்தின் பக்கத்தில் ஒரு பெட்டியில் சில தானியங்கள் அவரால் வைக்கப்பட்டன. தானியமணிகளைப் பொறுக்கித் தின்னும் பொருட்டுச் சுண்டெலி ஓடுகையில் யந்திரத்தின் சக்கரம் சுற்றிச்சுற்றி வரும்.

சில தினங்களுக்குப்பிறகு அவர் ஜலத்தின் உதவியினால் ஓடக்கூடிய கடியாரமொன்றை ஒரு பழைய பெட்டியைக் கொண்டு செய்தார். அதன் உயரம் நாலடியிருக்கும். அவரது படுக்கையறையில் அது வைக்கப்பட்டிருந்தது. காலத்தை அது மிகவும் சரியாகக் காட்டினமையால் ஒவ்வொருவரும் அங்கே வந்து பார்த்து நாழிகைகளைத் தெரிந்துகொண்டு போவார்கள். அவர் தமது அறையின் சுவர்களில் பறவைகள் மிருகங்கள் கப்பல்கள் முதலியவற்றின் சித்திரங்களை எழுதியிருந்தார்.

தமது வீட்டின் வெளிப்பக்கத்துச் சுவர் ஒன்றில் இரண்டு இடங்களில் நிழலைக்கொண்டு நாழிகை தெரிந்துகொள்ளும்படி வேலை செய்திருந்தார். வெகுகாலம்வரையில் அவற்றைக் கொண்டு ஜனங்கள் நாழிகையை அறிந்துவந்தார்கள். அவை சிறிதளவும் தவறாமல் காலத்தைக் காட்டிவந்தன. அவ்விதம் அவர் வேலைசெய்து வைத்திருந்த கற்களுள் ஒன்றை லண்டனிலுள்ள ராஜாங்கத்துப் புஸ்தகசாலையில் இப்போதும் பார்க்கலாம்.

அவர் பதினெட்டாம் பிராயத்தில் கிராந்தம் பள்ளிக்கூடத்தைவிட்டுக் கேம்பிரிட்ஜ் நகரத்திலுள்ள டிரினிடி கலாசாலைக்குப் போய்ச் சேர்ந்தார். அவர் போவதற்குமுன் கிராந்தம் பள்ளிக்கூடத்து உபாத்தியாயர் மாணாக்கர்களையெல்லாம் வருவித்து அவர்கள் முன்னிலையில் அவருடைய குணாதிசயத்தைப்பற்றி மிகவும் புகழ்ந்து பேசி அவரை உபசரித்து அனுப்பினார்.

டிரினிடி காலேஜுக்கு வந்தவுடன் அவருடைய படிப்பில் அதிக மாறுபாடு உண்டாயிற்று. அதற்குமுன் கணித சாஸ்திரத்தில் அவருக்கு அதிகமான பழக்கமில்லை. அங்கு வந்தபிறகு சில தினங்களுக்குள் க்ஷேத்திர கணிதத்தை மிகவும் செவ்வையாகக் கற்றுக்கொண்டார். கணிதசாஸ்திரத்தைப் பயிலுவதில் விசேஷமான ஊக்கமெடுத்துக்கொண்டு நன்றாக உழைத்து மற்ற மாணாக்கர்களைக்காட்டிலும் விசேஷமான திறமையை அடைந்தார். கலாசாலைக்குப் போகாமல் தாமே உழைத்து அநேகம் விஷயங்களைக் கற்றுக்கொண்டார். கணிதசாஸ்திரத்தில் அதி நுட்பமான பல விஷயங்கள் அவரால் கண்டுபிடிக்கப்பட்டன. பிறகு கேம்ப்ரிட்ஜ் கலாசாலையிலேயே அவரை ஒரு போதகாசிரியராக நியமித்தார்கள். அப்போது அவருக்குப் பிராயம் இருபத்து மூன்று.

1666-ஆம் வருஷத்தில் உலகப் பிரசித்தமான இரண்டு விஷயங்கள் லண்டனில் நடந்தன. அவையாவன, மகாமாரி என்னும் கடுமையான கொள்ளை நோயும் நகரத்தின் அநேக இடங்களில் பலமான தீப்பற்றி யெரிந்ததுமேயாம். அதனால் அவர் கேம்ப்ரிட்ஜை விட்டுத் தம்முடைய சொந்த

ஊருக்குப் போய் இருக்கவேண்டியதாயிற்று. அங்கே ஒரு நாள் அவர் ஓர் இலந்தை மரத்தடியில் உட்கார்ந்திருக்கை யில் மரத்திலிருந்து ஒரு பழம் விழுவதைக் கவனித்தார். "ஏன் அது கீழே விழவேண்டும்?" என்று தமக்குள்ளே எண் ணினார். "அந்த இலந்தைப்பழம் என் மரத்திலிருந்து மேலே செல்லக்கூடாது? பூமியை நோக்கி ஏன் விழவேண்டும்? பழத்தைச்சுற்றி ஒரு கயிற்றைக் கட்டினால் நாம் இருக்கு மிடத்துக்கு அதனை இழுத்துக்கொள்ளலாம். கயிறில்லாவிட் டால் பழம் நம்மிடம் வந்து சேராது ஆனால் பழத்துக்கும் பூமிக்கும் கயிற்றினால் சம்பந்தமில்லை ஆகையால் பழம் தன் னிடம் வந்து விழும்படி செய்வதற்குப் பூமிக்கு ஒரு சக்தி யிருக்கிறது அதுதான் என்ன சக்தி? நாம் அதை எப்படி அள விட்டறியலாம்?" என்று தமக்குள்ளே சொல்லிக்கொண்டார்.

பல வருஷங்கள் வரையில் அவர் பூமிக்கு உள்ள இந்தச் சக்தியைப்பற்றியே ஆராய்ச்சிசெய்து முடிவில் அதுசம்பந்த மான எல்லா விஷயங்களையும் கண்டறிந்தார். அந்தச் சக் திக்கு ஆகர்ஷணம் அல்லது கிராஹ்யம் என்று பெயரிட்டார். பூமியானது தன்னிடம் பழத்தை இழுத்துக்கொள்வதல்லா மல் சந்திரனையும் தன்பால் இழுத்துக்கொள்ளுகிறது பூமி யையும் சந்திரனையும் மற்றக் கிரகங்களையும் சூரியன் தன்பால் இழுத்துக்கொள்ளுகிறது. பெரிய வஸ்துக்கள் சிறிய வஸ் துக்களையும் சிறிய வஸ்துக்கள் பெரிய வஸ்துக்களையும் இழுத் துக்கொள்ளுகின்றன. ஆனால் வஸ்து பெரியதாக இருந்தா லும் இரண்டு வஸ்துக்கள் ஒன்றோடொன்று நெருங்கியிருந்தா லும் ஆகர்ஷண சக்தி பலமாக இருக்கும்.

இவற்றையெல்லாம் கண்டுபிடித்தபிறகு நியூடன் தமது ஆராய்ச்சி வன்மையினால் சூரியனைப் பூமியும் மற்றக் கிரகங் களும் சுற்றிவருவதற்கும் பூமியைச் சந்திரன் சுற்றிவருவ தற்கும் உள்ள காரணங்களையும் அவற்றின் சலன அளவை யும் அவற்றுள் ஒன்றற்கும் மற்றொன்றற்கும் உள்ள தூரத் தையும் யாவருக்கும் விளக்கிக் காட்டினார்.

பிறகு வெளிச்சம் என்பது இன்னதென்பதையும் அது சம்பந்தமான பல அருமையான விஷயங்களையும் அவர் கண்டுபிடித்தார். மிகவும் உபயோகமான தூரதிருஷ்டிக் கண்

ணாடி ஒன்று அவரால் செய்யப்பட்டது. அதற்கு முன்னால் வேறொருவராலும் அவ்வளவு உபயோகமான கண்ணாடி செய்யப்படவில்லை. சாஸ்திர ஆராய்ச்சிக்குரிய பலவகையான புதிய கருவிகள் அவரால் கண்டுபிடிக்கப்பட்டன.

இவ்வளவு ஆராய்ச்சிவல்லமை இருந்தும் அவர் தாம் கண்டறிந்த விஷயங்களை வெகுகாலம்வரையில் ஒருவருக்கும் வெளியிடாமல் இருந்தார். ஆயினும் அவருடைய நண்பர்கள் அவருடைய திறமையை எப்படியோ கண்டறிந்து அவரைப்பற்றிக் கல்விச்சங்கங்களுள் பழமையும் பிரசித்தமுள்ளதுமான ராஜாங்கத்துச் சங்கத்தினிடம் தெரிவித்தார்கள். காலவட்டத்தில் அவரை அந்தச் சங்கத்துக்குத் தலைவராகச் செய்தார்கள்.

பூமியின் ஆகர்ஷண சக்தியைப் பற்றிக் கணக்குகளைப் போடுவதில் அவர் வெகுகாலம் செலவிட்டார். ஆலோசனை செய்வதும் கணக்குப்போடுவதும் அவருடைய வேலையாக இருந்தன. சிந்தனையிலேயே ஆழ்ந்திருப்பதும் சரியான உணவுகளை உரிய நேரத்திற் கொள்ளாமல் ஒருபக்கத்தில் உட்கார்ந்து சாப்பாட்டுவேளையில் யோசனை செய்வார். யோசனையின் மிகுதியால் அவர் பல சமயங்களில் ஊணையும் உறக்கத்தையும் மறந்துபோவதுண்டு; தாம் கண்டறிந்த விஷயங்களையெல்லாம் ஒரு புஸ்தகத்தில் வெளியிட்டிருக்கிறார்.

நியூடன் கலியாணம் செய்துகொள்ளவேயில்லை. "இவ்வளவு அருமையான விஷயங்களை நீங்கள் எவ்வாறு கண்டுபிடிக்கிறீர்கள்?" என்று ஒரு நண்பர் அவரைக் கேட்டபோது அவர், "என்றும் சிந்தனை செய்ததனாலேயே" என்று பதில் உரைத்தார். ஒருகாலத்திலும் அவர் கோபம் கொண்டவராகத் தெரியவில்லை. அவரிடத்தில் மிகவும் பிரியமான ஒரு நாய் இருந்தது. ஒருநாள் அவர் வெளியே சென்றபோது அந்த நாய் அவருடைய படிப்பறைக்குள் தங்கிவிட்டது. எத்தனையோ மாதகாலமாக உழைத்து அவர் குறித்து வைத்திருந்த குறிப்புக்களின்மேல் அது மையைக் கொட்டிவிட்டது. அவர் திரும்பிவந்து பார்க்கையில் சிறிதும் வருத்தமடையாமல், "நாய்க்கு நம்முடைய உழைப்பின் அருமை எங்ஙனம் தெரியும்?" என்று எண்ணிப் பொறுமையாக இருந்தனர்

அவர் மிகுந்த அடக்கமுள்ளவர். தம்மைப்பற்றி ஒரு காலத்திலும் அவர் பெருமைபாராட்டிக்கொண்டதில்லை. யாவராலும் கொண்டாடப்படக்கூடிய நிலையில் இருந்தபோது அவர், "என்னைப்பற்றி உலகத்தார் என்ன நினைக்கிறார்களோ? கல்வியாகிய சமுத்திரத்தின் ஒரு கரையில் நான் இருக்கிறேன். நான் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் அளவற்றன" என்று சொல்லியிருக்கிறார்.

தமது நாட்டில் ஜனங்களாலும் அரசராலும் அவர் நன்கு மதிக்கப்பெற்றார். 1705-ஆம் ஆண்டில் 'ஸர்' என்ற பட்டம் அவருக்குக் கிடைத்தது. அதுமுதல் ஸர் ஐஸக் நியூடன் என்ற பெயர் அவருக்கு வழங்கலாயிற்று. 1727-ஆம் ஆண்டில் அவர் இறந்தார். அவர் இறந்தபிறகு அவரை இங்கிலாந்திலுள்ள பெரியபெரியோர்களைப் புதைக்குமிடமான வெஸ்ட்மினிஸ்டர் ஆபி என்னும் கோவிலிலேயே அடக்கம் செய்தார்கள்.



## 7. சகுந்தலை மேம்படல்.

பத்தினி உரைத்த வார்த்தைகள் துஷ்யந்தன் மனத்தை உருகித் தாக்கின. பிள்ளைகளின்மேல் பெற்றோருக்கு இருக்கும் அன்பைப்பற்றி அவள் பேசினபோது, அவனுக்குத் தன் குழந்தையை அணைத்துக் கொள்ள ஆசை உண்டாயிற்று. ஆனாலும், பின்னும் வெளிக்குக் கோபக்குறியையும் கடுமையான மொழியையும் காட்டி, அவளை மேன்மேலும் நிந்தித்து, அவள் மனம் புண்படச் செய்தான்.

"நீ பேசுவன யாவும் மிக விநோதமாயிருக்கின்றன. அவற்றின் உண்மையை யார் அறிவார்? உன் வாயே உன்னைக் கண்டிக்கின்றது. நீ சகுந்தலையானால், பொய் பேசுபவளும் கொடியவளுமான மேனகையே உன் தாய் என்று ஒத்துக் கொள்ளுகின்றாய் அல்லவா. கோவிலிலே சுவாமிக்கு அர்ச்சனைசெய்த புஷ்பத்தை அந்தரத்தில் எறிந்து விடுவதுபோல், கைக்குழந்தையாயிருந்த உன்னை இமயமலையின் வனாந்தரத்திலே எறிந்துவிட்டுப் போனவள் உன் தந்தையோ, காட்டிலே உன்னைக் கைவிட்டவன்: தன் குழந்தையென்று

சற்றும் இரக்கமின்றி உன்னை மலையடியில் உலர்ந்து சாக ஒழித்தவன். அன்னையும் பிதாவும் இன்ன தன்மையராக, நீயும் உன் அன்னையைப்போல் ஆனாய். உன் பிறப்பு நீசப் பிறப்பு. உன்னைப் பெற்றவள் வெட்கங் கெட்டவள். பிதா மானம் அற்றவன் நீயும் அவர்கள்போல மானம் அற்றவள். உன்னை அவர்களிலும் கெட்டவள் எனலாம். உன் பேச்சுக்கள் சிறிதளவும் நம்பத்தக்கன வல்ல. இவ்விதம் பேச உனக்கே வெட்கம் இல்லையா? உன் பிள்ளையைச் சவலைக் குழந்தை என்கிறாய். அவனைப் பார்த்தால் பருத்த வாலிபனாயிருக்கிறான். அதிசீக்கிரம் வளர்ந்தான்போலும். அவனுக்கு நீ சொல்வதிலும் அதிக வயது ஆயிருக்கவேண்டும். உன் வார்த்தைகளை நான் தினைத்துணையும் நம்பவில்லை. என்னிடம் நீ கொண்டாடும் உரிமையை முழுதும் மறுக்கின்றேன். உன்னை யான் அறியேன். நீ இவ்விடத்தை விட்டு எங்கே போக இஷ்டமோ அங்கே போய்விடு. உனக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை" என்று வற்புறுத்திக் கூறினான்.

அரசன் இவ்வாறு கடுமையாய்ப் பேசினபோது, அவ்விடத்தை விட்டுப் போய்விடுவதே தகுமென்று நினைத்தும், மற்ற விடை பகராமல் போகலாகாதென்று, அவள் மிகுந்த துக்கத்துடன், "மகாராஜா! பிறர் குற்றம் தினையளவாயினும், அவை உமது கண்ணுக்கு நன்கு புலப்படுகின்றன. உமது குற்றம் பனையளவாயினும், அவை உமக்குத் தெரியவில்லை. என் தாய் மேனகை பொதுமகளல்லள். அவள் தெய்வப் பெண். ஆதலால், அவள் மகளாகிய யான் உம்மிலும் உயர்குலத்தவள். நீர் பூமியில்மாத்திரமே சஞ்சரிப்பீர். நான் ஆகாயத்திலும் சஞ்சரிக்கும் வன்மை உடையேன். என் மாதா என்னைக் கைவிட்டுப்போனது மெய். என் பிதா என்னை எடுத்து ஆதரிப்பாரென்றே அங்ஙனம் செய்தனள். அதுவுமன்றி, முனிவர்களேனும் கண்டு எடுக்கும்படி, அவர்கள் ஸ்நானாதிகளுக்காக அடிக்கடி வரும் ஒரு நதி தீரத்திலேதான் என்னைக் கிடத்திப்போனாள். அப்படியே கண்ணுவமுனிவர் என்னைக் கண்டெடுத்தனர். எனக்கு யாதொரு தீங்கும் நேராமல் பட்சிகள் என்னைக் காத்தன. உமக்கு யான் முன்னே சொல்லாத ஒரு விஷயம் இப்பொழுது சொல்லுகின்றேன். என் தாய் என்னை மறந்திருக்கவில்லை.

பலதரம் என்னை வந்து பார்த்ததன்றி, அந்தரவழியாய் என்னைத் தன்னுடன் சுவர்க்கலோகத்திற்கு அடிக்கடி கொண்டு போனதுண்டு. தெய்வலோகங்களையெல்லாம் நான் தரிசித்திருக்கின்றேன். அதிக வன்மையையுடைய அரசராயினும், நீர் இப்பூமியினின்று ஓர் அடிதானும் மேலே வைக்க மாட்டீர். கடுகிற்கு மகாமேரு மலை எவ்வளவு பெரியதோ, அவ்வளவு நான் உம்மிலும் உயர்ந்தவள். ஓர் அவலக்ஷண புருஷன், கண்ணாடியிலே தன் முகத்தைப் பார்க்குமளவும், தான் அதிக அழகுள்ளவனென்று எண்ணுகின்றான். பார்த்த பிறகே அவனுக்குத் தன் குறைவு தெரியும். நான் இப்பொழுது உண்மை என்னும் கண்ணாடியை உமக்குமுன் பிடிக்கின்றேன். உமது குறைவுகளை அதிலே பார்த்துக்கொள்ளும். நல்லார், பிறர் வசை சொல்லார். பெரியோர், ஒருவனது குற்றத்தைச் சொல்ல நேர்ந்தால், மனம் வருந்துவர். அதனை அறிந்து தூற்றுதலே, இழிஞர்க்கு மகிழ்ச்சியாம். யோக்கியர் ஒருவன் குற்றத்தை அறிய ஆசைப்படார்: அதனைக் காண நேர்ந்தாலும், கண்களை மூடிக்கொள்வர் துன்மார்க்கர் ஒருவனுடைய தவறுகளைத் தேடிப்பிடிப்பதே தொழிலாய்க்கொள்வர். நல்லவர்கள்மேலும் பொல்லாதவர்கள் தீமையே பேசுவர் தமக்கே ஒருவன் தீமை செய்யினும், நற்குணமுடையோர் அதைப் பற்றிப் பேசார். தீயனா யிருப்பவன் ஒருவன் சன்மார்க்கன் ஒருவனைத் தீயனென்று சொல்வதைக்காட்டிலும் அக்கிரமம் உளதோ? உமது பிரிய நாயகியாயும், பரிசுத்தமான முனிவர் ஒருவர்பால் வளர்ந்து நன்னெறிகள் பயின்றவளாயும், மனம் வாக்குக் காயங்களிற் குற்றமில்லாமல் தூய்மையுடையவளாயும் இருக்கும் என்னை, நாணமற்றவளென்றும் கற்பில்லாதவளென்றும் நிந்தித்தால் என் மனம் என்னபாடுதான் படாது?

"உமது பிள்ளையைத் தள்ளிவிடுவதனால், உமக்கே நீர் பெருங்கேடு விளைவித்துக்கொள்ளுகின்றீர். தன் தனயனைத் தள்ளிவிடுபவனுக்கு முத்தியுமில்லை, சன்மார்க்கருக்குரிய பதவியுமில்லை. இம்மையிலும் அவன் மனம் சந்தோஷம் அடையாதபடி கடவுள் கெடுப்பர்; அதிர்ஷ்டமும் செல்வமும் அவனுக்குக் கிட்டவொட்டார். இவனோ, நியாயமாய் உமது சொந்த மைந்தன்; பிறனொருவன் பிள்ளை அல்லன்;

சுவீகார புத்திரனல்லன்; கிரயத்துக்குக் கிடைத்த மகவு மல்லன்; இவர்கள் அனைவரிலும் இவன் மேலானவன். உமக்குச் சொந்தமான இவனை அகற்றிவிடுதல் தருமமன்று; நீதியு மாகாது இவனை ஏற்றுக்கொண்டால் உம்மையே நீர் சரிவர மதித்தவராவீர் சத்தியத்தையும் நன்னெறியையும் காப்பாற்றும் சத்தியமே மற்றெல்லாவற்றிலும் மேலான தருமம், மேலான புண்ணியம் சத்தியம் சர்வாலய தரிசனை. சத்தியம் சர்வவேத பாராயணம். சத்தியமே சகல பரிசுத்த ஸ்தல யாத்திரை அதனிற் சிறந்ததுமில்லை அதற்கு இணையானதுமில்லை உற்றுப் பார்த்தால் கடவுளே சத்திய வடிவம். சத்தியமே கடவுள் வடிவம். ஆதலால் அந்தோ! துஷ்யந்த மகாராஜனே! கடைசியாய் ஆணையிட்டு அறிவிக்கிறேன் சத்தியத்தைக் கடைப்பிடித்து நீர் எனக்குப் பண்ணிய வாக்குறுதியை நிறைவேற்றும் இல்லாவிட்டால் நீர் ஒரு க்ஷத்திரியர் அல்லீர் என்னை நீர் நம்பாவிட்டால், தானே மனமார உம்மை விட்டகல்வேன் இங்கே இனி மேல் நிற்பதற்கு எனக்கே இஷ்டமில்லை இவ்விதம் அவமானஞ்செய்த உம்முடன் எனக்கு இனி ஒரு கொண்டாட்டமேன்? ஆனாலும் ஒரு சாதம் உரையாமற் போவேனல்லேன். உமக்குப்பின் என் மகன் இவனே இந்த ராஜ்யத்திற்கு அரசன் ஆவான்" என்று சொல்லிக்கொண்டே அரசன் சமுகத்தை விட்டகன்றாள்.

அப்பொழுது அற்புதமாக ஆகாயத்தில் ஓர் அசரீரி வாக்கு. அந்நாதத்தில் அதிரும் எதிரொலிபோல் முழங்கிற்று ஒவ்வொரு சொல்லும் வேறு வேறாயும் தெளிவாயும், இருந்தது "ஓ! துஷ்யந்த! உன் மகனை அங்கீகரி. சொந்த மனைவி சகுந்தலையை நிந்தனை செய்யேல் பிள்ளையோ உனது சுதந்தர மைந்தன் அவன் உன் சுய அம்சம்: உன்னினும் வேறல்லன் அங்கீகரி, அங்கீகரி இனி அவன் பெயர் பரதன் என்று வழங்குக" என்ற தொனியுண்டாயிற்று.

துஷ்யந்தன் பேரானந்த ஆழியில் மூழ்கி ஆசாரியர் புரோகிதர். மந்திரிகள் முதலியோரைப் பார்த்து, 'ஆகாயவாணி உரைத்தது மெய். இவன் என் புத்திரன். சகுந்தலை வந்தவுடனே அவளை யான் ஏற்றுக்கொண்டால், மெய்ம்மை வெளிப்படாது. அவளது மேன்மைக்கும் குறைவு

முண்டாம்" என்று கூறி, அசரீரியுரை கேட்டு நின்ற சகுந் தலையை நோக்கி, "என் பிரிய நாயகீ! பொறுத்தருளவேண் டும். உன் பக்தியையும் உறுதியையும் பரீக்ஷிப்பதற்கே இவ் வாறு பேசினேன். உனது தூய்மை ஆகாயவாணியினால் உறுதிப்படுத்தப்பட்டது. நீ வந்தவுடன் யான் உன்னை ஏற்றுக்கொண் டால், உன் விவாகத்தைக்குறித்து நம்மவர் சந்தேகிப்பர். குழந்தை என் புத்திரன்றானோ என்பதில் எவரும் ஐயப்பட இடமுண்டாகும். நீ சினந்துரைத்தன அனைத்தையும் அங்கீ கரிக்கிறேன். அவை என் மனத்தை வருத்தவில்லை. நான் வெளிக்குக் கோபங் கொண்டவன்போலக் காட்டினாலும், உன்னோ இன்பமான அன்பையே உடையேன்" என்றான்.

பின்பு அரசன் தன் மகனைத் தன் மடியில் எடுத்து வைத்துக்கொண்டு உச்சி மோந்து, முத்தமிட்டுக் கட்டியணைத் தான். "மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம்" என்பதை அறிந்தனன். அங்கே இருந்தோர் பேரானந்தம் கொண்டனர். முதியோர் ஆசி கூறினார்கள். தந்தையானவன் செய்யவேண் டிய காரியங்கள் எல்லாம் கிரமமாய் இயற்றப்பட்டன. சர்வ தமனன் பரதன் எனும் பெயருடன் இளவரசானான். தந் தையின்பின் சார்வபௌமனாய்ச் சக்கரவர்த்திப் பட்டம் தரித்துப் பெருங்கீர்த்தி பெற்றான். பாரதப்போர் புரிந்த பாண்டவரும் கௌரவரும் உற்பவித்த சிறந்த பரதகுலம் அவனிடத்திலிருந்து உண்டானதே.



## 8. தாஜ் மஹால்.

தாஜ் மஹால் என்னும் பதம், "அரண்மனைகளுக்கு ஒரு கிரீடம்" என்று பொருள்படும். உலகத்திலுள்ள அரச மாளிகைகள் எல்லாவற்றிலும் மிகவும் சிறந்ததாய் ஆக்ரா நக ரத்தில் கட்டப்பட்டிருக்கும் ஓர் அலங்கார மண்டபமாகும் அது. அம்மண்டபமானது, ஷாஜஹான் என்னும் மொக லாய சக்கரவர்த்தியின் மனைவியான மும்தாசா பேகமின் கோரியாகும்.



தாஜ் மஹால்.

மும்தசா செமானி என்பவள், பெயர் பெற்ற நூர்ஜஹானின் சகோதரனை அசிப்கானுடைய மகள். அவள் தனது அத்தையைப்போல், பெருங்கீர்த்தி பெற்றவளல்லள். ஆயினும், அழகிலும் நாகரிகத்திலும் அவளிற் குறைந்தவளல்லள் "தன்காலத்தில் மிகுந்த பெருமை வாய்ந்தவள்" என்பது அவள் நாமத்திற்குப் பொருள். அவளுக்கு, "மும்தசா மஹால் (அரண்மனையில் மிகச் சிறந்தவள்)" எனவும் ஒரு பெயர் உண்டு. ராஜாங்கவிஷயங்களில் பிரவேசியாமல் இருந்தாலும், அவள் தன் நாயகனை முற்றிலும் தன் வசப்படுத்திக்கொண்டிருந்தாள் அவளையன்றி ஷாஜஹான் வேறொரு மனைவியையும் மணஞ் செய்துகொள்ளாமையே அதற்குத்தக்க ஆதாரமாகும். மற்ற மொகலாய அரசர்கள் யாவரும், மகா சக்கரவர்த்தியாகிய அக்பரும், பலபல மனைவியரை விவாகம் செய்துகொண்டவர்கள். ஷாஜஹானே, தமது அன்பிற்குரிய அரசியைத்தவிர வேறொரு மனைவியை அவள்காலத்தும் அவளுக்குப் பின்னும் கைக்கொள்ளவில்லை.



ஷா ஜஹான்.

ஷாஜஹான் [illegible] பெண்மணியைத் தாம் சக்கரவர்த்தியாகு முன்னமே மணந்திருந்தார். அவள் பெயரை மும்தாஜ் மஹால் என்று மாற்றி, டில்லி மகா சக்கரவர்த்தி ஆன உடனே, மிக்க ஆடம்பரத்துடன் தம் விவாக உற்சவத்தை நிறைவேற்றினார். பதினெட்டு வருஷகாலம் அவன் அவளிடம் மிகுந்த பக்தியுடன் வாழ்ந்திருந்தான். கீர்த்தியிற் சிறந்த தனது மாமி நூர்ஜஹானைப்போல், அரசியல் நடத்த அவளுக்குத் திறமையும் இல்லை; அதில் விருப்பமும் இல்லை. ஆயினும், அவள் குடும்பத்திலும் அரண்மனையிலுமுள்ள அனைவரும், அவளது குணத்தினாலும் நற்செய்கைகளாலும், அவளிடத்தில் அதிக அன்புள்ளவர்களாயே இருந்தனர். எல்லாரும் அவளைப் புகழ்ந்து பாடினார்கள்.

மும்தாஜ் மஹாலுக்கு, தாரா, ஷுஜா, ஒளரங்கசீப், முராத் என்னும் நான்கு புத்திரர்களும், இரண்டு புத்திரிகளும் பிறந்தார்கள்.

அழகிற் சிறந்த ரூபவதியும், மிக்க திறமைசாலியுமான மும்தாஜ் மஹால் இறக்கும்போது, ஷா ஜஹானைத் தன் பக்கத்தில் அழைத்து, "நான் உம்மைப் பிரியுங்காலம் நெருங்கி

V.E. Alagiriswamy





மும்தாஜ் மஹால்.

விட்டது. "நாமுன் உம்மிடம் இரண்டு வரங்கள் கேட்கிறேன். நீர் வேறு விவாகம் செய்துகொள்ளலாகாதென்பது ஒன்று; என் காலத்தில் என்னிடம் மிகவும் அன்பாக இருந்தீர்; நான் இறந்த பிறகும் அப்படியே உமது அன்பு என்மேல் இருக்கவேண்டும். மற்றொரு வரமாவது, என் பெயர் பூமியில் என்றும் நிலைபெற்றிருக்கும்படி என் பிரேதக் குழியின்மேல் அலங்காரமான கோரியொன்று கட்டவேண்டுமென்பது. இவை இரண்டுமே நான் விரும்பும் வரங்கள்" என்று கூறினாள். ஷா ஜஹான் அவள் கேட்டபடி செய்வதாக வாக்களித்ததுமன்றி, அவ்வாக்கையும் அன்புடனே நிறைவேற்றினார். அரண்மனையில் அவர் வேறு விவாகம் செய்ததில்லை; அயலிடத்து ஸ்திரீயைக் கண்ணினால் பார்த்ததுமில்லை. மறுவிவாகமென்ற சிந்தனையே அவருக்கு இல்லாமற் போயிற்று. "ஆன்மாவுக்கு ஒரே கடவுள், சூரியனுக்கு ஒரே சந்திரன், ஷா ஜஹானுக்கு ஒரே மனைவி" என்று அவர் சொல்லிக்கொள்வார்.

மனைவி மரித்த துக்கம் மாறினவுடனே இந்தியாவில் "இதற்கு இணையானதும், இவ்வளவு பணச்செலவு பிடித்

ததுமாக வேறொன்று இல்லை" என்று சொல்லத்தக்க பெருமை வாய்ந்த கோரியைத் தமது மேற்பார்வையிலேயே கட்டு வித்தார். தாஜ் மஹால் அதி விசித்திர வேலைப்பாடுள்ள வெண்மையான கல்லினால் அமைந்தது. அழகினால் யாதொரு குறைவுமின்மையால் இன்றைக்கும் அது நேற்றே கட்டி முடிந்ததுபோலத் தோற்றும். வெண் கல்லூற்றுக்கள் சூழ்ந்த நந்தவனங்களின் நடுவிலே, அது, ஷா ஜஹான் பெருமைக் கும், அவர் மும்தசி மஹாலினிடத்தில் வைத்திருந்த அன் பிற்கும், பேரறிகுறியாய் நிலவுகின்றது. இருபதினாயிரம் வேலைக்காரர்கள் நின்று பதினேழு வருஷகாலம் அதனைக் கட்டி முடித்தார்களாம். அதற்குச் செலவான பணம் மூன்று கோடி ரூபாய் என்பர்: அந்தக் கோரியிலேயே ஷா ஜஹா னது பிரேதமும் அடக்கஞ்செய்யப்பட்டது. ஷா ஜஹானும், மும்தசி மஹாலும் புதைக்கப்பட்ட இடங்களில் விளக்குகள் இடைவிடாமல் எரிந்துகொண்டிருக்கும்



## 9. சித்தார்த்தரது இளமை.

ஏறக்குறைய இரண்டாயிரத் தைந்நூறு வருஷங்களுக்கு முன்பு, சாக்கியர் என்னும் ஒரு வகுப்பினருக்கு அதிபராய் ராஜபுத்திர அரசர் ஒருவர் வட இந்தியாவில் இருந்தார். கங் காநதியின் வடக்கே, இமயமலைச் சாரலில் கபிலவாஸ்து என் பதே அவருடைய நாடாகும். அவர் **சுத்தோதனர்,** என்றழைக் கப்படுவார். அவர் மனைவியின் பெயர் மாயாதேவி அவர் மகா சுத்தவீரர். தம்முடைய குடிகளை அவர் 'இவர்போல் அரசர் எங்குளர்?' என யாவரும் கொண்டாடும்படி, நடுநிலை தவறாது நன்கு ஆண்டவர் அவர் செங்கோல் வழுவாது அரசுபுரிந்தமையின், யாவரும் அவரிடம் அன்பு பாராட்டி னார்கள்.

அவருக்குச் **சித்தார்த்தன்** என்ற ஒரே அருமைப்புதல் வன் பிறந்தனன். அவனை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அவர் வளர்த்துவந்தனர். அவனுக்குப் பிரா யம் எட்டாகவே, சுத்தோதனர், தமது மந்திரி பிரதானி முத லானவர்களையும் ஏனையோரையும் அத்தாணி மண்டபத்திற்கு

வரவழைத்து, தம் புதல்வனுக்குக் கல்வி கற்பிக்க எவரை நியமனம் செய்யலாமென ஆலோசனை செய்தார். சற்குருவை யடுத்துக் கல்வி கற்பது அவசியமாதலின், அவர்களது அபிப் பிராயங்களை வெளியிடும்வண்ணம் கேட்டுக்கொண்டார். அங் ஙனம் கல்வி கற்பிக்க வல்லவர், அரசபரம்பரையில் உதித்த வர்கள் கற்கவேண்டிய கல்வியிற் சிறந்தவராயிருப்பது அவ சியமெனவும் கூறினார் மந்திரிகளும் சபையோர்களும், அர சருடைய புதல்வனுக்குக் கல்வியிற்றத் தகுந்த நல்லாசிரியர் விசுவாமித்திரரே யெனவும், அவரினும் புத்திகூர்மை யுடைய வர்கள் அந்நாட்டில் வேறொருவரும் இலரெனவும், அபிப் பிராயங் கூறினார்கள் அவர், நான்கு வேதமும், ஆறு சாஸ் திரமும், அறுபத்துநான்கு கலையும் கரைகண்டவர்; புராண இதிகாசங்களை நன்குணர்ந்தவர்; ஆகவே அவரையே அழைத் தல் வேண்டும் என்று சொன்னார்கள்.

சுத்தோதனர், தமது படிப்பில் சந்தேக விபரீதங்கள் உண் டானகாலத்து, விசுவாமித்திரரை நாடி அவற்றை அகற்றிக் கொண்டவரானமையாலும், அவரிடம் பற்பல சமயங்களில் பற்பல விஷயங்களைக்குறித்து ஆலோசனை செய்தமையாலும், மந்திரி முதலானோருடைய அபிப்பிராயம் சரியானதே யென்று ஏற்றுக்கொண்டார். ஆகவே, கௌசிகருக்குத் தூதனை விடுத்து, அவர் வரவை எதிர்பார்த்திருந்து எதிர்கொண்ட ழைத்து, ஆசனத்தமர்த்திப் பன்முறை வணங்கி, தம்மு டைய புதல்வனுக்கு இகபரங்களுக்குச் சாதனமான கல்வி கற்பிக்க மனமுவந்தருளல் வேண்டும் என வேண்டினார். முனிவரும் ஆசி கூறி, "நாம் அறிந்ததை அரசகுமாரனுக் குக கற்பிப்போம்" என்றார் வேண்டியதை மறுது ஈதல ன்றோ பெரியோர் தன்மை? இதுவே புகழத் தகுந்தது. கல்வி யறிவின் பயன் அதனைப் பிறரறியுமாறு உணர்த்தலேயாகும்.

வித்தியாரம்பம் செய்து, முதன்முதல் காயத்திரி என்னும் மகா மந்திரத்தை அரசகுமாரனுக்கு உபதேசித்தார். பின் னர், எழுதவும் படிக்கவும் கற்பித்தார். எழுதவும் படிக்கவும் கற்றவளவிலே, கணித சாஸ்திரத்தொடு தருக்க நூலும் இலக் கண நூலும் போதித்தார்.

நோவாது அகற்றிவிட்டார். பின்னர் அதன் துன்பத்தைப் பலவாறு தணித்துப் பாலூட்டினார்: தக்கமருந்தால் ரணத்தையாற்றினார். இவ்வாறு அரசகுமாரர், அப்பறவையைக் காப்பாற்றி, அதற்குத் தேனுடன் கலந்த தினைமுதலானவைகளையும் ஊட்டி, அதற்கு வலிமை மீண்டும் வருமாறு செய்தார்.

இங்ஙனம் அன்புபாராட்டிக் காப்பாற்றிய அன்னம், தான் சுட்டதாதலால், அது தனதேயாகுமென்றும், ஆகவே அதனைத் தன்னிடங் கொடுக்கவேண்டுமென்றும், தேவதத்தன் மன்றாடினான். ஆனால் சித்தார்த்தரோ, "உம்முடைய தர்க்கம் மிகவும் செவ்விது. கொல்ல முயன்றவனதோ, காப்பாற்றியவனதோ, ஒரு பிராணியின் உரிமை?" என்று கூறிப் பெருநகை செய்தார். "பட்சியைக் கொல்ல முயன்றவர் நீர்; அதனைக் காப்பாற்றியவன் யான். ஆகவே அது எனதேயாகும்" எனத் தேவதத்தனுக்குச் சித்தார்த்தர் பின்னுங் கூறினார். ஆகவே, இருவரும், தத்தம் சுதந்தரத்தை நிலைநிறுத்தும்பொருட்டு, அரசன் முன்னிலையில் இதனைச் சொன்னார்கள். அப்போது ஆஸ்தான மண்டபத்தில் யாவரும் கூடியிருந்தனர். இந்த வழக்கைக் கேட்டுச் சிலர் ஒருவாறு அபிப்பிராயப்பட்டனர். மற்றவர் மற்றவாறு அபிப்பிராயப்பட்டனர். பலர் பலவாறு கூறினார்கள். முடிவில், அறிவிலும் புத்தியிலும் கல்வி கேள்வியிலும் வயதிலும் முதிர்ந்த ஒரு மந்திரி எழுந்து, 'காப்பாற்றியவனதே உரிமை. கொல்லுதல் அருமையன்று. கொல்லுதலைக்காட்டிலும் காப்பாற்றுதலே சிறந்ததாம்' என்றார்.

அவ்வளவில் யாவரும் அம்மந்திரியின் கருத்தே செவ்விதெனக் கொண்டார்கள். ஆகவே அரசகுமாரரிடம் பறவையைக் கொடுப்பதென்று தீர்மானமாயிற்று. தம்மிடம் கொடுத்த அன்னத்தைக் கைக்கொண்டு சித்தார்த்தர் அரண்மனை சென்று, மிக்க ஆதரவுடன் அதனைக் காப்பாற்றிவந்தார். அதற்குப் பறக்க வன்மை வந்தவுடனே, அதனை வானுக்கிச் செல்லவிடுத்தார். அதுவும் தன்னினத்துடன் கூடி இமயமலைச் சாரலில் வதிந்தது.

சிலநாள் சென்றபின் வசந்தகாலம் வந்துற்றது. தம்முடன் சென்று, தண்ணடைகளைப் பார்க்கும்படி அரசர், தம் புதல்வரை அழைத்தார். இருவரும் புறப்பட்டார்கள். மந்






தாமரை கோங்கு ...ட்சி சண்பகம் ... புன்னை ஆத்தி முதலிய பூமரங்களும், மல்லிகை ... முதலிய பூங்கொடிகளும், ... முதலிய பழமரங்களும் செழித்துப் பூத்துக் காய்த்துப் பழுத்து நறுமணம் வீசின. ஒருபக்கம் தாமரைத் தடாகமும், மற்றொருபக்கம் அரிக்கோடும் ஆறுகளும், அவற்றின் பக்கத்தே மண்டபங்களும் ஒளிர்ந்தன. பல பக்கங்களிலும் பசுமையாகிய காட்சியே புலப்பட்டது. சித்தார்த்தரது மனம் மிகவும் களிப்புற்றது. எந்தப்பக்கம் திரும்பினாலும், உழவர்கள் கலப்பைகொண்டு உழும் ஓசையும், பறவைகள் தத்தம் இனத்தை அழைக்கும் ஒலியும், பாடும் பறவைகள் பாடுங் கீதமும், செவியிற் பட்டன. வண்டுகள் ரீங்காரம் செய்தன. இவ்விதம் எல்லாப் பிராணிகளும் சந்தோஷம் அடைந்திருந்தன. மாங்குயில்கள் தம் வாய் நிரம்பத் தீங்குரலால் ஒலித்தன. தத்தைகள் அரச மரங்களில் நின்று பேசின. பருந்துகள் ஆகாயத்தில் வட்டமிட்டன. மயில்கள் தம் கலாபத்தை விரித்து ஆடிக்கொண்டே கோபுரங்களின் சிகரங்களிற் சென்றன. மாடப்புறாக்கள் குறுகுறுத் தொனித்தன. இவ்வொலிகளெல்லாம் அடங்கித் தூரத்திலெழும் மணமுரசு மிக்கொலித்தது. இவையெல்லாம், நாடு முழுவதும் பஞ்சமின்றிப் பல்வளமும் நிறைந்து, யாவரும் திருப்தியடைந்து மனக்களிப்புட னிருப்பதை வெளியிட்டன.

அப்பொழுது, கலப்பையில் பூட்டியிருந்த ஓர் எருமைக் கடாவை அரசகுமாரர் கண்டார். அதன் முதுகில் ஆறாத புண் ஒன்று இருந்தமையின் அது நடக்கவில்லை. அதனை நடக்கும்பொருட்டு ஒரு கோல்கொண்டு உழவனொருவன் அடித்துக்கொண்டே இருந்தான். சித்தார்த்தர் அதனைக் காணவே மனந்தளர்ந்து மறுபக்கமாகத் தமது முகத்தைத் திருப்பிக்கொண்டு சென்றார். சிறிது தூரம் சென்றவளவில், ஒரு பல்லி சிதலையொன்றைப் பற்றி விரைவாகத் தின்றுகொண்டிருப்பதைக் கண்டார்; இதனைப் பார்த்துக்கொண் டிருக்குமளவில், ஒரு பாம்பானது புற்றினின்று சீறி வெளிவந்து, பல்லியைப் பற்றி விழுங்கிற்று. அது விழுங்கியவளவில், அதனை இலக்குப்பார்த்து ஒரு மரத்தின்கண் உட்கார்ந்திருந்த ஒரு கருடன், தண்ணெனப் பாய்ந்து, அதனைப் பற்றிக்கொண்டு

போலெழும்பிற்று. அவ்வாறெழும்பிய கருடன் அப்பாம்பைக் கொன்று தின்றது. பின்னர் ஒரு புறா சில புழுக்களைத் தின்று கொண்டிருக்க, ஒரு கழுகானது அதனைப் பற்றிக் கொன்று தின்றது. அவ்விதம் தின்ற கழுகை ஒரு வேடன் குறிவைத்து எய்து கொன்றான். கொன்ற வேடனை மற்றொரு பாம்பு தீண்டிற்று. இவ்வளவையும் கண்ட அரசகுமாரர் மனத்தில் மிக்க துக்கத்துடன் ஆண்டமனை அடைந்தார். 'இவ்வுலகில் எந்தப் பிராணியும் மற்றப் பிராணிகளைத் துன்பமிழைத்துக் கொல்லுவதிலேயே நோக்கம் கொண்டவைகளாக இருக்கின்றன. இது நருகியன்று' என்று மனக்குள்ளே சொல்லிக்கொண்டார்.

அரசகுமாரருக்கு மணம் முடிக்கத்தக்க பிராயம் வந்தவளவிலே, தமதுடைய குலத்திற்கேற்ற மற்றொரு குலத்தில், தம் புதல்வருடைய அழகிற்கொத்த மங்கையைத் தேடி, அரசர் மணம் முடிப்பித்தார். அம்மங்கையின் பெயர் **யசோதரை**. அவள் எழுதவொண்ணாததோர் இனிய பாவை. அவள் அழகை வேண்டுமாயின் சித்திரத்தில் வரையவுங்கூடும். அவள் குணத்தையாவது அறிவையாவது எவ்வாறு சித்திரத்தில் வரைய முடியும்?

தம் புதல்வர் இருப்பதற்காக அரசர் ஒரு பெரிய மாளிகை கட்டி, அதனைச் சுற்றிலும் நாண்மலர்ச்சோலையை யமைத்து அதனைச் சூழ ஒரு பெருமதிலை எடுப்பித்தார். அவ்விடத்துள் மனத்திற்குத் துக்கந் தருவதான யாதொரு பிராணியையும் நுழையவிடக்கூடாதென்று சேவகருக்கு ஆணையிட்டார். யாதாயினும் துன்புறுவதைக் கண்டால் தம்முடைய புதல்வரும் துன்பம் உறுவாரென்று எண்ணி, இவ்விதம் கட்டளையிட்டார். சந்தோஷத்துடன் இருப்பவற்றைப் பார்த்துப் புதல்வரும் சந்தோஷத்துடன் இருக்கவேண்டுமென்றே இவ்வண்ணம் செய்தார். அச்சோலையின் பெயர் **விசிரவணம்**. அதன் நடுவில் கங்கையின் கிளையாகிய **ரோகிணி** என்னும் அழகிய நதி ஓடிற்று. அங்கே அரசகுமாரர் மனக்களிப்புடனும் திருப்தியுடனும் வசித்திருந்தார். பிறகு அவருக்கு ஓர் அருமைப் புதல்வன் தோன்றினான். அவர் தம்மனைவிபால் மிக்க அன்பு பாராட்டிவந்தார். இங்ஙனம் எல்லாம் சந்தோஷகரமாகவே இருந்தன.

ஆனந்தத்திற் குரியனவெல்லாம் அங்கு நிரம்பியிருந்தன. ப்பு பிணி சாக்காடு என்பவைகளுள் ஒன்றாயினும் அவர் காதிற் படவில்லை. வேலைக்காரன் எவனாயினும் சுகக்குறைவாயிருந்தால், உடனே, அரசர் ஆணையின்படி, அவனை இவ்வரசர் பார்வையினின்று வேறெங்கேயாவது கொண்டுபோய் விடுவது வழக்கம். ஒவ்வொருநாளும் காலையில் அரசகுமாரர் எழுமுன்னமே, உதிர்ந்த இலை பூ காய் முதலியவற்றைக் கூட்டிக் கண்காணாவிடத்தில் கொட்டிவிடும்படி அரசர் உத்தரவிட்டிருந்தமையால் அரசகுமாரர் மனத்தளர்ச்சி எதனையும் காணுதற்கு இடமே யில்லாமற்போயிற்று.



## 10. மனிதனுடைய ஊழியக்காரர்களான யந்திரங்கள்.

ஆதிகாலத்தில் ஜனங்களுக்குள் நாகரிகம் அதிகமாக இல்லாதபோது பெண்பிள்ளைகளே எல்லாவிதமான வேலைகளையும் செய்துவந்தார்கள். மூட்டைகளைச் சுமப்பதும் அவர்களுடைய வேலையாகவே இருந்தது. அப்பால் நாகரிகம் விருத்தியடைந்தபிறகு ஜனங்கள் குதிரைகளையும் மாடுகளையும் நாய்களையும் ஒட்டகங்களையும் பழக்கித் தங்கள் பொருள்களை அவற்றின்மேல் ஏற்றி வைத்துக்கொண்டு பிரயாணம் செய்துவந்தார்கள். வியாபார விருத்திக்கு அவைகளே முக்கிய காரணமாக இருந்துவருகின்றன என்பது நமக்கு நன்றாகத் தெரியும்.

ஆனால் இந்தப் பிராணிகளைக்காட்டிலும் மனிதனுக்கு விசேஷமான உதவியைச் செய்யும் பொருள்கள் வேறு உண்டு. பஞ்சபூதங்களின் உதவியினாலேயே தனக்கு வேண்டிய காரியங்களையெல்லாம் மனிதன் செய்துகொள்ளுகிறான். ஆனால் பஞ்சபூதங்களை முதலில் அவன் தன் வசப்படுத்திக் கொள்ள எவ்வளவோ காலம் ஆயிற்று. ஆற்றில் கட்டைகள் மிதந்துபோவதையும் அவற்றின்மேல் பறவைகளும் சிறிய பிராணிகளும் உட்கார்ந்திருப்பதையும் கவனித்து அதைப் பற்றி யோசனைசெய்தான். பிறகு பல கட்டைகளை ஒன்றாகச் சேர்த்துக்கட்டி ஆற்றில் மிதக்கவிட்டு அதன்மேல் பல

பண்டங்களை ஏற்றினான். அவனுக்கு ஒருவிதமான வருத்தத்தையும் கொடாமல் ஆற்றிலுள்ள நீரோட்டம் அந்தக் கட்டையை இழுத்துக்கொண்டு போயிற்று.

ஆனால் ஆற்றை யெதிர்த்துச் செல்வது மிகவும் கஷ்டமாயிருந்தது. அதனால் துடுப்புக்களின் உதவியினால் கட்டையை ஆற்றின் எதிர்ப்பக்கமாகச் செலுத்தக் கற்றுக்கொண்டான். அதன்பிறகு தோணிகளைச் செய்ய அறிந்துகொண்டான். முற்காலத்தில் ஆயுதங்கள் கல்லினாலேயே செய்யப்பட்டிருந்தன. அவ்வித ஆயுதங்களைக்கொண்டு பெரிய மரத்தை ஆழமாகக் குடைந்து தோணியாகச் செய்தான்.

ஜலத்தைப்போலவே காற்றையும் தங்களுக்கு இஷ்டமான வேலைகளைச் செய்வதற்கு உபயோகிக்கலாமென்று சில ஜனங்கள் தெரிந்துகொண்டார்கள். காற்றினால் இலைகள் அசைவதையும் பெரிய மரங்கள் ஆடுவதையும் மனிதன் கவனித்துக் காற்றின் பலத்தைத் தெரிந்துகொண்டான். பிறகு தோணியின் இரண்டு ஓரங்களிலும் இரண்டு கோல்களை நிறுத்தி அவற்றின்மேல் பாயைக் கட்டினான். காற்றடிக்கும்போது அது பாயின்மேல் வீசித் தோணியையே ஓடச்செய்வதை அவன் கவனித்தான். பிறகு பாய்மரத்தின் உபயோகம் அவனுக்கு விளக்கமாயிற்று.

கொஞ்சகாலத்துக்குப் பிறகு பொருள்களை ஏற்றிக்கொண்டு போகும்பொருட்டு வண்டிகள் செய்யப்பட்டன. வண்டிகளைக் குதிரைகள் இழுத்துக்கொண்டுபோகும்படி செய்தார்கள். வண்டிக்கு ஏற்ற சக்கரங்கள் முதல் முதலில் ஒரே பலகையாக இருந்தன. அவ்விதமான உருளைகள் மிகவும் கனமாக இருந்தபடியால் யோசனைசெய்து சட்டங்களைக் கோத்து உருளைகள் செய்தார்கள். வரவர நாகரிகம் மேலிட விதம் விதமான வண்டிகள் செய்யப்பட்டன. இப்போதுள்ள வண்டிகள் எல்லாவற்றிலும் மோட்டார் வண்டியே முதன்மையாக விளங்குகின்றது. மாடுகளும் குதிரைகளுமில்லாமல் யந்திரத்தின் சக்தியினாலேயே அது ஓடுகிறது. பிறகு வண்டிகள் போகக்கூடிய சாலைகள் அமைக்கப்பட்டன.

ஜலத்தின் சக்தியினால் தோணியைச் செலுத்தலாம் என்றும் சக்கரத்தின் உதவியினால் வண்டியைச் செலுத்தலாம்

M. E. Alagiriswamy



என்றும் அவன் தெரிந்துகொண்டபிறகு இரண்டையுமே சேர்த்து உபயோகிக்க யோசனைசெய்தான். மிகவும் உயரமான மலையிலிருந்து விழும் ஜலம் சக்கரத்தைத் திருப்பிவிடும் என்பதை அவன் அறிந்துகொண்டான். சக்கரத்தோடு பெரிய கருங்கல்லைக் கட்டிவைத்தான். மலையிலிருந்து விழும் அருவியின் ஜலத்தினால் சக்கரம் சுற்றும்போது கருங்கல்லும் சுற்ற ஆரம்பித்தது. அதனை அறிந்துகொண்ட மனிதன் அந்தக் கல்லை மாவரைக்கும் யந்திரமாக உபயோகிக்க ஆரம்பித்தான்.

நீர்வீழ்ச்சி இல்லாத இடங்களில் ஆறுகளின் குறுக்கே கல்லணைகளைக் கட்டி உயரத்திலிருந்து ஜலத்தை விழும்படியாகச் செய்து அதனால் சக்கரம் சுழலும்படி சில யுக்திகள் செய்தார்கள். சில தேசங்களில் ஆறுகளே இல்லாமையால் ஜலத்துக்குப் பதிலாக ஜனங்கள் காற்றை உபயோகித்தார்கள். ஒரு விசாலமான பாய்மரத்தை உயரத்தில் கட்டி அதற்கும் யந்திரத்துக்கும் ஒரு சம்பந்தத்தை ஏற்படுத்தினார்கள். காற்று வீசும்போது பாய்மரத்துக்குட் புகுந்து அடியிலுள்ள கல்லைச் சுற்றும்படி செய்யும்.

குதிரைகளைக்கொண்டும் மாடுகளைக்கொண்டும் தங்கள் வேலைகளைக் கவனித்தபோது ஆனசெலவு மிக அதிகம். காற்றையும் ஜலத்தையும் வசப்படுத்திக்கொண்டு அவற்றின் உதவியினால் தங்கள் வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தபிறகு செலவே விசேஷமாக இல்லையென்று சொல்லலாம். எப்பொழுதேனும் சில சமயங்களில் யந்திரங்களைச் செப்பனிடவேண்டியதுண்டு.

முதல் முதலில் ஜனங்கள் மீன்பிடித்தும் வேட்டையாடியுமே ஜீவனம் செய்துவந்தார்கள். நாகரிகம் விருத்தியான பிறகு நிலத்தை உழுது பண்படுத்திப் பலவகையான தானியங்களைப் பயிரிட்டுத் தானியங்களையும் மரங்களைப் பயிராக்கி அவற்றிலிருந்து கிடைக்கும் பழங்களையும் தங்களுடைய ஆகாரங்களுக்கு உபயோகிக்க ஆரம்பித்தார்கள்.

கல்லினால் செய்யப்பட்ட ஆயுதங்களையெல்லாம் நீக்கிவிட்டு இரும்பினால் உபயோகமுள்ள பல ஆயுதங்களைச் செய்துகொண்டார்கள். அவற்றைக்கொண்டு மரத்திலும், தங்கம் வெள்ளி தாமிரம் வெண்கலம் பித்தளை முதலிய உலோ

கங்களிலும் வேலைசெய்து தங்களுக்கு வேண்டிய உபயோகமான பொருள்களைச் செய்துகொண்டார்கள். காட்டில் ஒரு மூலையில் வசிக்காமல், மரத்தினாலும் செங்கல்லினாலும் கருங்கல்லினாலும் வீடுகளைக் கட்டிக்கொண்டு அவற்றில் வசித்தார்கள். வெகுகாலத்துக்குப் பிறகுதான் பருத்தியின் உபயோகம் அவர்களுக்குத் தெரியவந்தது. அதற்குமுன்பு கோடையில் சணல் வஸ்திரங்களையும் குளிர்காலத்தில் கம்பளங்களையும் உபயோகித்து வந்தார்கள். செல்வவான்கள்மட்டும் பட்டினாலும் மகமலினாலும் உயர்ந்த ஆடைகளைச் செய்துகொண்டார்கள். அவர்களுடைய வீடுகளில் விலையுயர்ந்த ஆடையாபரணங்களும் தங்கப் பாத்திரங்களும் வெள்ளிப் பாத்திரங்களும் மேஜை நாற்காலி முதலியவைகளும் இருந்தன. ஆயினும் புகையில்லாமல் சமைப்பதற்கேற்ற அடுப்புக்கள் அக்காலத்தில் கண்டுபிடிக்கப்படவில்லை. அப்போது உள்ள அநேகம் வீடுகளில் புகைபோக்கியே இராது.

அதிகநேரம் ஜலத்தைக் காய்ச்சினால் அது ஆவியாக மாறுமென்பதையும் காற்றில் செல்லுமென்பதையும் ஒரு பாத்திரத்துக்குள் அதிகமான நீராவியிருந்தால் பாத்திரத்தையே உடைத்துவிடுமென்றும் தெரிந்துகொண்டு நீராவியின் சக்தியை உபயோகிக்க ஆரம்பித்தார்கள். முதல் முதல் 1769-ஆம் வருஷத்தில் ஸ்காத்துலாந்திலுள்ள **ஜேம்ஸ்வாட்** என்பவர் நீராவியின் சக்தியை இன்னவிதமாக உபயோகிக்கலாமென்று கண்டுபிடித்தார். அவர் பலநாள் யோசனைசெய்து நீராவியந்திரத்தைச் செய்து காட்டினார். அவருக்கு முன்னே பல ஜனங்கள் அவ்வாறு செய்ய முயன்றும் அவர்களுடைய முயற்சி கைகூடவில்லை. இந்த நீராவியின் பலத்தினாலேயே புகைக்கப்பல்கள் கடலில் ஓடுகின்றன. எத்தனையோ வகையான யந்திரங்கள் ஓடுவதற்கு நீராவிதான் முக்கிய காரணமாக இருக்கின்றது.

சமீபகாலம்வரையில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குப் போவதே மிகவும் கஷ்டமாக இருந்தது. எங்கேபோனாலும் குதிரைகளின்மேலாவது நல்ல சாலைகளிருந்தால் அங்கே வண்டிகளின்மேலாவது போகவேண்டும். அவ்வாறு போவதற்கு எவ்வளவோ காலமும் பிடிக்கும். மலைகளையும் குடைந்து இருப்புப்பாதைகளை அமைத்திருப்பதாலும் எல்லா

இடங்களிலும் நல்ல சாலைகள் போட்டிருப்பதாலும் தாங்கள் போகவேண்டிய இடங்களுக்கு ஜனங்கள் அதிசீக்கிரத்தில் போய்வருகிறார்கள். உலகத்தில் இருப்புப்பாதை செல்லாத பெரிய பட்டணமேயில்லை. முற்காலத்தில் எந்த நகரத்திலாவது ஒரு விசேஷம் நடந்தால் அது மற்ற ஜனங்களுக்குத் தெரிவதற்கு எத்தனையோ மாதங்களாகும். அந்தச் சமாசாரத்தை ஒரு மனிதனே நேரில்போய்ச் சொல்லிவருவான். ஆனால் இப்போது வெகுதூரத்தில் நடக்கும் சமாசாரங்களைத் தபாலின் உதவியினால் சில தினங்களிலும் தந்தியின் உதவியினால் சில நிமிஷங்களிலும் தெரிந்துகொள்ளுகிறார்கள்.

மின்சாரத்தின் உபயோகத்தை நாளடைவில் ஜனங்கள் தெரிந்துகொண்டார்கள். அமெரிக்கா கண்டத்திலுள்ள ஸாமுவல் மார்ஸ் என்பவர் மின்சாரத்தின் உபயோகத்தைத் தெரிந்துகொண்டு அதன் சக்தியினால் கம்பிகளின்வழியாக ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குச் சமாசாரம் அனுப்பலாம் என்பதைக் கண்டுபிடித்தார். ஒரு மனிதன் 1000 மைலுக்கு அப்பால் இருந்தாலும் ஒரு நொடிப்பொழுதில் அவனிடம் சமாசாரத்தைச் சொல்லிவிடலாம். மின்னல் எவ்வளவு வேகமாக ஓடுகிறதோ அவ்வளவு வேகமாகவே தந்திக் கம்பிகளின் வழியே சமாசாரம் ஓடுகிறது. முதலில் நிலத்தில்மட்டுமே சமாசாரங்கள் தந்திக்கம்பிகளின் வழியாகப் போய்க்கொண்டிருந்தன. பிறகு ஒரு கனவான் சமுத்திரத்தின் அடியிலும் கம்பிகளைப் புதைத்துச் சமுத்திரத்துக்குள்ளாகவும் சமாசாரம் செல்லும்படி கண்டுபிடித்தார். அப்பால் இதாலி தேசத்துக் கனவான் ஒருவர் கம்பி இல்லாமலே சமாசாரத்தை அனுப்பக்கூடிய வழியைக் கண்டுபிடித்தார். அது மிகுந்த வியப்பை உண்டாக்கத்தக்க விஷயம். கடலில் ஓடும் கப்பல்கள் சமாசாரங்களைத் தந்திக் கம்பிகளில்லாமலே ஒன்றோடொன்று சொல்லிக்கொள்ளும். கொஞ்சகாலத்துக்குப் பிறகு டெலிபோன் என்னும் யந்திரம் கண்டுபிடிக்கப்பெற்றது. இப்போது அநேக இடங்களில் அது பரவிவிட்டது. மின்சார சக்தியே தந்திக்கும் டெலிபோனுக்கும் காரணமாயிருக்கிறது. மின்சார சக்தியைக்கொண்டு வேறு பல விசித்திரமான காரியங்களை ஜனங்கள் செய்துவருகிறார்கள். பண்டசாலைகளில் அநேக யந்திரங்களை மின்சாரமே ஓட்டுகிறது. மின்சாரத்தை

ஒருவிதமாக உபயோகித்தால் உஷ்ணமும் வேறொருவிதமாக உபயோகித்தால் வெளிச்சமும் உண்டாகின்றன. மற்றொரு விதமாக உபயோகித்தால் வண்டிகளும் யந்திரங்களும் ஓடுகின்றன.



## 11 சித்தார்த்தர் உலகியலறிதல்.

ஒருநாள் அரசகுமாரராகிய சித்தார்த்தருக்கு நகர்வலம் வரவேண்டுமென்ற அவா உண்டாயிற்று. உடனே அவர், தமது சாரதியாகிய **சந்தகன்** என்பவனை அழைத்து, ரதத்தை ஆயத்தம் பண்ணும்படி சொன்னார். இளவரசரது எண்ணத்தை அறிந்த அரசர், அவர் வேண்டுகோளை மறுக்க முயலாது, அவருக்குக் களிப்பை விளைவிப்பனவாகிய காரியங்களைச் செய்தல்வேண்டும் என்று கருதினராய் அதற்கு இசைந்தார். சித்தார்த்தரை நோக்கி, 'புதல்வ! நீ நாளைத்தினம் நகர்வலம் வரலாம்' என்று சொல்லி, அப்பொழுதே அத்தாணி மண்டபத்தின்கண் மந்திரியை அழைத்து, கூன் குருடு செவிடு முதலிய அவயவக் குறையுள்ளவர்களையும், துன்பத்தால் வருந்துவன வற்றையும், இளவரசர் கண்ணிற் படாவண்ணம் வழியினின்று நீக்கும்படி அரசர் கட்டளையிட்டார். மந்திரியும் மன்னவர் கட்டளைப்படியே நகர்முழுவதும் முரசறைவித்தார். வீதிகளெல்லாம் சுத்தஞ்செய்யப்பட்டன. மாளிகைகளெல்லாம் பழுதுபார்க்கப்பட்டு, வெண்சுண்ணம் தீற்றப்பட்டன. பலவித வர்ணங்களாலும் சுவர்கள் அலங்கரிக்கப்பட்டன. தோரண மாலைகள் தெருக்கள்தோறும் விளங்கின. கொடிகள் ஆகாயம் அளாவிப் பறந்தன. வீடுகளிற் பூரண கும்பங்கள் வைக்கப்பட்டன. எல்லா வீதிகளும், வீடுகள் யாவும், மாளிகைகளனைத்தும், எல்லா ஆலயங்களும் நன்கு அலங்கரிக்கப்பெற்றன. நகர் முழுதும் இந்திரலோகத்தை நிகர்த்தது. எங்கும் துளவமாலைகளும் மற்ற மாலைகளும் நறுமணம் வீசிக்கொண்டு விளங்கின. ஆடவரும் பெண்டிரும் மங்கல ஸ்நானஞ்செய்து புத்தாடையும் அணிகலமும் புனைந்து இளவரசனைக் காணுமாறு இமைகொட்டாது நின்றனர். அங்காங்கு வாத்தியங்கள் பல ஒலிக்கவே, அவ்வெளியினிடையே.

'நகர்வாசிகளே! கூன் குருடு செவிடு முதலிய அங்கவீனர் கள் அரசகுமாரரது கண்ணிற்படாது தவிர்க்க; அவர்கள் இரவுவரையில் வெளியில் வரலாகாது. இது அரசர் ஆணை' என்னும் ஒலியொன்று ஒலித்துக்கொண்டிருந்தது. பொழுது புலர்ந்தது. அரசகுமாரரும் நகர்வலம் வருதற்குச் சித்த மானார். தேரும் அரண்மனை வாயிலில் வந்து நின்றது. உடனே அரசகுமாரர் அதன் மீதேறிக் குதிரையை வருத்தாது செலுத்தும்வண்ணம் பாகனுக்குக் கட்டளையிட்டார். தேர் மிக்வும் விரைவாய் உத்தியானவனத்தினை நீங்கி நகரினுள்ளே புகுந்தது.

நகரம் முழுவதும் ஆனந்தக் கடலில் முழுகியிருந்தது. அங்கங்கே வாத்தியங்கள் முழங்கின. யாவரும் மலர்ந்த முகத் துடன் அரசகுமாரரைப் பார்க்கும்பொருட்டு நின்றார்கள். இளவரசரது மதிமுகத்தைக் கண்டவளவில், யாவரும் முக மலர்ச்சியுடன் இளவரசருக்கு ஆசி கூறினார்கள். இவற்றைக் கண்ணுற்றவளவில் அரசகுமாரருக்கு மனமகிழ்ச்சி உண்டா யிற்று. யாவும் சந்தோஷமாக விளங்கின. இவை யனைத்தை யும் பார்த்து நின்ற சித்தார்த்தர், 'இவ்வுலக வாழ்க்கை போற் றத்தக்கதே. சந்தோஷமுடையவைகளைக் காண இம்மனம் எவ்வளவு களிக்கின்றது! என்னுடைய பிரஜைகளைக் காண நான் வெளிப்போந்தமை எனக்கு மிக்க களிப்பை உண் டாக்குகின்றது' என்று சொல்லிக்கொண்டார். இவ்வாறு அவர் திருப்தியடைந்து இருக்கும்பொழுது மலர்ந்த முகத் துடன் சிலர் ஓடிவந்து ரதத்திற் பூட்டியிருந்த பரிகளுக்கு அன்னம் பணியாரம் பழம் முதலியவற்றைத் தின்னக் கொடுத்து, 'ஜய ஜய விஜயீபவ! நம் இளவரசர் புயத்தில் விஜயலட்சுமி வீற்றிருப்பாளாக' என்று வாழ்த்திக் களிமுழக் கம் செய்தார்கள்.

இவ்வாறு எல்லாப் பக்கங்களிலும் பிரஜைகள் ஆரவாரம் செய்யப் பிச்சையெடுத்துண்ணும் ஒரு கிழவன், அவ் வொலியைக் கேட்டுத் தான் வசிக்கும் குடிசையினின்றும் வெளிப்போந்தான். அவனது வெளுத்த மயிரும், குழிந்தாழ் ந்த கண்களும், பல் உதிர்ந்த வாயும், பார்ப்பவர்களுக்கெல் லாம் ஒருவித கருணையையும் பரிதாபத்தையும் உண்டாக்கின. கோலூன்றியும் நடக்கமாட்டாத அவ்வயோதிகனுக்கு முதுகு

வளைந்திருந்தது. சதை என்பது சிறிதும் இன்றி என்புகள் மிகவும் நன்றாக விளங்கின. முகமோ ஆடிக்கொண்டேயிருந்தது. நிற்குங்காலத்தும், அவனால் நேராக நிற்க முடியவில்லை. பற்கள் விழுந்துவிட்டமையால் சொல்லுஞ் சொற்கள் தெளிவாக இல்லை. கண் பஞ்சடைந்திருந்தமையால், எவையும் அவன் கண்களுக்கு மங்கலாகத் தோற்றின. இத்தகைய எளிய கிழவன், கோலூன்றி அசைந்தசைந்து மெல்ல நடந்து, எப்பொழுதும் தனக்கு உண்டாகும் இருமலை நிறுத்த ஒரு கையினால் மார்பைத் தடவிக்கொண்டு வந்தான். அவ்வாறு வந்தவன், அங்கு நிற்பவர்களைக் கண்டு, "ஓ பெரியோர்களே! எளியேனுக்கு ஐயமிடுங்கள். ஏதாயினும் இயன்றதைக் கொடுங்கள். அதனைக் கொண்டு உணவு வாங்கி உண்பேன். இன்றைக்கோ அல்லது நாளைக்கோ போவிருக்கிறது என் உயிர்" என்று கூறினான். க்ஷயரோகம் வருத்தியதனால் அதற்குமேல் யாதொன்றும் சொல்ல அவனுக்கு வன்மையில்லை. கண்ணீர் பெருகிக்கொண்டிருந்தது. இங்ஙனம் அம்முதியோன் இவ்வரசர் செல்லும் நெறியில் வந்து நின்று பிச்சை கேட்டான்.

பிச்சை கேட்டுவந்த கிழவனை யாவரும் கண்டு நகைத்து, "ஏ அறிவிலி! நீ என்னவேலை செய்கிறாய்? அரசகுமாரரைக் கண்டும் நீ இவ்வாறு செய்தல் தகுதியன்று. ஆகவே ராஜவீதியினின்றும் அகன்று உன் குடிசைக்குள்ளே போய்விடு" என்று சொன்னார்கள். அரசகுமாரர் எவ்வாறோ இதனையறிந்து, சாரதியை அழைத்து ரதத்தை நிறுத்துமாறு கட்டளையிட்டார்; அங்கு நிற்கும் ஜனங்களைக் கூப்பிட்டு, அவ்வயோதிகனை வருத்தாதிருக்கும்படி சொன்னார். அவ்வாறு சொல்லித் தமது பாகனை நோக்கி, "அவர்கள் வருத்தும் பிராணி மனிதன்தானோ! நான் இதுகாறும் இத்தகைய மனிதனைக் கண்டதேயில்லை" என்று கூறினார். மேலும் அக்கிழவனுக்கு உண்டான வருத்தம் இன்னதென்பதையும் அவன் "இன்றைக்கோ, நாளைக்கோ" என்று சொல்வதின் பொருள் இன்னதென்பதையும் தமக்குத் தெளிவாகத் தெரிவிக்கும்வண்ணம் அரசகுமாரர் சாரதியைக் கேட்டார்.

"மன்னவ! அவன் மிகவும் வயது முதிர்ந்தவன். அவனுக்கு இப்பொழுது வயது எண்பதுக்கு மேலிருக்கும்.

அவன் முதுகெலும்பு வளையாமல் நேராயிருந்த காலம் உண்டு. நமக்கிருக்கும் ஆற்றலும் வனப்பும் அவனுக்கும் இருந்தன. இப்பொழுதோ அவன் எரிந்து அவியும் விளக்கையும் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துப் பட்டுப்போன மரத்தையும் ஒத்திருக்கின்றான். பட்ட மரத்தினின்று எவ்விதம் யாதொரு பயனும் விளையாதோ, அவ்விதமாகவே அவனால் இவ்வுலகத்திற்கு யாதொரு பயனும் இனி உண்டாகாது. இதுதான் மூப்பு என்பது. இதைக் குறித்துத் தேவரீர் கவலைப் படவேண்டுவதில்லை'' என்று சந்தகன் கூறினான்.

உடனே சித்தார்த்தர் சந்தகனை நோக்கி, ''இம்மூப்பு இவனையன்றி மனையோர்க்கும் வருதல் உண்டோ? அல்லது இவனிடம்மட்டும் உண்டாவதோர் நிலைமையோ? அல்லது இதுதான் ஓர் அற்புதக்காட்சியோ?'' என மனமுளைந்து கேட்டார். ''இவன் ஜீவித்திருக்கும் காலம் எவர்களேனும் வாழ்ந்திருப்பாரேல், அவர்களும் இத்தகைய நிலைமையை அடைவார்கள்'' என்று சந்தகன் கூறலும், அரசகுமாரர் அவனை நோக்கி, ''நானும், இவன் வாழ்ந்திருக்கும் காலம்வரையில் வாழ்ந்திருந்தால், இந்நிலைமைக்கு வரவே வேண்டுமல்லவா? எனது பிரிய நாயகியாகிய யசோதரையும், இந்த வடிவத்தை அடையவே வேண்டுமல்லவோ? நீயும், இந்நிலையை அடைவாயல்லவா?'' என்று கேட்டார். ''ஐயா! யாவரும் இந்த நிலைமையை அடைவோம்'' என்று சந்தகன் மறுமொழி கூற அரசிளங்குமரர், ''ரதத்தைத் திருப்பி அரண்மனைக்குச் செலுத்துக. நான் சிந்தக் காட்சியைப் பார்க்கக் கூடாதென்று இருந்தேனே, அதனையே கண்ணுற்றேன்'' என்று சாரதியை நோக்கிக் கூறினார்.

பிறகு அரண்மனையை அடைந்த சித்தார்த்தர், அன்றுமுதல் ஊண் உறக்கமின்றி, தாம் கண்ட தோற்றத்தை நினைந்து நினைந்து மனங்கசிந்து, ''இம்மூப்பாகிய துயரக்கடலை நீந்தற்குத் தக்க சாதனம் யாது?'' என்று நினைப்பாராயினர். எப்பொழுதும் அவர் மனம் இந்தச் சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தது. ஒருநாள் அவருடைய கனவில் ஒரு தேவதூதன் தோன்றி, ''மூப்பெனும் பிணியைத் தீர்த்தல் உனது கடன்; மூப்பெய்திய காலத்தும் வருத்தந் தோன்றாது இன்பம் தகரு

மாறு செய்தலும் நினது கடன்" எனக் கூறி மறைந்து போனான்.

சிலநாள் சென்றபின், இளவரசர் தம் தகப்பனாருக்குத் தாம் மீட்டும் நகர்வலம் வர நினைத்திருப்பதைத் தெரிவித்த தன்றி. நகரிலுள்ளாரை உள்ளபடி அவரவரிருக்கும் உண்மை நிலைமையிலேயே தாம் காணும்வண்ணம் தமக்கு உத்தர வளிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார் அரசர், தம் புதல்வரை அவர் இஷ்டப்படி விடுவதனால், அவர் இவ்வுல கத்துள்ள பல்வேறு வகைப்பட்ட துயரத்தையுங் கண்டு, அவையனைத்தும் இவ்வுலகத்திற்கு இயல்பென அறிவாரென் றெண்ணி, அங்ஙனமே செய்யும்படி உத்தரவளித்தார்

மறுநாள் அரசகுமாரரும் சந்தகனும் மீட்டும் உலகிய லறிய வெளிப்போந்தார்கள் அரசகுமாரர் வணிககோலங் கொண்டு புறப்பட்டார். சந்தகன் அவ்வணிகரது வேலைக் காரனாகக் கிளம்பினான் இருவரும் நான்கு வருணத்தாரும் இருக்கும் வீதிகளைக் கடந்து சென்று ஆவணத்தை அடைந் தார்கள். அங்கே காணக்கூடிய காட்சிகளையெல்லாம் கண் ணுற்று, ஆவணத்தைக் கடந்து செல்லுங்கால், கொடிய பிணி யால் வருந்தும் ஒரு பிணியாளனைப் பார்த்தார்கள் அவன், மிக்க மனவருத்த முடையவனாய், "எனக்கு அதிக வருத்தத் தைக் கொடுக்கின்றது இந்நோய். இதனை ஒழிப்பார் எவ ரேனும் உளரோ?" என யாவரையும் மன்றாடிக் கேட்டான். அவனைத் தனியே வருந்துமாறு விட்டு யாவரும் விலகினார் கள் விலகின அளவில், மிகுந்த வருத்தத்துடன் எழுந்து அவன் நடக்க முயன்றான் எழ முடியவில்லை: எழுவான்; கீழே விழுவான். இவ்வாறு வருத்தமுறுவது கண்டு, அர சிளங்குமார், பொறுக்கலாற்றாது அவனருகில் விரைந்து சென்று, அவனை அன்போடும் எடுத்தணைத்து இன்சொல் கூறி, அவனைத் தேற்றி, "ஐயா! உன்னுடைய வருத்தம் யாது? எழக்கூடாத காரணம் யாது?" என்று வினவினார். அதற்கு விடையளிக்க நோயாளியால் முடியவில்லை. அதன்மேல் தம்முடைய தேர்ப்பாகனாகிய சந்தகனை நோக்கிச் சித்தார்த் தர், "இவனுக்கும் வருத்தம் யாது? யாவரும் இவனை அருகி நெருங்கவொண்டிடக் காரணம் என்ன? உதவிபுரியும்படி அவர்களை

இவன் வேண்டியும், யாரும் உதவிபுரியாமற் பின்வாங்குவ தேன்?" என வினவினார்.

"ஐய! இவனை வருத்துவது ஒரு கொடிய நோய். அவ னருகில் செல்பவர்களையும் விரைவில் அது பற்றிக்கொள் ளும். அதனாலேதான் யாரும் அவனுக்கு உதவிபுரியாது அஞ்சி விலகுகின்றனர். தேவரீரும் அவனருகில் செல்லுதல் தகுதியன்று. சென்றால் அக்கொடிய வியாதி தேவரீரையும் பற்றிக்கொள்ளும். அவனருகிற் செல்லாது விலகிச் செல் லுமவண்ணம் தேவரீரைக் கேட்டுக்கொள்ளுகின்றேன்" என்று சந்தகன் புகன்றான்.

"சந்தக! பரந்த இந்த நிலவுலகின்கண் இந்நோய் இவன் ஒருவனைமட்டுமே வருத்துகின்றதா? அல்லது ஏனையோர்களை யும் வருத்துகின்றதா?" என்று அரசகுமாரர் கேட்டனர்.

"ராஜாதிராஜ! இவ்வுலகின்கண் இருப்பது இந்நோய் ஒன்றே அன்று. ஏனைய நோய்களும் பல உள. அவை இவன் ஒருவனையேயன்றி வேறு பலரையும் வருத்துகின் றன" என்று சந்தகன் பகர்ந்தான்.

இங்ஙனம் கூறிய சந்தகனை நோக்கி, "நோய் எவரையும் வருத்தும் என்றாய். ஆகவே நானும் நீயும் யசோதரையும் அதற்கு உட்படுவோம் அல்லவா?" என்று சித்தார்த்தர் கேட்டார்.

"ஐய! வியாதி எவரையும் விடுவதில்லை. இன்னகாலத்தில் அது வருமென்பதும் ஒருவருக்கும் தெரியாது. அது நொடிப் பொழுதிலும் வரும்; நொடிப்பொழுதிலும் நீங்கும். அரவத் தைப்போல் தீண்டி அது பாகங்களை அழிப்பினும் அழிக்கும்; அல்லது, மின்னலைப்போல தோன்றி மறையினும் மறையும். எளியோர் வலியோர் என்ற வேறுபாடின்றி யாவரையும் அது வருத்தும்" என்றான் சந்தகன்.

"ஆகவே, எவரும் மனக்கவலையுடன் அஞ்சியே வாழ வேண்டியவர்களாய் இருக்கின்றனர். அவர்கள் அங்ஙனம் அஞ்சிக் கவலையுடன் நெடுநாள் வாழ்ந்திருப்பின், அன்று நாம் கண்ட எளியவனைப்போல, மூப்படைந்து வயோதிக ராகின்றார்கள். ஒருவன் மூப்படைவதற்குள், நீ கூறிய வித்

மாக அவனை வருத்துவனவாகும் பல பிணி!" என்று அரச குமாரர் பெருமூச்செறிந்தார்.

"ஐய! இது மாத்திரமன்று. வயது முதிர்ந்து இறக்கும் உயிர்களும், முதிர்வதற்கு முன்னரே சிறு வயதிலேயே இம் மண்ணுலகை நீங்கும் உயிர்களும் பல உள. மேலும் குழந்தையா யிருக்கும்பொழுதே மரணம் அடைதலும் உண்டு. கருப்பைக்குள் முட்டையா யிருக்கும்பொழுது அழிவனவும் பல உள" என்றான் சந்தகன்.

இவ்வாறு சந்தகன் கூற, மரணம் என்பதனை அரசகுமாரர் அறியாதவராதலின், "மரணம் என்பதென்னை?" என்று வினவ, அப்பொழுது அவ்வழியே சுடலைக்குக் கொண்டு போகப் படுவதொரு சவத்தைச் சந்தகன் காட்டி, "இது பிணம், இதுதான் மரணம் அடைந்தவனது உடலாகும். இதனைக் கொளுத்தும்பொருட்டே சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்லுகின்றார்கள்" என்றான். அரசிளங்குமரர், "சந்தக! யானும் இறக்கவேண்டுமோ? நீயும் சாவையோ? இதுபோலவே என்றந்தை யசோதரையும் இறக்கத்தான் வேண்டுமோ?" என்று துக்கத்துடன் வினவினார். அதற்கு "ஆம் மனிதராய்ப் பிறந்த யாவரும் என்றைக்கேனு மொருநாள் இறக்கவேவேண்டும்" என்றான் சந்தகன்.

இதனைக்கேட்ட சித்தார்த்தர், கண்ணீர் சொரிந்து மிக்க மனவருத்த முற்றவராய், இத்துயரக் கடலினின்றும் தப்பிப் பிழைக்க நாவாய் தேடுபவரைப்போல, மண்ணையும் விண்ணையும் பன்முறை பார்த்தனர். முடிவில் அவர், "நாம் பார்க்க வேண்டியவைகளை யெல்லாம் பார்த்துவிட்டோம்; இனி அரண்மனைக்குச் செல்லலாம்" என்று கூறிச் சந்தகனை உடன் கொண்டு தம்மிருப்பிடம் சென்றார்.



## 12. பிரிட்டிஷ் ராஜ்யம்.

பிரிட்டிஷ் தீவுகளும் வேறு பல தேசங்களும் அடங்கிய பிரிட்டிஷ் ராஜ்யத்தை ஆங்கிலேய சக்கரவர்த்தியான நமது ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் ஒரு குடைக்கீழ் ஆண்டுவருகிறார். இந்த ராஜ்யம் பூமியின் முழு விஸ்தீரணத்தில் ஐந்திலொரு

பங்குகொண்டது. ராஜ்யம் முழுவதும் ஒரே இடத்தில் இராமல் பற்பல இடங்களில் பரவியிருக்கிறது. ராஜ்யத்தைச் சேர்ந்த தேசங்களுள் ஒன்றற்கும் மற்றொன்றற்கும் எத்தனையோ விஷயங்களில் வேறுபாடுகளுண்டு. ஒரு தேசத்தில் வழங்கிவரும் பாஷை ஒன்றாகவும் வேறொரு தேசத்தில் வழங்கி வருவது வேறொன்றாகவும் உள்ளன. ஒரு தேசத்தில் குளிர்ச்சி அதிகமாகவும் வேறொரு தேசத்தில் உஷ்ணம் அதிகமாகவும் இருக்கும். ஒரு தேசத்தில் ஜனத்தொகை அதிகமாகவும் வேறொரு தேசத்தில் குறைவாகவும் இருக்கும். ஒரு தேசம் வளம்பெற்றிருக்கும் மற்றொன்று வளங்குன்றியும் இருக்கும். பாலைவனங்களும் ஜனங்களை நடந்துபோக முடியாத அடர்ந்த காடுகளும் பலவகையான மரங்களும் ஜந்துக்களும் நிறைந்த கிராமங்களும் பட்டணங்களும் சில தேசங்களில் உள்ளன. ஆனால் பிரிட்டிஷ்காரர்களுக்குச் சொந்தமான ஒவ்வொரு தேசத்திலும் முக்கியமான இடங்களில் மூன்றுவகையான நிறங்களமைந்த ஐக்கியக்கொடி அசைந்துகொண்டிருக்கும். ஒவ்வொரு தேசத்தின் நிலைமையும் அவ்வவ்விடத்தின் சீதோஷ்ணத்திற்கும் நில அமைப்பிற்கும் தக்கபடியிருக்கிறது.

ஐரோப்பா கண்டத்தின் மேற்கில் இருக்கும் நான்கு நாடுகளில் உள்ள ஜனங்கள் பிரிட்டிஷ்காரர்கள் என்னும் ஒரே பெயரால் வழங்கப்படுகிறார்கள். அந்நான்கு நாடுகளாவன, இங்கிலாந்தும் வேல்ஸும் ஸ்காத்துலாந்தும் அயர்லாந்தும் ஆகும். மேலே சொன்ன இந்த விசாலமான ராஜ்யத்தைப் பிரிட்டிஷ்காரர்களே ஆண்டுவருகிறார்கள். இந்த ஜனங்கள் தங்கள் சுதேசத்தை விட்டுப் பிரிந்து கடலைக்கடந்து வெகு தூரத்துக்கு அப்பாலுள்ள கன்னடா, ஆஸ்திரேலியா, தென் ஆபிரிகா முதலான தேசங்களில் நிலைபெற்று வசிக்கிறார்கள். அவர்கள் அவ்வாறு வெளியிடம் போனதற்குச் சுதேசத்தில் அவர்களுக்கு இடம் பற்றாமையே காரணமாகும். அயலிடங்களுக்குப் போய் இருந்தாலும் அவர்களுக்கும் சுதேசிகளுக்கும் ஒற்றுமை விசேஷமாக இருப்பதே அவர்களுடைய ராஜ்யத்தின் பெருக்கத்துக்கு முக்கிய காரணமாகும். எல்லோரும் ராஜ்யம் விருத்தியாகவேண்டும் என்னும்

கருத்தை மேற்கொண்டு ஒத்தமன முடையராயிருத்தலால் ராஜ்யம் சின்ன பின்னப்படாமல் இருந்துவருகிறது அவர்கள்பாலுள்ள இந்தக் குணத்தை நாமும் கற்றுக்கொண்டு நம்முடைய தேசத்தின் அபிவிருத்தியின்பொருட்டு மிகவும் உழைக்கவேண்டும் ஜீவனத்தின்பொருட்டுத் தூரதேசத்திற்குப் போய் உழைக்கும் இந்தியர்கள் யாதொரு வருத்தமும் கவலையும் அடையாமல் மனமகிழ்ச்சியுடன் சௌக்கியமாய் இருந்து வருவதற்கேற்ற வழிகளையெல்லாம் முன்யோசனையுள்ள பல இந்திய கனவான்கள் கவனித்துவருகிறார்கள்

மனிதனாய்ப்பிறந்த ஒவ்வொருவனும் செய்யவேண்டிய கடமைகள் பல பிரிட்டிஷ் ராஜ்யத்தின் பிரஜையாக இருப்பவன் பிரிட்டிஷ்காரர்களிடம் அன்புபாராட்டி அவர்களுடன் ஒத்து உழைத்துவருதல் முதன்மையான கடமையாகும். அவர்களுடைய நண்பர்களைத் தனது நண்பர்களாகவும் அவர்களுடைய சத்துருக்களைத் தன்னுடைய சத்துருக்களாகவும் கருதவேண்டும்

இவ்வளவு பெரிய ராஜ்யம் தங்கள் வசமாவதற்குப் பிரிட்டிஷ்காரர்கள் செய்த முயற்சிகள் மூன்றுவிதமானவை: அவற்றுள் யுத்தம்செய்து வெற்றிபெற்றது முதலாவதாகும்.

வெற்றியென்றால் பகைவர்களோடு போர்புரிந்து அவர்களுடைய நாட்டைக் கைப்பற்றிக் கொள்வதாம் ஒரு தேசத்தை ஜயிப்பதற்காகவோ பகைவர்களை வென்று சுவாதீனத்தை ஏற்படுத்திக் கொள்வதற்காகவோ ராஜ்யத்தில் யுத்தங்கள் நேரிடுவதுண்டு. சென்ற ஒரு நூற்றாண்டிற்குள் பிரிட்டிஷ்காரர்கள் பல தேசங்களை ஜயித்துத் தங்கள் வசமாக்கிக்கொண்டார்கள். முன்பு நாட்டில் வசித்த ஜனங்களுக்கு விசேஷமான துன்பத்தைக் கொடுத்துக்கொண்டும் தங்களுடைய வியாபாரத்தைக் கெடுத்துக்கொண்டும் வந்த ஜனங்களுடைய கர்வத்தையும் பலத்தையும் குறைக்கும்பொருட்டே அவர்கள் பல தடவைகள் யுத்தங்கள் செய்தார்கள். எல்லா யுத்தங்களிலும் அவர்களே ஜயம்பெற்றுப் பல இடங்களைத் தங்கள் வசமாக்கிக்கொண்டார்கள்.

ராஜ்யாதிகாரத்தை விருத்தி செய்யும்பொருட்டு அயலிடங்களுக்குச் சென்று புதிய நகரங்களை ஸ்தாபித்துக்கொண்டு

அவற்றில் குடியேறி நிலைத்திருப்பது இரண்டாவது வழியாகும். மூன்றாவது வழியைக்காட்டிலும் இது மேலானது. ஒரு குடும்பம் விருத்தியாவதைப்போல் நாளடைவில் ஒரு தேசத்தின் ஜனத்தொகை மிகவும் அதிகமாகிறது. அந்த ஜனங்களுக்குச் சொந்த தேசத்தில் பிழைப்புக்கு இடமில்லாமற்போவதால் அவர்கள் அன்னிய தேசங்களுக்குப் போகும்படி நேரிடுகிறது. இம்மாதிரி ஜனத்தொகை விருத்தியாகிவரும் நகரங்கள் இங்கிலாந்தில் பல உண்டு. ஆதலால் அங்கேயுள்ளவர்கள் வெளியிடங்களுக்குச் சென்று பலவகைத் தொழில்களிலும் தங்களுக்குள்ள திறமையை அங்கே வெளிப்படுத்தி மேன்மையடைவதோடு அங்கேயுள்ள ஜனங்களுக்கும் தங்கள் தொழிலைக் கற்றுக்கொடுத்து முன்னுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். இதுவரையில் இங்கிலாந்தைவிட்டு அயலிடங்களுக்குச் சென்று குடியேறின ஜனங்களின் தொகை மிக அதிகம். இன்னமும் போய்க்கொண்டுதான் இருக்கிறார்கள். அதனால் முன்பு ஜனங்களே இல்லாத இடங்களும் ஜனங்கள் மிகவும் குறைவாயுள்ள இடங்களும் பின்பு ஜனநெருக்கமுள்ள பிரதேசங்களாக மாறிவிடுகின்றன. இந்தப் புதிய இடங்களையெல்லாம் பாதுகாத்துவருவது பிரிட்டிஷ்காரர்களுடைய பொறுப்பாக இருக்கிறது. முன்பு பாலைவனமாக இருந்த இடங்களெல்லாம் இப்போது செழிப்பான பிரதேசங்களாக மாறி ஜனங்கள் நிறைந்துள்ளன. அடர்ந்த காடுகளையெல்லாம் அழித்து அளவற்ற ஜனங்கள் அங்கே சௌக்கியமாகவந்து வசிக்கும்படி பிரிட்டிஷ்காரர்கள் அவற்றைச் சிறந்த நகரங்களாகச் செய்துவிட்டார்கள்.

3. வியாபாரம்: மூன்றாவது முறையாகும். ஆங்கிலேயர்களுடைய ராஜ்யம் மிகவும் விருத்தியானதற்கு அவர்களுடைய வியாபாரந்தான் முக்கியமான காரணம். உலகத்தில் ஆங்கிலேய வியாபாரிகள் இல்லாத பாகமும் ஆங்கிலேயர்களுடைய கப்பல்கள் ஓடாத கடலும் இல்லை. தங்களுடைய வியாபாரப் பொருள்களை இன்ன இடத்தில் அதிகலாபத்துக்கு விற்கலாம் என்றும் அவற்றை இன்ன இடத்திற் குறைந்த விலைக்கு வாங்கலாம் என்றும் வியாபாரிகள் கவனிப்பது வழக்கம். அவ்வாறு தகுதியான இடங்களைக் கண்டறிந்து அவற்றில் பண்டசாலைகளை அமைத்துக்கொண்டு வியாபாரத்தைச் செவ்வையாக நடத்தி

விசேஷமான திரவியத்தைச் சம்பாதிக்கிறார்கள். பிறகு அவ்விடங்களை அரசாங்கத்தாருடைய அனுமதியின்மேல் விலைக்கு வாங்கித் தங்களுடைய பாதுகாப்புக்காகக் கோட்டைகள் கட்டிக்கொண்டு அங்கே சேனைகளையும் வைத்துக்கொள்ளுகிறார்கள். ஆயினும் அன்னியர்களினாலாவது சுதேசிகளினாலாவது அவர்களுடைய வியாபாரத்துக்குப் பங்கமும் பாதுகாப்புக்குக் குறைவும் உண்டானால் எல்லாவிதமான இடையூறுகளையும் அரசர்கள் கவனித்து நீக்கவேண்டும்.

ஆனால் அரசர்கள் கவனிக்கத் தவறிவிட்டால் குடியேறின வியாபாரிகளே அந்த வேலையை மேற்கொண்டு நாளடைவில் தேசத்துக்கு அதிபதிகளாவார்கள். இந்த முறையை மேற்கொண்டு ஆங்கிலேயர்கள் ஜயித்த தேசங்களுள் இந்தியா ஒன்றாகும்.

புல்லே முளைக்காத பாறை நிலங்களை ஆங்கிலேயர்கள் மிகவும் கவனமாகப் பாதுகாத்துவருகிறார்கள். அந்த இடங்களில் பல, கப்பல்கள் செல்லும் மார்க்கத்திலிருப்பதால் அங்கே பலமான கோட்டைகளைக் கட்டி அவற்றின்மேல் பீரங்கிகளை வைத்திருக்கிறார்கள். ஆங்கிலேயருடைய வியாபார விருத்திக்கு இதுவும் ஒரு காரணமாகும்.

பிரிட்டிஷ் ராஜ்யம் இவ்வாறு பரவியிருப்பதில் நமக்கு விசேஷமான அனுகூலம் உண்டு. நமக்கு வேண்டிய பதார்த்தங்களெல்லாம் நம்முடைய இடத்திலேயே கிடைப்பதில்லை. அயல் தேசங்களிலிருந்தே வரவேண்டும். நாம் நேரில் அந்த இடங்களிலிருந்து அவற்றை வருவிப்பதற்குப் பதிலாக அங்கங்கேயுள்ள நம்முடைய ராஜ்யபாகங்கள் அவற்றை நமக்கு அனுப்பிவருகின்றன. நம்முடைய தேசத்திலேயே வசிப்பதற்கு நமக்கு இடமில்லாமற்போனால் பிரிட்டிஷ் ராஜ்யத்தின் வேறொரு பாகத்துக்குப் போய் நாம் கவலையின்றி வசிக்கலாம். வேறொரு ராஜ்யத்துக்குப் போவோமானால் அவ்வளவு அனுகூலம் நமக்கு ஏற்படாது. அல்லாமலும் வேறொரு ராஜ்யத்தின் அபிவிருத்திக்காக நாம் மிகவும் உழைக்கவேண்டிவரும்.

'நம்மால் ராஜ்யத்துக்கு என்ன நன்மை ஏற்படும்?' என்று சிலர் நினைக்கலாம். நம்முடைய ராஜ்யத்தைப்பற்றி ஒன்றுமே

தெரியாத ஜனங்களுக்கு நமக்குத் தெரிந்த எல்லாவிஷயங்களை யும் எடுத்துரைத்து நம்முடைய தேசத்தை விருத்திக்குக் கொண்டுவரலாம். நாம் நன்றாக உழைத்துப் பூமியைப் பண் படுத்திப் பயிரிட்டால் விளைபொருள்களை மிகவும் சுலபமான விலைக்கு விற்கலாம். ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமாக ஆயி ரக்கணக்கான புகைக் கப்பல்கள் இருக்கின்றன. ஒரு தேசத் துக்கு அபாயம் நேரிடும் காலங்களில் இந்தக் கப்பல்கள் பாது காக்கின்றன. புதிதாக ஒரு தொழிலைச் செய்ய எண்ணினால் அதற்கு வேண்டிய திரவியம் ஒருவனிடத்திலே கிடைப்பது அருமை. ஆதலால் ராஜ்யத்திலுள்ள செல்வரொன்களெல் லோரும் சேர்ந்துகொண்டு விசேஷமான முதல்வைத்து ஆலோ சனைசெய்து வியாபாரத்தை நன்றாக விருத்திசெய்து வருகிறார் கள். அதனால் ஆங்கிலேயர்களுடைய சொந்த தேசத்துக் கும் மற்ற இடங்களுக்கும் ஒருவிதமான சம்பந்தம் ஏற்படு கிறது. ராஜ்யமும் விருத்தியடைகிறது.



# 13. சித்தார்த்தர் கனவு: அழைக்கப் பட்டமை.

சந்தகனுடன் திரும்பிய சித்தார்த்தர் வெகுநாள்வரையில் அரண்மனையில் இருந்தே, தாம் முன்பு கண்டவைகளைக் குறித்து மீட்டும் மீட்டும் சிந்திப்பாராயினர். ஒருவேளை, "இவ் வுலகத்தில் ஏன் இவ்வளவு துக்கமும் துன்பமும் இருத்தல் வேண்டும்? அவற்றைச் சிறிதாயினும் தவிர்த்தல் கூடாதா?" என நினைப்பார். மற்றொரு வேளை, "இவ்வுலகத்தில் ஏன் இத் தனை நோயும் குறையும் இருத்தல்வேண்டும்? அவற்றைச் சிறி தாயினும் நீக்கக்கூடாதா?" எனச் சிந்திப்பார். மற்று மொரு வேளை, "எவரும் இறக்குங்கால் ஏன் சாக்காட்டிற்கு அஞ்சல் வேண்டும்? ஏன் அதனை எவரும் பயத்துடன் அடையல் வேண்டும்? அதனைச் சந்தோஷத்துடன் ஏன் அடைதல் கூடாது? இவ்வுலகத்தைச் சிறிதாயினும் நற்கதி யடையச் செய்தல் என்னால் இயலுமா?" என ஆலோசிப்பார்.

இங்ஙனம் பலவாறு யோசித்திருக்கையில் அவர் ஒரு கனவு கண்டார். அக்கனவிலே ஒரு தேவதூதன் தோன்றி,

"காலம் நெருங்கிற்று. உனக்கு இரண்டு துறைகள் இருக்கின்றன. இவ்வில்லற வாழ்க்கையிலிருந்து பெண்டிர் பிள்ளையுடன் இன்பாக துய்த்து, வீரக்கழல் புனைந்து, வாகைமாலை சூடி, செல்வத்திலும் வெற்றியிலும் நிகரற்ற ஸ்ரீராமபிரானைப் போன்று, செங்கோல் செலுத்தும் தன்னிகரில்லாச் சக்கரவர்த்தியாக இருத்தல் ஒன்று. இவ்வில்லற வாழ்க்கையை நீத்து மனைவி மக்களையும் துறந்து, தனக்குரிய அரசு கைவிட்டு, செல்வக் களியாட்டயராது, யாவற்றையும் ஒழித்து, பிணி மூப்பு சாக்காடு ஆகிய இவற்றை எய்தியவர்களுக்கு உதவி புரியும் வண்ணம் தனியே ஓர் எளிய பிக்ஷுவின கோலங் கொண்டு செல்லுதல் மற்றொன்று. இவ்விரண்டனுள் ஏதேனு மொன்றை நீ விரும்பி மேற்கொள்ளுதற்கு இதுவே நற்சமயம். இச்சமயம் தவறினால் எச்சமயமும் இனி வாய்க்காது. ஆகவே ஒரு முடிவிற்கு வருதல் தகுதி" என்று சொன்னான். இவ்வாறு மூன்று முறை கனவுகண்டார். ஒவ்வொரு முறையும் தேவதூதனது வாக்கு அவர் செவியில் நன்றாகப் பட்டது. ஒவ்வொரு கனவிலும் அநேக ஆண் பெண் என்னும் இருபாலாரும் துன்பப படுகுழியில் விழுந்து வருந்துவதை நோக்கினார். ஒவ்வொருவரும் அவரையே கண்ணெடுத்துப் பார்ப்பாராயினர். அவ்வாறு பார்த்ததமை அத்துன்பப படுகுழியி னின்றும் காப்பாற்ற வல்லவர் அவரே எனக் கூறுவது போலவும், காப்பாற்றும்வண்ணம் அவரிடம் மன்றாடுவது போலவும் தோன்றிற்று.

பின்னர் இளவரசர் துயிலொழிந்து டண்மேல் விழுந்து கைக்கூப்பிக்கொண்டு எழுந்து நின்று, "ஐயனே! எல்லாம் வல்ல ஈசனே! அருளாழியே! உனது திருவுள்ளம் எப்படியோ அப்படியே நடக்கச் சித்தனாகவிருக்கிறேன். எல்லாவற்றையும் நீத்து, நீ கூறியாங்கு, எளியவர்களுக்கு உதவிபுரிய வருகின்றேன்; வருகின்றேன்" என்று பலவாறு கூறினார்.

சத்தமுண்டானால் யசோதரை எழுவாளென நினைத்துச் சிறிதேனும் ஓசைப்படாமல் எழும்பினார். தமது அருமைக் காதலியையும் புதல்வனையும் முகமெடுத்துப் பார்ப்பின், அவர் கள்மாட்டுள்ள அன்பானது தாம் இனி ஏற்றுக்கொள்ளக்கருதிய கோலத்தை ஏற்கவொட்டாமல் தவிர்க்குமென நினைத்து, அவர்களைப் பாராமலே வெளியே சென்றார். தம் அருமை

மனையை நீத்துக் குதிரைகள் நிற்கும் இடத்துக்கு வந்து, அங்கு நித்திரை செய்துகொண்டிருந்த தமது பாகனாகிய சந்தகனை எழுப்பி, காந்தகம் என்னும் குதிரையைக் கொண்டு வருமாறு உத்தரவளித்தார் "நான் நெடுந்தூரம் பிரயாணம் செய்ய வெண்ணி வெளிப்போவதனால், திரும்பிவர அநேக நாட்கள் செல்லும்" என்று அரசகுமாரர் சொல்லவே சந்தகன் "ஐய! இந்த நள்ளிரவில் தேவரீர் தனியே செல்லக் கருதியது எவ்விடமோ?" எனப் பணிவுடன் வினவினான்

இளவரசர், "நான் இந்த உலகத்தில் இருப்பவர்களைக் காப்பாற்றுமாறு போகின்றேன் மெய் என்பது இன்ன தெனவும் உண்மைநெறி இன்னதெனவும் அறிய நான் செல்லு கின்றேன் ஐயன் அழைக்கின்றதனால், என் மனைவி மக்கள் தந்தை தாயார் முதலானவர்களையும், இனியானடைதற்குரிய நாட்டையும் விட்டுப் போகின்றேன் நான் அத்தன் கட்டளைக்குப் பின்வாங்குவது கூடாது குதிரையை விரைவிற் கொண்டுவருக" என்றார்

இளவரசரது நோக்கத்தை மாற்றச் சந்தகன் பலவாறு முயன்றும் அவனால் அது முடியவில்லை. சந்தகன் கூறிய மொழியுள் ஒன்றேனும் அரசகுமாரரது செவியிற் புகவில்லை அவர் கொண்ட கருத்து, பசுமரத்து அறைந்த ஆணிபோல, அசைக்கக் கூடாததா யிருந்தது அவர் புலனுக்குப் பட்டன வெல்லாம், ஐயன் கட்டளையும், பிறவுயிர்க்கு நன்மை நாடுதலுமே சந்தகன், தான் எவ்வளவு முயன்றும், அவையனைத்தும் பயன்படாமை கண்டு, மிகவும் நொந்த மனத்தினனாய், குதிரையைக் கொணர்ந்து நிறுத்தினான் இளவரசர் அதன்மீ தேறி நடத்தினார் சந்தகனும் அவரைப் பின்தொடர்ந்தான்.

நெடுந்தூரம் குதிரை ஊர்ந்து சென்றது அரசகுமாரர், ஓரிடத்தில் அதனை நிறுத்தி, அரச சின்னங்களாகத் தாம் அணிந்திருந்த ஆடையாபரணங்களைக் களைந்து சந்தகனிடங் கொடுத்து, "என் தந்தையிடஞ் சென்று என்னை மறக்குமாறு பன்முறை நான் வேண்டியதாகக் கூறுக நான் இவ்வில்லற வாழ்க்கையை நீத்து இவ்வகன்ற புவியிலுள்ள பலகோடி ஜீவராசிகளும் நற்கதியடையும் வழியைத் தேடிச் செல்லுகின் றேன். என்னைப் பெற்று வளர்த்தவர்மாட்டும், மனைவி

மக்கள்மாட்டும் எனக்குள்ள அன்பு எக்காலத்தும் ஒரே தன்மையதா யிருக்கும். இனி நான் அரசுபுரிய வரமாட்டேன். நான் அரசுக் குரியனுமல்லேன். நான் இப்பொழுது ஐயமேற்றுண்ணும் ஓர் எளியவன். நன்மைக்கும் உண்மைக்கும் சாதனமான நெறியையும், நிலையான சுகத்திற்கு வழியையும் அறிந்தன்றி, நான் மீண்டுவாரேன். இவ்வுலகத்துள்ளோரைக் காப்பாற்றுமாறே நான் யாவற்றையும் துறந்து செல்லுகின்றேன் இவ்வுலகத்தார் பாவத்தினின்றும் வருத்தத்தினின்றும் நீங்கும் நெறியைத் தேடலே எனது கடமை. இனி நீ காமதியாது செலவுபெற்றுப் போகலாம். உனக்குப் பன்முறை வந்தனம் செய்கின்றேன்" என்று கூறினர். சந்தகன் யாதுசெய்வான்? இளவரசர் சொல்லை மறுத்தற்கஞ்சி ஒன்றும் பேசாது போனன்.

அப்போது சித்தார்த்தருக்குப் பிராயம் முப்பது. அவர் பின்பு ராஜக்கிருகம் என்னும் கானகத்தில் நெடுந்தூரம் தனியே திரிந்து, காட்டுமிருகங்களுடன் பழகி வாழ்ந்து வந்தார். அப்பால் விலங்குகளையும் விட்டு விலகித் தனியாக இருந்து தீர்க்காலோசனை செய்வாராயினர். அவர் துவராடையை யுடுத்துக்கொண்டு அன்புபாராட்டி மனிதர் தம்பால் கொடுப்பதை உண்டிருந்தார். அந்நாட்டு ஜனங்கள் அவரது மலர்ந்த முகத்தையும், இனிய வசனத்தையும், கம்பீரமான தோற்றத்தையும், பிறர்மாட்டு அவர் பாராட்டும் அன்பையும், அருளையும், பிறர் வருத்தமுறுவதைக் கண்டு அவர் வருந்துவதையும் பார்த்து, அவரை மிகவும் கொண்டாடினர்கள்; அவர் எல்லாவற்றையும் முனிந்த முனிவரெனக் கொண்டார்கள். அவர், தாம் காண நேரிடும் துறவிகளிடமெல்லாம் பேசி, அவர்கள் அறிந்ததைத் தமக்கும் அறிவிக்கும்வண்ணம் மன்றாடுவார். அவர் பேசிய துறவிகளெல்லாம், உண்ணுவிரதம் பூண்டு உடலை மெலிவித்தலும், அதுபோல் உடலுக்கு வருத்தத்தைக் கொடுக்கத் தக்கவையுமே நற்கதி யடைதற்கு நெறியாகுமென்றார்கள். அவர்கள் கூறியதைக் கேட்ட சித்தார்த்தர் புன்னகை செய்து, "இவ்வுலகத்துள்ளோர் யாவரும் இவர்கள் கூறியபடி நடப்பார்களாயின், துன்பமும் துக்கமும் அதிகரிக்குமேயன்றிக் குறைவதற்கு வழியில்லை. ஆனால் இறைவன் கட்டளையோ வருத்தத்தை நீக்கவேண்டுமென்பது;

இக்காயமோ ஒரு வீடாகும். இவ்வுயிரோ அவ்வீட்டினுள் வசிக்கும் மனிதனும். இக்காயத்திற்கு யாதாயினும் வருத்தம் உண்டாகும்படியான தொழில் செய்யின், அது வீட்டின் கதவையும் சாளரங்களையும் உடைத்தல்போலாகும். அங்ஙனம் வீட்டை உடைத்துத் தள்ளுவதனால், அதனுள் வசிக்கும் மனிதனுக்கு யாது நன்மை உண்டாகும்? மனிதனைத்தவிர மற்ற எந்த ஜீவராசியும் இவ்வளவு மூடத்தனமாய் நடப்பதில்லையே" என்றார்.

"துறவு என்பது உயிருக்குத் துரோகம் செய்து உடல் மெலிந்து வருந்துவதன்று; கொடிய காட்டில் செல்லுதலன்று; காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பவற்றை அடக்கலாகும் எத்தகைய வேடம் பூண்டும் வேடத்துக்கேற்ற நெறியில் நில்லாராயின் யாது பயன் விளையும்? உலகு உய்யவேண்டுமானால் உலகத்தாருடன் பழகி நல்வழி காட்டலே தகுதி அவரினின்றும் நீங்கியிருத்தலால் யாது பயன்? நாம் நன்னெறியில் நடந்து பிறரையும் நல்வழிப் படுத்தி நற்கதி யடையும்படி செய்தல் தகுதியாம்" என்று சித்தார்த்தர் எண்ணினார்.

இவ்வாறு சிந்தனை செய்துகொண்டு ராஜக்கிருகம் என்னும் அரண்யத்தில் நெடுநாள் வசித்தார். அக்காட்டில் ஒருநாள் உலாவி வரும்பொழுது, இடையர்கள் ஓட்டிவரும் ஓர் ஆட்டு மந்தையைக் கண்ணுற்றார். அம்மந்தையுள் காலில் அடிபட்டு வருத்தமுறும் ஆட்டுக்குட்டியொன்று இருந்தது. அதன் தாய் ஆடு, தன் குட்டி வருத்தமுறுவதைக் கண்டு மிகக் வருத்தங்கொண்டு, தன் குட்டிக்குச் சிறிது உதவிபுரியுமாறு சித்தார்த்தரது முகத்தைப் பார்த்தது. சித்தார்த்தரும் அக்குட்டியை எடுத்துத் தம் கைகளால் தடவி, "தாயே! நீ கவலையொழிக. உன் குட்டியை நான் காப்பாற்றுகின்றேன்; ஒன்றுஞ் செய்யாமற் பொழுது போக்குதலினும், துன்பத்தால் வருந்தும் ஓரெளிய பிராணியைச் சுகப்படுத்தல் நலமன்றோ?" என்று அவ்வாட்டிற்குச் சொன்னார்.

எவ்வகைப் பிராணிகளும் தாம் ஈன்றவைகளினிடம் பாராட்டும் அன்பிற்கு ஓர் அளவுண்டோ? பெற்றவளறிவாள் பிள்ளையருமை. எல்லாம் வல்ல கடவுளால் சித்தார்த்தர் மற்ற உயிர்களைக் காப்பாற்றுதற்பொருட்டுத் தெரிந்

தெடுக்கப்பட்டவ ரானமையால், அவர் தாயபோன்று அந்த ஆட்டுக்குட்டியின் வருத்தத்தைத் தீர்க்கப் புகுந்தார்.' அதுவு மன்றி, அவர் தாம் இவ்வளவு உதவி செய்யுமாறு நேர்ந் ததே எனவும் மனமுவந்தார் மேலும், 'யாதொரு தொழிலு மின்றி இந்த வாழ்நாளை வீண்நாளாகக் கழித்தலினும, சிறி தாயினும் ஜீவராசிகளுக்கு உதவி புரிதல் தகுதியாகும்' என் னும கொள்கையுள்ள அருள்வள்ளல அல்லவோ நம் சித்தார்த் தர்? பிறகு அங்கு நின்ற இடையர்களை நோக்கி, "வெப்பம் மிகுந்த காட்டில் கடுமையான வெயில்வேளையில் இந்த ஆடு களை ஏன் வருத்தி ஓட்டுகிறீர்கள்? வெயில் சாய்ந்து நிழ லுண்டாகும மாலைப்பொழுதில் ஓட்டிச செல்வீராக" என்று சொன்னார் அது கேட்ட இடையர்கள், "ஐய! நீங்கள் கூறுவது மிகவும நல்லதே ஆனால் இந்த நாட்டை ஆளும் அரசனாகிய பிம்பசாரன் என்பவன் தான் செய்யும் யாகத் திற்கு நூறு ஆடுகள் உடனே வரவேண்டுமென்று உத்தர வனுப்பியிருப்பதால், நாங்கள் ஓட்டிச செல்லுகின்றோம" என்று மறுமொழி கூறினார்கள் அதனைககேட்ட சித்தார்த்தர், "யானும உங்களுடன் வருகின்றேன் என்னையும அழைத்துச் செல்லுங்கள்" என்று உரைத்தார். அவர்களும், அவரைபபற்றி ஆச்சரியமடைந்தாலும் மனமகிழ்ச்சியுடன் அவரை அழைத் துச்சென்றார்கள் அவர் பிம்பசாரனது யாகசாலையை அடை யும்வரையிற் சிறிதேனும் வருத்தம் பாராட்டாது ஆட்டுக் குட்டியைத் தோளிற் சுமந்துகொண்டு சென்றார் தாய் ஆடும் அவர் பின்னே சென்றது இவ்வாறு ஆட்டுமந்தையுடன் வந்த சித்தார்த்தர் தம்மை ஆயர்கள் புடைசூழ்ந்துவர மாலை வேளையில் பிம்பசாரனது நகரத்தை அடைந்தார். முதல் முதல் எல்லோரும் கடைத்தெரு வழியே சென்றார்கள் சித் தார்த்தரைக் கண்டு, அங்கே பொருள்களைக் கொள்பவரும் கொடுப்பவருமான ஜனங்கள் யாவரும் ஆனந்தமுற்றுத் தத் தம் தொழிலை விட்டுச் சும்மா இருந்தனர் கடைத்தெருவைக் கடந்து கொல்லர்கள் உள்ள வீதி வழியே சென்றார்கள். கொல் லர்கள், ஓங்கிய சம்மட்டிக் கையினராய் நின்று, ஒரு நினைவு மில்லாமல் சித்தார்த்தரையே நோக்கினார்கள். பின்னர் மற்ற வீதிகள்வழியே செல்ல, அவ்வீதிகளிலுள்ளோர், சித்தார்த் தரது குளிர்ந்த நோக்கத்தையும் மனவருத்தத்தையும் முகத்

திற் கண்டு, அவரது பெருவனப்பைப் பாராட்டி, அவ ரையே இமைகொட்டாது பார்ப்பாராயினர். மாடு கறந்து கொண்டிருந்த மகளிர், தம்மையும் அறியாது கை கறக்க, கண்கள் சித்தார்த்தரை அன்புடன் நாட, முழந்தாளிலிருந்த பாற்செம்பின்மேல் பால்வழிய இருந்தார்கள். அவரைக் கண்டோர் சிலர், 'ஓரரசனைப்போலுள்ள இந்த உத்தமசீலர் யாவர்? இவரது முகக்குறியை நோக்குமிடத்து இவர் அரச வமிசத்தில் உதித்தவராகவே தோன்றுகிறது. இவரது முகம் ஏதோ கவலையை வெளிக்காட்டுகின்றது' என்றனர். வேறு சிலர், 'இவர், துவராடை யுடுத்துக் கானகத்திடையே இருக் கும் மலையில் வசிக்கும் பெரியவர்' என்றார்கள். இவ்வாறு பலர் பலவாறு சொல்லிக்கொண்டு நிற்கச் சித்தார்த்தரும் இடையர்களும் ஆட்டு மந்தையுடன் யாகசாலையை நெருங் கினார்கள்.

யாகத்திற்கு வேண்டிய ஆட்டு மந்தையுடன் மலையிலிருக் கும் முனிவர் ஒருவர் வந்துளரென்று, சிலர் பிம்பசாரனுக்கு அறிவித்தார்கள். அரசன் யாகசாலையின் நடுவே தன் இரு புறமும் வேதியர்கள் புடைசூழ நின்றுகொண்டிருந்தான். அரசனைச் சுற்றி நின்றவர்கள், யாககுண்டத்தில் தீவளர்த்து, மந்திரங்களைச் சொல்லி, நெய்யைவிட்டு ஓமஞ்செய்தார்கள். அரசன்முன்பு அமைக்கப்பட்டிருந்த பலிபீடத்தில் ஒரு செம் மறியாடு கட்டப்பட்டிருந்தது. ஓங்கி உயர்த்திய வாளுடன் ஓர் அந்தணர் அதனைக் கொல்லுமாறு நின்றனர். ஓச்சிய வாளை ஆட்டின்மேல் வீழ்த்துந் தருணத்தில், சித்தார்த்தர் தோன்றி அவ்வந்தணரது கையைப் பிடித்துக்கொண்டார். பிடித்த கையினின்றும் வாளை வாங்கி, அந்த ஆட்டையும் அவிழ்த்து அதன் மனம்போலப் போகவிட்டார். அவர் செய் கையை ஒருவரும் தடுக்க முயலவில்லை. அவருடைய தோற் றமும், கம்பீரமும், அடக்கியாளும் முகக்குறிப்பும், யாவரை யும் அடக்கின. அங்கே நடுவில் நின்ற அவரது தோற்றம், தெய்வத்தோற்றத்தை நிகர்த்தது. இவ்வாறு நின்ற சித்தார்த் தர் தமக்குப் பேச உத்தரவு கொடுக்கவேண்டுமென்று அரச னைக் கேட்டார். அரசனும் அவர் வேண்டுகோளுக் கிணங் சித்தார்த்தர் உயிரினது மேன்மையைப்பற்றிப் பின்வருமாறு ஆங்கு நின்றவர்களுக்கு உபதேசித்தார்:

'உயிர்' மிக்க மேன்மையுடையது. அதனை எவரும் வாங்கிவிடலாம். ஆயின், அதனைக் கொடுத்தல் ஒருவராலும் இயலாது. யாவரும் அவ்வுயிரின்மேல் அன்புபாராட்டி, அதனை இன்பத்துடன் போற்றுவதிலேயே மனம் செலுத்து கின்றார்கள். அது எளியவர் செல்வர் எவருக்கும் ஒன்றே. அன்றியும் எவ்வகைச் சீவராசிகளுக்கும் ஒன்றே. ஆகவே அது நமக்கு எவ்வளவு அருமையாக இருக்கின்றதோ, இந்த ஆட்டிற்கும் அவ்வளவு அருமையானதுதான். நாம் ஆறறி வுடையவர்; இந்த ஆடோ ஐயறிவுடையது. நாம் நம்மு டைய சுகதுக்கங்களை எடுத்துரைக்க வன்மையையுடையோம். இதுவோ அத்தகைய வன்மையை உடையதன்று. அரு ளையும் அன்பையும் கடவுளினிடம் நாம் எதிர் பார்க்கின் றோம். நாமே அருளும் அன்பும் இன்றிக் கொடும் பாத கராயிருப்பின், நாம் எதிர் பார்ப்பனவற்றை எவ்வாறு அடைவோம்? ஒன்றுமறியாத இந்த ஆடு, தன்னிடமிருக் கும் எதனையும் நமக்குக் கொடுக்கின்றது. பருகுதற்குப் பாலை மாத்திரமேயன்றித் தன் முதுகின்மேலிருக்கும் உரோ மத்தையும் கம்பளமாக்கிக்கொள்ளத் தருகின்றது.

''இத்தகைய உதவிபுரியும் இவ்வாடு வலியற்றதாயிருத் தல் கண்டு நாம் இதனைக் கொல்லுதல் தகுதியன்று. எளி யாரை வலியார் கொல்லுதலோ முறைமை? அல்லது அயல் நின்று கைகொடுத்து உதவுதலோ முறைமை? 'எளியரை வலியர் வாட்டின், வலியரைத் தெய்வம் வாட்டுமே. நாம் மிக்க வன்மையுடையவராதல்பற்றி, இதனைக் கொன்று கட வுளுக்குச் சந்தோஷத்தைக் கொடுப்பதாக நினைக்கின்றோம். தம்முடைய மைந்தர்கள் கொலையுண்ணக் கண்டால், கட வுளுக்கு எவ்விதம் சந்தோஷம் உண்டாகும்? ஆடுகளைப் படைத்து அவற்றை உலகத்தின்கண் இன்பம் நுகரும்படி விடுத்தவர் கடவுள். ஆகவே ஆடுகள் அவருடைய குழந்தை கள். தன் அருமைப் புதல்வர்கள் சாவதைக் கண்டு தந்தை மனக்களிப்படைதல் உண்டோ? தூய தன்மையும் தூய நெறியும் உடைய அருட்பெரும் வள்ளலாராகிய கடவுள், கொலையை எவ்விதம் பொறுப்பார்? எல்லா நற்குணமும் பொருந்திய கடவுள், கொலையைச் சிறிதேனும் பொறார். நல்

லவன் ஒரு பிராணி துன்பப்படுதலைக் காண விரும்புவானு? அவனே விரும்பானேல், கடவுள் எங்ஙனம் விரும்புவார்?

"இந்த ஆட்டைக் கொல்வதனுல் நீங்கள் செய்த பாவங் களை ஒழித்துத் தண்டனையினின்றும் தப்பி நற்கதி அடை யலாமென நினைக்கின்றீர்கள். நாமும் ஆடுகளும் கடவுளின் குழந்தைகளே. ஆகவே ஒரு பிள்ளை செய்த குற்றத்திற்காக மற்ருெரு பிள்ளையைத் தண்டித்தல் தகுதியா? அவ்விதம் எந்தத் தகப்பனுயினும் செய்வானு? மனிதன் ஓராட்டைக் கொன்று தன் பாவத்தைப் போக்க நினைத்தாலும், மனிதனைக் காட்டிலும் பன்மடங்கு அருளும் அன்பும் நடுவுநிலைமையும் பொருந்திய ஈசனுர் அவனைத் தண்டனையினின்றும் தவிர்த்து விடுவாரா? ஒருகாலும் அவ்விதம் விடார் பன்முறையும் சொன்னேன். அவனவன் செய்யும் குற்றத்திற்கு அவ னவனே உத்தரவாதி. எவனும், தான்செய்த பாவ புண்ணி யங்களுக்கேற்ப, இவ்வுலகிலாயினும், ஏனைய உலகங்களி லாயினும், பலனை அடைகின்ருன் என்பது திண்ணம். இது சத்தியம். ஆகவே இந்த ஆட்டைக் கொல்லாது விடுதலே மிகவும் மேலானது; அறங்கள் எல்லாவற்றிலும் கொல்லாமை முதன்மையானது. ஆதலின் இந்த ஆட்டை விட்டுவிடுங்கள்.

சித்தார்த்தர் இங்ஙனங் கூறி முடிக்கும் முன்னமே அர சன் கைகட்டி வாய்புதைத்துத் தன்மீது பொறை பாராட்டும் படி அவரை வேண்டினுன். உடனே, ஆங்கு நின்ற வேதி யர் முதலானவர்கள், தத்தம் கைகளிலிருந்த வாளை நழுவ விட்டு, அவரது மலரடியில் வீழ்ந்து, "ஐயனே! எம்தலைவ! இதுகாறும் நாங்கள் இத்தகைய சிறப்புவாய்ந்த உபதேசம் கேட்கப் பெற்றிலேம். இன்றுதான் இவ்வானந்த அருள் மொழிகளைக் கேட்டோம்; மனத்திற் கொண்டோம். உம் முடைய உபதேசத்தைத் தலைமேற்கொண்டு போற்றுகின் ருேம். இவ்வுபதேசம் போதாது. இன்னும் எங்களுக்கு நற்புத்தி புகட்டுமாறு பன்முறை வேண்டுகின்ருேம். எங்க ளுடைய மூதாதைகள் யாகம் செய்துவந்தமையால், நாங்க ளும் அதனை மேற்கொண்டோம். நாங்கள் அதனை நீதியன் றென அறிந்தமையால், அதனை யொழித்துத் தூய நெறியை இனி நாடுகின்ருேம். அரியனவும் பெரியனவும் ஆனவை

களை எங்களுக்குக் கற்பிக்கும்வண்ணம் பிரார்த்திக்கிறோம்" என்று கூறினார்கள்.

அவர்கள் இவ்வாறு வேண்டலும் சித்தார்த்தரும், மன முவந்து, அவர்களுக்குப் பின்வருமாறு புத்தி புகட்டினர்: "இவ்வுலகத்தில் எவரும் கொலையாகிய பாவத்தைச் செய்யாமல் புலாலுண்ணுதலை நீத்து, காய் கிழங்கு புல் பூண்டு தானியம் முதலியவற்றைப் புசிப்பதையே மேற்கொள்வார்களானல், இவ்வுலகம் எவ்வளவு அழகாகவும் நேர்மையாகவு மிருக்கும்! ஏனைய பிராணிகளையும் தம்மைப்போலவே கருதுவார்களானல், மிக்க ஐக்கியம் உண்டாகும்: துன்பமும் நோயும் துக்கமும் மிகவும் நீங்கும் மனிதர் ஒருவருக்கொருவர் போர் புரியாதவராய், ஏனைய மிருகங்களையும் கொல்லாராய், அறநெறி வழுவாத தூய வாழ்க்கையராய், ஒருவர்மேலொருவர் அன்புடையாராய் இருப்பரேல், இவ்வுலகமே பேரின்ப வுலகம் என்பதற்கு ஐயம் உண்டோ?"

பேரருளாளரான சித்தார்த்தர் இவ்விதம் போதிப்ப, யாவரும் பேருவகை பூத்து, அவரைத் தலைவணங்கிப் பணிந்தார்கள் பிம்பசாரன், தனது நாடு முழுவதும் தூதுவரைப் போக்கி அன்றுமுதல் எங்கும் உணவிற்காகவேனும் யாகத்திற்காகவேனும் வேறு எவ்விதமான காரணத்திற்காகவேனும் ஒரு பிராணியையும் கொல்லக்கூடாதெனவும், கொல்லுதல் பாவமாமெனவும், ஒவ்வோருயிரும் பரிசுத்தமுடைய தம்முயிர்போன்றதே எனவும், எல்லாம் வல்ல முழுமுதற் கடவுள் அருளுடையார்க்கு அருள்புரிவாரெனவும், முரசறைவித்தான். இராஜக்கிருகம் என்னும் நாடு முழுவதிலும், மனிதர்கள் மட்டுமேயன்றி விலங்குகள் பறவைகள் முதலானவைகளும் ஒருங்கே கூடி வாழ்ந்தன அதுமுதல் ஆலயங்களில், பாலும் நெய்யும் கனியும் தேனும் பூவும் நிவேதிக்கப்பட்டனவேயல்லாமல், பலியிடுதல் என்னும் வழக்கம் நின்றுபோயிற்று.



## 14. தமிழ் நாட்டுப் பழைய அரசர்கள்.

இந்தியாவில் முன்னர் இருந்த பழைய அரசர்கள் தங்கள் பிரஜைகளை நீதிமுறை வழுவாமல் பரிபாலித்துவந்தார்கள் என்பதற்கும் குடிகள் அரசர்களைத் தெய்வமாகக் கருதி வந்தார்கள் என்பதற்கும் பல ஆதாரங்கள் உள்ளன.

வெகுகாலத்துக்குமுன் மதுரையிலிருந்த பாண்டிய அரசனொருவன் தன் நாட்டிலுள்ள ஜனங்களின் சுகதுக்கங்களைத் தன்னுடையனவாகவே யெண்ணி ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தனன். நாட்டில் நடக்கும் எல்லாவிஷயங்களையும் அவன் ஒற்றர்களால் தெரிந்துகொள்ளுவது வழக்கம். சில சமயங்களில் ஒற்றர்களுடைய வார்த்தையை நம்பாமல் தானே நள்ளிருளில் மாறுவேடம் பூண்டு நகரத்தில் நடக்கும் விஷயங்களைத் தெரிந்துகொண்டு வருவான். அவ்வாறு செய்துவருகையில் ஒருநாள் அப்பட்டணத்திலுள்ள ஒரு வீட்டில் அர்த்தராத்திரியில் நிகழ்ந்த பேச்சு அவன் காதில் விழுந்தது. அவன் நன்றாகக் கவனித்துக் கேட்டான். அந்த வீட்டுக்கு உரியவனான பிராமணன் காசியாத்திரை போகக் கருதித் தன் மனைவியிடம் அதைப்பற்றிச் சொல்லுகையில் அவள் அவன் அவ்வாறு காசிக்குச் சென்றால் தனக்கு ஆதரவு ஒன்றும் இல்லாமற்போகுமே என்று கூறினள். அப்போது அந்தப் பிராமணன், "நீ சிறிதும் கவலைப்படவேண்டாம். பட்டணத்து ஜனங்களுக்கெல்லாம் தாயும் தந்தையுமாக இருக்கும் பாண்டியன் உன்னைக் காப்பாற்றுவான்" என்று சமாதானம் சொல்லி விடைபெற்றுக்கொண்டு போய்விட்டான்.

அங்கு நிகழ்ந்தவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த பாண்டியமன்னன் மறுநாள்முதல் அந்தப் பிராமண ஸ்திரீக்கு வேண்டியவற்றைக் கொடுத்துப் பாதுகாத்து வரவேண்டுமென்று எண்ணினான். ஆனால் அவள் ஒருத்தியைமட்டும் அவ்வாறு நடத்தினால் ஊர்ஜனங்களெல்லாரும் தன்னிடம் சந்தேகங்கொள்ளுவார்கள் என்று எண்ணி அப்பட்டணத்திலுள்ள மற்றவர்களுக்கும் அதுபோலவே உதவிவர எண்ணி அவ்வாறே நடத்திவந்தான்.

மதுராபுரியில் இருந்து மனுமுறை வழுவாது செங்கோல் செலுத்திவந்த பாண்டிய அரசர்களுள் குலோத்துங்கன் என்

பான் ஒருவனுவான். அவன் அரசியற்றிவரும் காலத்தில் ஓர் அந்தணன் தன் மனைவியுடனும் குழந்தையுடனும் திருப்புத்தூரிலிருந்து மதுரைக்கு ஒருநாள் வந்துகொண்டிருந்தனன். வழியில் மனைவியின் தாகத்தைத் தணிக்கும்பொருட்டு அவளையும் குழந்தையையும் ஒரு மர நிழலில் இருக்கச்செய்து தண்ணீர் கொண்டுவரப் போனான். அப்போது அம்மரத்தில் பல தினங்களுக்குமுன் ஒரு வேடனால் எய்யப்பட்டிருந்த ஓர் அம்பானது காற்றினால் திடீரென்று விழுந்து அந்தப் பார்ப்பனியின் வயிற்றைத் துளைத்தது. உடனே அவள் உயிர் துறந்தனள். அப்போது இளைப்பாறும்பொருட்டு ஒரு வேடன் வில்லையேந்திய கையினனாய் அதே மரத்தடிக்கு வந்து சேர்ந்தனன். தண்ணீருக்குப் போன பிராமணன் திரும்பிவந்து உதிர வெள்ளத்தில் இறந்துகிடந்த தன் மனைவியையும், தாய்முகத்தை நோக்கிக்கொண்டு கதறும் குழந்தையையும் பக்கத்தில் நின்ற வேடுவனையும் கண்டு துயரக்கடலில் ஆழ்ந்தனன். பிறகு பாலை வேண்டியழுத குழந்தையைச் சுற்றத்தாரிடம் சேர்ப்பிக்கும்படி சிலரிடம் ஒப்பித்துவிட்டு அந்த வேடனே தன் மனையாளைக் கொன்றவனென்று எண்ணி அவனை இழுத்துக்கொண்டு குலோத்துங்க மன்னனுடைய அரண்மனை வாயிலையடைந்தான். அப்பால் யாவரும் நடுங்கும்படி அவன் பெருங் கூக்குரலிட்டழுதான். அரண்மனைவாயிலில் நின்ற காவலாளிகள் அரசனிடம் சென்று அவ்வந்தணனைப் பற்றித் தெரிவித்தார்கள். உடனே பாண்டியன் மிகவும் மனநொந்து வெளியேவந்து பிராமணனுக்கு நேரிட்ட துன்பம் யாதென்று வினவினான். அப்போது பிராமணன் வேந்தனை நோக்கி, "இன்று காலையில் என் மனையாளை ஒரு மரத்தடியில் இருக்கச் சொல்லிவிட்டு அவளுக்காகத் தண்ணீர் கொண்டு வருவதற்குள் இந்தத் துஷ்டன் அவளைக் கொன்றுவிட்டனன்" என்று கூற அரசன் உண்மையைச் சொல்லும்படி வேடனைக் கேட்டனன். வேடன், "அரசே, நான் இளைப்பாறும் பொருட்டு மரத்தடியில் நின்றேனேயல்லாமல் அந்த மாதைக் கொல்லவில்லை. கொன்றவர்களையும் யான் அறியேன்" என்றனன். "அப்படியாயின் அவளது சரீரத்தில் அம்பு தைக்கக் காரணம் என்ன?" என்று அரசன் பக்கத்தில் நின்ற மந்திரி கேட்க, அவ்விஷயம் தனக்குச் சிறிதும் தெரியாதென்று

சொல்லி வேடன் கண்ணீர்விட்டழுதான். அவனைத் தண்டித் தாலன்றி உண்மை வெளிப்படாதென்று எல்லா மந்திரிகளும் ஒரேமனமாய்ச் சொன்னார்கள். பிறகு அரசன் கட்டளைப் படி பலவாறு தண்டித்தும் வேடன் முன் சொன்னவாறே சொன்னான். அப்பால் பாண்டியன் ஒன்றும் தோன்றாமல் திகைப்புற்று, "இந்த வேடனோ எவ்விதமான தண்டனைக்கும் அஞ்சாமல் ஒரேமொழி கூறுகின்றான். இவன் முகத்தில் கொலைஞர்களுக்குரிய அடையாளமொன்றும் காணப்பட வில்லை. அந்தப் பார்ப்பன மடந்தையை இவன்தான் கொன் றனனோ அல்லது வேறு யாரோ? ஒருவேளை மிருகவேட்டை யாடும்பொருட்டு வேறு யாரேனும் எய்த அம்புதான் இவள் மீது பாய்ந்ததோ?" என்று பலவாறு சிந்தனைசெய்து நீதிநூல் வல்லோர்களை யோசனை கேட்டான். அவர்கள் பலவகை யான நீதிநூல்களையும் ஆராய்ந்துபார்த்து, "அரசர் திலகமே, இதன் உண்மை தெய்வத்தாலேதான் வெளிப்படவேண்டும். வேறுவிதமான உபாயம் ஒன்றும் எங்களுக்குத் தெரியவில்லை" என்று சொன்னார்கள். அப்போது பாண்டியன் அந்தண னுக்கு ஆறுதல் சொல்லி யனுப்பிவிட்டு வேடனைச் சிறையில் அடைப்பித்தான். பிறகு அவன் தனது குலதெய்வமாகிய சொக்கலிங்கப் பெருமானைப் பலவாறு கொண்டாடி உண் மையை வெளிப்படுத்தித் தன் மனக்கவலையை ஒழித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான். அப்போது, "அன்பனே, இந்நகர்ப்புறத்து வணிகவீதியில் ஒரு கலியாணம் நடக்கப் போகிறது. கலியாணவீட்டுக்கு இவ்வந்தணனுடன் வருவா யானால் உண்மை வெளியாகும்" என்று ஓர் அசரீரிவாக்கு உண்டாயிற்று.

பாண்டியன் அவ்வார்த்தையைக் கேட்டு மனமகிழ்ந்து மாறுவேடம்பூண்டு மனைவியையிழந்த அவ்வந்தணனுடன் கலி யாணவீடு போய் ஒரு புறத்திலிருந்தான். அங்கே அந்த மண மகனுக்கு ஏற்பட்ட வாழ்நாள் அன்றோடு முடிந்தமையால் அவன் உயிரைக் கவர்ந்துவரும்படி யமதூதர்கள் இருவர் வந்திருந்தனர். அவர்களில் ஒருவன் மற்றவனை நோக்கி, "இவன் தேகத்தில் பிணி ஒன்றுமில்லை. அப்படியிருக்க இவனுயிரைக் கொள்வது எங்ஙனம்?" என்று கேட்க, மற்ற

வன் "இதற்கு ஏன் கவலைப்படவேண்டும்? நெடுநாளைக்கு முன்பு மரத்தின்மேல் ஏற்றப்பட்டிருந்த அம்பைக் காற்றினால் விழும்படிசெய்து சுகசரீரியாயிருந்த பார்ப்பனியின் உயிரை எவ்வாறு கவர்ந்தோமோ அவ்வாறே ஒரு யுக்திசெய்து இவன் உயிரைக் கவர்ந்துவிடலாம்" என்று பாண்டியனும் பிராமணனும் கேட்கும்படி சொன்னான். மறுநாட் காலையில் கலியாணச்சடங்கு தொடங்குகையில் வாத்தியமுழக்கத்தால் அங்கிருந்த பசுவொன்று வெருண்டு கட்டப்பட்டிருந்த கயிற்றை யறுத்துக்கொண்டு வேகமாய் ஓடி மணமகனை முட்டித் தள்ளி அவன் உயிரை மாய்த்தது. அதனைக் கண்ட அந்தணன் தன் மனைவியின் மரணத்தால் அடைந்த துக்கத்தைக்காட்டிலும் அதிகமான துக்கத்தை அப்போது அடைந்தான். பாண்டியன் அவனை அரண்மனைக்கு அழைத்துச்சென்று வேண்டிய பொருள் கொடுத்தனுப்பிச் சிறையில் அடைத்திருந்த வேடனைச் சிறையினின்றும் நீக்கி அவனுக்கு வேண்டிய பொருளை ஈந்து தான் தெரியாமற்செய்த தண்டனைக்காகப் பொறுத்துக் கொள்ளும்படி அவனை மிகவும் கேட்டுக்கொண்டனன்.

இவ்வாறு பழையகாலத்து அரசர்களுடைய நீதியைப் புலப்படுத்தும் அற்புத சரித்திரங்கள் பல உள்ளன. அவற்றுள் சோழநாட்டிலுள்ள திருவாரூரின்கண் இருந்து அரசியற்றிய மனுநீதிகண்ட சோழர் என்பவர் கன்றை இழந்த ஒரு தாய்ப்பசுவின்பொருட்டுத் தமது மகனைத் தேர்க்காலில் கிடத்தி நீதியை நிலைநிறுத்திய பெருந்தகைமை மிகவும் கொண்டாடத்தக்கது



## 15. சித்தார்த்தர் நெறியறிந்து புத்தரானமை.

பிம்பசாரனை நல்வழிப் படுத்தியபின்பு சித்தார்த்தர் மீட்டும் கானகம் புக்கு வெகுநாள் கங்கைக்கரைகளில் சுற்றித் திரிந்தனர். காட்டில் யோகத்தி லிருக்குங்கால் இவ்வுலக வாழ்க்கை, ஜீவன், சுகதுக்கங்கள், சாக்காடு, முதலானவைகளைக் குறித்து மீட்டும் மீட்டும் சிந்திப்பார். இங்ஙனம் சிந்தித்து, எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி உணவை மறந்துவிடுவார். பல தினங்கள் உண்ணாமலே இருப்பார்.

ஆய வழியைக் காணுமாறு கங்கைக்கரையில் சேனனியென்னும் ஊரினருகே யோசித்திருக்கையில், ஒருநாள் பசிமேலிட்டுக் களைப்புற்று, மூர்ச்சித்து ஒன்றும் தெரியாதவராய்க் கீழே விழுந்து கிடந்தனர். மெய்ம்மறந்து வீழ்ந்திருக்குமளவில், ஆடு மேய்க்கும் ஓர் ஆயச் சிறுவன் அவர் நிலையைக் கண்டு கருணை மிகுந்து, தான் ஓட்டிச்செல்லும் ஆட்டினுள் வெள்ளாடொன்றை அவரருகில் ஓட்டி, அதன் பால் அவர் வாயிற் புகுமாறு கறந்தான். பால் உட்புகுந்தவளவிலே மயக்கம் சிறிதொழிந்து சித்தார்த்தர், அக்கோகுலச் சிறுவனை அழைத்து, "தம்பீ! நான் பருகுமாறு உன் பாத்திரத்தில் சிறிது பால் கொண்டுவா" என்று கேட்டார். அதனைக் கேட்ட சிறுவனும் களிப்புடன் அவருக்குப் பாலீந்து அவரது களைப்பை மாற்றிச் சென்றனன்.

பாகீரதியின் அருகில் ஒரு சிறுகிராமம் இருந்தது. அந்தக் கிராமத்தில், எளியார்க்கன்பனாய், வறியார்க்குச் சகாயனாய், ஒரு செல்வவான் இருந்தான். அவன் மனைவியின் பெயர் சுகாதை. அவள் மகா பதிவிரதை; சத்தியமே தலைக்கொண்டவள்; எவரிடமும் மலர்ந்த முகமும் இனிய வசனமும் உடையவள்; எவராலும் நன்கு மதிக்கப்படுபவள். அவளைக் கணவனும் மிகவும் நேசித்துப் பாராட்டிவந்தான். இத்தகைய உத்தமிக்கு ஒரே மனக்கவலை இருந்தது. பிள்ளையில்லாக் குறையே அவளது கவலைக்குக் காரணம். அவள் போகாத கோயிலில்லை: கையெடுத்துக் கும்பிடாத தெய்வமில்லை: வேண்டாத பிரார்த்தனையில்லை. முடிவில் தனக்கொரு புத்திரன் பிறந்தால், வனதேவதைக்குப் பொன்தட்டில் அன்னமொடு பாலும் காய் கனியுங் கொண்டு காட்டில் ஒரு பெரு மரத்தினடியில் படைப்பதாகப் பிரார்த்தித்துக்கொண்டாள். சிலநாள் சென்ற அளவில் அவள் கர்ப்பம் தரித்தாள். பத்து மாதம் கழிந்த அளவில் ஓர் ஆண் குழந்தை அவளுக்குப் பிறந்தது. பிறந்த மூன்று மாதம் ஆனபிறகு, தனது பிரார்த்தனையை நிறைவேற்றுமாறு, பொற்றட்டில் அடிசிலொடு இனிய பதார்த்தங்களைக் கொண்டு சென்றனள். தனக்கு முன்னே சென்று பெரிய மரத்தடியில் மெழுகிக் கோலமிடும் பொருட்டு இராதை என்னும் சேடியை அனுப்பினள். சென்ற அச்சேடி, மரத்தின்கீழே சித்தார்த்தர் உட்கார்ந்திருப்பதைக்

கண்டு, அவளை வனதேவதை எனக்கொண்டு களிகூர்ந்து திரும்பித் தன் தலைவியிடம் போந்து, "அம்மா! நாம் செய்த பாக்கியமே பாக்கியம். இது எவரும் அடைதற்கரிய பெரும் பேறு. கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததுபோல வனதேவதை நாம் வருவதை அறிந்து நமக்குத் தரிசன மளிக்க நமக்கு முன்னே மரத்தின்கீழ் வந்திருக்கின்றது. அதனைக் காணாத கண்ணென்ன கண்ணோ? கண்ணிமைத்துப் பார்ப்பார் தம் கண்ணென்ன கண்ணோ?" என்று பலவாறு புகழ்ந்து கூறினாள். இதனைக் கேட்ட சுகாதை மனமகிழ்ந்து சென்று சித்தார்த்தரைத் தெய்வம் என்றுகொண்டு அவருக்கு அமுதாட்டினாள். சித்தார்த்தர் அமுதுசெய்து நெடுநாளாக இருந்த தமது களைப்பு நீங்கியவுடனே அவருடைய திரு மேனி, முன்னினும் பன்மடங்கு அதிக வனப்புடன் விளங் கிற்று. அதனைக் கண்ட அம்மாதர்க்கரசி, அவர் களிகூர்ந் தாரென்று நினைத்துத் தானும் களிகூர்ந்தாள். சித்தார்த்தர், அப்பொழுது திருவாய்மலர்ந்து, "அம்மா, நீ எண்ணியபடி நான் ஒரு தெய்வமல்லேன்; சாதாரண மனிதனே. அன்றி யும் மிகவும் வறியேன். நல்வழி நாடியே இவ்வாறு திரிகின் றேன். உன் முகத்தில் சந்தோஷக் குறிப்பு இருக்கின்றது. உன்னுடைய மைந்தனை என்ன நீ கில் கொண்டிலை" என்று சொல்லி, அக்குழந்தையின் சிரத்தின்மேல் கையை வைத்து ஆசீர்வதித்தனர். உடனே சுகாதைக்கு மிக்க மகிழ்ச்சி உண் டாயிற்று. பின்பு சுகாதைக்கும் சித்தார்த்தருக்கும் பின் வரும் சம்பாஷணை நிகழ்ந்தது:—

சித்தார்த்தர்: "அம்மையே! நீ சந்தோஷம் உடையவளா கக் காண்கின்றனை. நான் தூய வழி இன்னதென அறிய முயல்கின்றமையால், நீ நிச்சயமாகவே சந்தோஷமாக இருக் கின்றனையோ என்று அடியேனுக்குச் சற்றே தெரிவிக்க வேண்டும்."

சுகாதை:- "ஐயனே! என்றன் உள்ளம் ஒரு சிறு பாத் திரத்தை ஒத்துளது. அடியேனுக்கு வேண்டியனவெல்லாம் அதன்கண்ணே உள்ளன. ஆதலின், யான் மிகவும் சந் தோஷமாய் இருக்கிறேன். என் கடமையை நான் செய்வே னாயின் அது இறைவனுக்குப் பிரீதியாம். இறைவனுக்குச் சந்தோஷ முண்டாமாயின், எனக்கும் சந்தோஷமே. நன்மை

விதைத்தால் நன்மை விளையும்: தீமை விதைத்தால் தீமை விளையும். என் மனமறிந்து செய்தனவெல்லாம் நன்மையே. ஒரு சிறு விதையினின்றும் முளைத்தோங்கும் அழகிய மரம் போல, இவ்வுலகிற் செய்த நற்செயலினால் அவ்வுலகிற் பேரின்பம் விளையக் காணலாம். எனக்கு இம்மையில் நன்மை உண்டாகாவிடினும், மறுமையிலாயினும் நன்மை உண்டாகுமென்பது திண்ணம். கருணாநிதியாகிய ஐயன் என்னைப் படைத்து இங்கனுப்பினார். என்னுடைய குழந்தையை எவ்வளவு அன்புடன் யான் பார்க்கின்றேனோ, அவ்வளவு அன்புடனே, அருட்பெருங் கடவுளும் என்னைப் பார்க்கின்றனர். ஆனதால் எனக்குப் பயம் சிறிதேனும் இல்லை. இனி உண்டாவது நன்மையே என்பது தேற்றம்."

சித்தார்த்தர்: "திருப்தி என்பதுண்டாகி, மரணத்திற் கஞ்சாதபொழுதே, நீ சுகமடைந்தாய். சுவர்க்கம் இன்னதென நான் அறிந்துகொண்டேன்; இன்பநெறி கண்டேன்; இனிமேல் துயரமில்லேன்."

சுஜாதை: "புனிதனே! வாழ்க்கையை எவ்விதம் உகந்தேனோ, அவ்விதமே சாவையும் உகந்தேன். இதற்கு ஐயமில்லை."

சித்தார்த்தர்: "கற்பிற்கரசியே! சத்தியமாய் நீ எனக்கு அறிவைப் புகட்டுகின்றாய். சுகமாய் வாழ்வாயாக. நீ என்னை மரியாதை செய்கின்றாய். நான் உன்னை வணங்குகின்றேன். சந்தோஷமே எப்பொழுதும் உன்னிடம் குடிகொள்ளக் கடவதாக. மோக்ஷத்திற்குச் சாதகமான தூய நெறியை நீ அறிந்திருக்கின்றனை."

பிறகு சுஜாதை விடைபெற்றுக்கொண்டு இல்லம் நாடி நடந்தனள். சித்தார்த்தரும் சிறிது தூரம் நடந்து போதி என்னும் மரத்தின்கீழ் வந்திருந்து தாம் கண்டதையும் கேட்டதையும் குறித்து மீட்டும் மீட்டும் ஆலோசித்தார். முடிவில் தாம் ஏழு வருஷகாலமாக எதனை அறியவேண்டுமென்று திரிந்தாரோ, அதனை அறிந்ததாகவும், புத்தி தமக்கு வந்ததாகவும் எண்ணி, அதுமுதல் 'புத்தர்' என்ற பெயர் புனைந்தார். தாம் அறிந்ததைப் பிறருக்கு அறிவித்தல் தம்முடைய கடனெனக்கொண்டு, அறிவு புகட்டும்பொருட்டு வெளிப்போந்தனர். அநேக இடங்களில் தம்முடைய கொள்

கையைப் பரவச்செய்து, தகப்பனாரான சுத்தோதனர் இருந்த நாட்டிற்குச் சென்றார். அப்பொழுது அவர் கொண்டிருந்த சின்னங்கள் அரச சின்னங்கள் அல்ல ஒரு பிக்ஷுவின் கோலங்கொண்டு சென்று, தம்முடைய தகப்பனார் மனைவி புதல்வன் முதலானவர்களைப் பார்த்தனர் அவரது கொள் கையை எவரும் வியந்து, அவர்க்குச் சிஷ்யர்களானார்கள். பிறகு நாடு முழுவதும் திரிந்து, தமது புதிய மதத்தைப் பரவச் செய்தார். புத்தரால் வரையறுக்கப்பட்டமையின் அச்சமயம் பௌத்தசமயம் எனப்படும் அவருடைய ஜீவ காலத்திலேயே அநேகர் அவர் மதத்தைப் பின்பற்றினார்கள். அநேக அரசர்கள் பௌத்த சமயத்தைக் கைக்கொண்டார் கள் பிறகு புத்தர், நாற்பத்தைந்து வருடம் ஜீவித்திருந்து அப்பால் முத்தியடைந்தனர்



## 16. புகழேந்திப் புலவர்.

தமிழில் பாக்கள் வெண்பா, ஆசிரிப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நான்கு வகைப்படும். அவற்றுள் வெண்பாவே மிகவும் சிறந்ததென்பது கற்றறிந்தோரது கொள்கை. அதனால் அதற்கு முதற்பா என்றும் ஒரு பெயர் வழங்கிவருகின்றது. இத் தகைய வெண்பாவை இயற்றுதலில் புகழேந்திப் புலவர் மிக்க சிறப்பு அடைந்திருந்தமைபற்றி 'வெண்பாவிற் புகழேந்தி' என்னும் பழமொழி தமிழ் உலகத்தில் உலாவி நிற்கின்றது

இவ்விதமான பெருமை வாய்ந்திருந்த புகழேந்திப் புலவர் தொண்டைநாட்டிலுள்ள செங்கற்பட்டுக்கு அடுத்த பொன் விளைந்த களத்தூரில் வேளாளர் மரபில் இற்றைக்குச் சற்றே றக்குறைய 1000 வருஷங்களுக்குமுன்பு தோன்றினர். இவர் சந்திரன் சுவர்க்கி என்னும் ஒரு சிற்றரசனால் முதலில் ஆத ரிக்கப்பெற்றார். இச்சிற்றரசனை இவர் தாம் பாடிய நளவெண் பாவில் பல இடங்களில் புகழ்ந்திருக்கின்றனர்.

இவர் உரிய பிராயத்தில் வித்தியாரம்பம் செய்விக்கப் பெற்றுத் தமிழ் நூல்களை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்து கவி பாடு தலில் செவ்வனே பயின்று பாண்டிநாட்டை அடைந்து அங்கே மதுரையம்பதியில் அரசாட்சி செய்துவந்த சார்வபூம

பாண்டியனது நட்பைப் பெற்று அவனது ஆஸ்தான வித்து வானாய் விளங்கிவந்தார்.

ஒருகாலத்தில் கொழும்புக்குச் சென்று அங்கே அரசனு யிருந்த ஆதிசேகரனைக் கண்டு அவன் இவரை மதியாதபோது அவனைப் பாடாமல் தம்மை ஓடத்தில் ஏற்றிக்கொணர்ந்த ஓடக்காரனை,

"கயற்காவி நாறுங் கொழும்பிற்பர சண்டன்
காரானை கொண்டசெங்கை ஆரோதன மைந்தா
இயக்கர் நின்மார்பிற் செழும்புனை யந்தா
இப்போது நீநல்கிலையென்பேதை தன்மேற்
சயக்காம வேளம்பு தையாது முத்தின்
தாமஞ் சூடா சந்தனம் பூசினாலும்
இயக்காது வேயுஞ் செவிக்கும் பொறுக்கும்
தீயென்று மூளாது திங்கட் கொழுந்தே"

என்று புகழ்ந்து பாடினார். இதனைக் கேள்வியுற்ற இலங்கை வேந்தன் இவரிடம் ஓடி வந்து இவரைப் பன்முறை வணங்கித் தனது சபைக்குத் தக்க மரியாதையுடன் அழைத்துச்சென்று அங்கே பிரசங்கிக்கும்படி இவரை வேண்டிக்கொள்ள இவர் சபையோர் யாவரும் வியக்கும்படி புத்த சமயத்தைப்பற்றி மிகவும் அழகாகப் பேசினர். அதற்குப்பிறகு அரசனிட மிருந்து பன்னிரண்டு யானைகளைப் பரிசாகப் பெற்றுக் குமா ரக்கடவுளை வணங்கி ஒரு வெண்பாப் பாடினர். இலங்கையி லேயே சிலகாலம் தங்கித் தமது புகழ்பரப்பி மீண்டும் மது ரைக்கு வந்து சேர்ந்தார்.

இவர்காலத்தில் சோழநாட்டில் விக்கிரமசோழனுடைய ஆஸ்தான வித்துவானக இருந்த ஒட்டக்கூத்தர் அவ்வரச னுக்காகப் பாண்டிய அரசரிடம் பெண்கேட்க வந்தபோது சோழராஜனுடைய பெருமை தோன்றும்படி அவனுடைய குதிரை நதி மாலை முதலியவற்றை ஒரு செய்யுளில் அமைத் துப் பாடினர். அப்போது புகழேந்திப் புலவர் அதற்கு மாருக,

"திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானே
செவ்வன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானே
கறைபெறுதிரல் காவிரியோ வையையோ வம்மானே
கடப்பகைக்குத் தாதகியங் [illegible]னியோ வம்மானே

ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளித்த தம்மானே
ஒப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானே
பரவைபணிந்த சதுஞ்சேழன் பதந்தனையோ வம்மானே
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே"

எனறு பாடினார்.

இதனைக் கேட்ட ஒட்டக்கூத்தர் சோழனைப் பின்னும் சிறப்பிக்கக் கருதி, "வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான், என்றும் முதுகுக்கிடான் கலைசய—" என்று கூறி அச்செய்யுளைப் பூர்த்திசெய்யச் சிந்தித்துக்கொண்டிருக்கையில் புகழேந்தியார் "—துன்றும், வெளியார் கமழ்தொங்கல் மீனவர்கோன் கைவேல், எறியான் புறங்கொடுக்கினென்று" என்று பாண்டியனது மேன்மை விளங்கும்படி அதிவிரைவிற் பாடி முடித்தனர். அதுமுதல் புகழேந்தியார்பால் ஒட்டக்கூத்தருக்குப் பொறாமையும் பகைமையும் உண்டாயின.

பாண்டிய வேந்தன் பின்னர், தனது பெண்ணைச் சோழராசனுக்கு மணஞ்செய்து கொடுத்து அப்பெண்ணுக்காக அனுப்பிய சீதனப் பொருள்களுடன் புகழேந்திப் புலவரையும் அனுப்பினன். அப்புலவரைக் கண்ட ஒட்டக்கூத்தர், "இவன் உம்மைப் பலவாறு பாண்டியனிடம் இகழ்ந்து கூறி உமக்குப் பெண் கொடுக்கவொட்டாமல் தடைசெய்தனன்" என்று சோழராசனிடம் கூறி அவரைச் சிறையில் அடைப்பித்தனர்.

புலவர் சிறையில் இருந்துகொண்டு அங்கே தண்ணீரெடுக்கவரும் பெண்கள் செவிக்கு இனிமையாக, அல்லியரசிமாலை, பவளக்கொடிமாலை, புரந்தரன் களவுமாலை என்னும் நூல்களைப் பாடித் தம் உணவிற்கு வேண்டிய பொருள்களை அவர்களிடம் பெற்றுத் தாமே சமைத்து உண்டு மிகுதியைக் காவலாளிகளுக்குக் கொடுத்து அவர்களைத் தம் வசப்படுத்திக்கொண்டனர். ஒருநாள் அரசன் மனைவியுடன் யானைமீதேறிப் பவனிவருகையில் அச்சிறப்பைக் காணுமாறு புகழேந்திப் புலவர் சிறைச்சாலையின் மேற்றளத்தில் ஏறி நின்றனர். அவரை ஒட்டக்கூத்தருக்கு அரசன் சுட்டிக்காட்டி, "இவர் தமிழில் மகா சமர்த்தரல்லவா?" என்று வினவ, கூத்தர் புகழேந்தியை இகழ்ந்து ஒரு பாடலைக்கூறினர். அப்போது புலவர் அரசனை

நோக்கி, "அப்பாடலை ஒட்டிப்பாடவோ வெட்டிப்பாடவோ?" என்று கேட்டனர். சோழராசன் ஒட்டிப்பாடும்படி கூறப் புகழேந்தியார்,

"மானவ ரானந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கானவ ரானந்த வெரியுந் தழலுங் கனைகடலின்
மீனவ ரானந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தானவ னைக்கதி ரோனுதய முந்தார் மன்னனே"

என்று ஒட்டக்கூத்தர் வெட்கமடையும்படி பாடினர். அரசன் புகழேந்திப் புலவரிடம் மிக்க மதிப்புக்கொண்டவனாயிருந்தும் ஒட்டக்கூத்தரிடம் உள்ள அபிமானத்தால் புலவரைச் சிறைமீட்கவில்லை.

சோழனிடம் பரிசு பெறவரும் புலவர்களில் தாம்கேட்ட கேள்விகளுக்கு விடை பகராதவர்களை ஒட்டக்கூத்தர் சிறையிலடைப்பித்துத் துன்புறுத்துவது வழக்கம். இங்ஙனம் அடைபட்ட புலவர்களிற் சிலரைப் புகழேந்திப் புலவர் ஆராய்ந்தெடுத்து அவர்களைக் கல்வியில் வல்லவராக்கினர். அவர்களுள் குயவன், வண்ணான், அம்பட்டன், கம்மாளர்கள் முதலியோர், நவராத்திரிகாலத்தில் வழக்கப்படி அரசனுடைய சபைக்குச் சென்று ஒட்டக்கூத்தர் கேட்ட கேள்விகளுக்குத் தக்கபடி விடையளித்து அவரை அவமதித்து மீண்டனர். இச்செய்திகளையெல்லாம் அறிந்த சோழராசன் மனைவி புகழேந்தியை அரசன் சிறையினின்றும் விடுதலை செய்யாமைக்கு மிகவும் வருத்தமுற்று, அரசன் பள்ளியறைக்கு வரும்போது வாயிற்கதவை மூடித் தாழிட்டுக்கொண்டனள். அரசன் பலவாறு இனிய மொழிகள் கூறியும் மனைவி கதவைத் திறவாமையால் அவளுடைய ஊடலைத் தணிக்கும்பொருட்டு ஒட்டக்கூத்தரை யனுப்பினான். கூத்தர் போய் ஒரு பாடலைப் பாட, அரசி, "ஒட்டக்கூத்தர் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்" என்று மற்றொரு தாழ்ப்பாளையும் போட்டனள்.

இது புகழேந்தியைச் சிறையிலடைத்தமையால் வந்ததென அரசன் அறிந்து புலவரைச் சிறையினின்றும் விடுவித்து மனைவியின் கோபத்தைத் தணிக்கும்பொருட்டு அவரை அனுப்பினான். அவர் அங்ஙனமே சென்று இரண்டு கவிகள் பாடி அரசியின் கோபத்தைத் தணித்தனர். அதுமுதல் அரசன்

புலவரை மிகவும் பெருமையாக நடத்திவந்தான். ஆயினும் புலவர் சோழராசனிடம் இருக்க விருப்பங்கொள்ளாமல் முரணை நகரிலிருந்த சந்திரன் சுவர்க்கியென்னும் சிற்றரசனைச் சார்ந்து அவன் வேண்டுகோட் கிணங்கி நளவெண்பா என்னும் நூலைச் செய்து அவனிடம் பரிசுபெற்று வாழ்ந்திருந்தனர்.

நளவெண்பாவையன்றி, செஞ்சிக்கலம்பகம், உவமான சங்கிரகம், இரத்தினச்சுருக்கம் என்னும் நூல்களையும் சில தனிச் செய்யுட்களையும் புகழேந்திப் புலவர் இயற்றியிருக்கின்றனர்.



## 17. தேசிங்குராஜன்.

வெகுகாலத்துக்குமுன் செஞ்சிக் கோட்டையில் அரசாட்சி செய்துகொண்டிருந்த அதிபதிகளுள் தேசிங்கு ராஜன் என்பவன் மிகவும் பிரசித்திபெற்றவன். அவ்வதிபதிகள் யாவரும் ஆற்காட்டு நவாபின் அதிகாரத்துக்கு உட்பட்டு டில்லி சக்கரவர்த்திக்குக் கப்பம் கட்டிக்கொண்டு வந்தார்கள் ஆனல் அவர்களுள் ஒருவனுடைய அரசாட்சியில் கப்பம் செலுத்தப்படவில்லை. கப்பத்தை வாங்குவதற்கு அப்போது இருந்த ஆற்காட்டு நவாபுக்குத் திறமையில்லாமற் போகவே டில்லி சக்கரவர்த்தியானவர் செஞ்சி யதிபதியோடு போர்புரியும்படி சைரோப்சிங் என்பவனை அனுப்பி அவனையே செஞ்சிக்கு அதிபதியாக நியமித்தார். அவன் செஞ்சியிலிருந்தகாலத்தில் மிகவும விலை உயர்ந்த குதிரையொன்று டில்லி சக்கரவர்த்திக்குக் கிடைத்தது ஆனல் ஒருவருக்கும் அதனை அடக்கி அதன்மேல் ஏற முடியவில்லை. அப்போது டில்லி சக்கரவர்த்தி மிக்க வருத்தமுற்று, குதிரையை வசப்படுத்த யார் யார் முயன்று தோற்றுப்போனர்களோ அவர்களையெல்லாம் சிறையில் அடைப்பித்தார். சைரோப்சிங்கும் அப்படியே டில்லிக்குப் போய்க் குதிரையை அடக்கமுடியாமல் சிறையில் அடைபட்டான் கர்ப்பவதியாயிருந்த அவனது [illegible] அவன் டில்லிக்குப் போயிருந்தபோது ஓர் ஆண் குழந்தையை ஈன்றனள். அக்குழந்தையே பிற்காலத்தில் தேசிங்கு ராஜனென்று புகழ் பெற்றவனானன்.

அந்தக் குழந்தை நன்றாக வளர்ந்துவந்து தேகவன்மையிலும் தைரியத்திலும் அழகிலும் சிறப்புற்று விளங்கினான். அவனைப்பற்றிக் கேள்வியுற்ற சக்கரவர்த்தி அவனை டில்லிக்கு வரவழைத்து மேற்கூறிய குதிரையை அடக்கும்படி கட்டளையிட்டார். சக்கரவர்த்தியின் கட்டளைப்படியே குதிரையை அடக்கி அதன்மேல் ஏறி உட்கார்ந்தான். அப்போது சக்கரவர்த்தி எல்லையற்ற மகிழ்ச்சியடைந்து அவனுடைய தகப்பனைச் சிறையினின்றும் விடுவித்து தேசிங்கு ராஜனுக்கு அந்தக் குதிரையையும் வேறு விசேஷமான மரியாதைகளையும் அளித்து, "இனி நீயே செஞ்சியைச் சுதந்தரமாக ஆண்டு கொண்டிருப்பாயாக. நமக்குக் கப்பம் கட்டவேண்டியதில்லை" என்று சொல்லியனுப்பினார்.

ஆற்காட்டு நவாபுக்கு இவ்விஷயம் தெரிந்திருந்தும் சக்கரவர்த்தியினிடத்தில் தேசிங்கு ராஜனாகிய சிறு பையன் விசேஷமான அபிமானத்தையும் கௌரவத்தையும் சம்பாதித்துக் கொண்டு வந்துவிட்டானே என்று பொறாமைகொண்டு அவனை எளிதில் அடக்கிவிடலாம் என்றெண்ணிக் கப்பம் கேட்டான். அப்போது தேசிங்கு, "நமக்கு மேலான சக்கரவர்த்தி சுதந்தரமாக ஆளும்படி எனக்கு அதிகாரம் கொடுத்ததை நீ அறியாயோ" என்று சொல்ல நவாபு அதிகார பத்திரத்தைக் காட்டும்படி கேட்டான். ஆனால் எழுத்துமூலமான சாஸனம் ஒன்றும் தேசிங்கு ராஜனிடம் இல்லை. அதனையறிந்த நவாபு அதிகார பத்திரத்தைக் காட்டும்படி தேசிங்கு ராஜனை மீட்டும் வற்புறுத்திக் கேட்கவே தேசிங்கு ராஜன் கடுங்கோபமடைந்து தன்னோடு யுத்தம் செய்து கப்பத்தைப் பெற்றுக்கொண்டு போகலாம் என்று சொல்லியனுப்பிவிட்டான். அதனைக்கேட்ட நவாபும் சண்டைக்கு வேண்டிய முயற்சிகளைச் செய்துகொண்டிருந்தான். ஒன்றிற்கும் பயப்படாத தேசிங்கு வழக்கம்போல் ராஜ்யாதிகாரத்தை நடத்தி வந்தான்.

இப்படியிருக்கையில் ஒருநாள் சத்துருக்கள் வந்து கொண்டிருப்பதைச் சிலர் தேசிங்[illegible] சொல்ல அவன் அதனைச் சிறிதும் [illegible]கொள்ளாமல் பூஜையிலேயே கவனமாக இருந்தான். மறுபடியும் கோட்டைக்கு மிகவும் சமீபத்தில் பகைவர்கள் வந்துவிட்டார்கள்

என்று சில தூதர்கள் சொல்ல அப்போதும் தேசிங்கு ராஜன் சும்மா இருந்தான். உடனே அவனுடைய சிற்றப்பன் முதலான சில பெரியோர்கள் அவனிடம் வந்து எவ்விதத்திலாவது நவாபுடன் சமாதானம் செய்துகொள்ளும்படி சொன்னார்கள். சமாதானம் என்ற வார்த்தையைக் கேட்கவே தேசிங்கு ராஜன் கோபாவேசங் கொண்டான். பூஜையைச் சீக்கிரத்தில் முடித்துவிட்டு உடனே யுத்தத்துக்குப் புறப்பட்டான். அப்போது அவன் மனைவி அவனைச் சண்டைக்குப் போகவேண்டாமென்று தடுத்துப் பார்த்தாள். அவன் கேட்கவில்லை பின்பு அவள் அவனை நோக்கி "நீர் உண்மையான வீரனைப்போல் மார்பில் காயத்தோடு திரும்பி வந்தால் உம்மை மரியாதையாக ஏற்றுக்கொள்வேன். முதுகில் காயத்தோடு திரும்பினால் கோட்டைக்குள்ளேயே வரவொட்டாமல் தடுப்பேன்" என்று சொன்னாள். அவளுடைய வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டு தேசிங்கு ராஜன் தனக்கு இஷ்டதெய்வமாகிய ரங்கநாத ஸ்வாமியினிடம் சென்று, சண்டையில் தனக்கு வெற்றியுண்டாகும்படி அருள் புரிய வேண்டுமென்று பிரார்த்தித்தான். அன்றைத்தினம் யுத்தத்துக்குப் போகாமல் மறுநாள் போகலாம் என்று சுவாமி பலவாறு புத்திமதி சொல்லவும் அவன் ஒரே பிடிவாதமாக அப்பொழுதே போகவேண்டுமென்று சொன்னமையால் சுவாமி அவனிடம் வெறுப்புற்று அவனைப் பார்க்க மனமில்லாமல் முகத்தைத் திருப்பிக்கொண்டார். செஞ்சிக்கு நான்குமைல் தூரத்திலுள்ள பத்தப்பட்டு என்னும் ஊருக்கருகே யுத்தம் நடந்தது. முதலில் தேசிங்கு ஜயம் பெற்றான். நவாபைக் கொன்றுவிட்டதாக எண்ணித் தன் கோட்டைக்குத் திரும்பி வருகையில் நவாபு கொல்லப்படவில்லை என்று தெரிந்தது. பின்பு யுத்தகளத்துக்குத் திரும்பிச் சென்று நவாபோடு கைகலந்து போர் புரிய ஆரம்பித்தான். அப்போது மறைவில் ஒளிந்துகொண்டிருந்த ஒருவன் வஞ்சகமாகத் தேசிங்கைச் சுட்டுவிட்டான்.

அது தெரிந்த அவனுடைய மனைவி அவனோடு உடன் கட்டை யேறினாள். அவளுடைய பெயர் என்றைக்கும் இருந்துவரும்படி ஆற்காட்டுக்குச் சமீபத்திலுள்ள ஓருருக்கு ராணிப்பேட்டை என்று நவாபு பேர் கொடுத்தான்.



# 18. நம்மைப் படைத்தவர் கடவுள்.

நமது தலைக்குமேலே வெகுதூரத்துக் கப்பால் நீல நிறமுடைய பெரிய ஆகாயமானது எல்லையில்லாத் தூரம் இடமகன்று பரவியிருக்கின்றது. அந்த இடத்தின் ஆரம்பம் இன்னதென்பதும் முடிவு இன்னதென்பதும் நமக்குத் தெரிய வில்லை. நாம் அதனிடம் செல்லக்கூடிய வன்மையைப் பெற்று அதன் வழியே பிரயாணம் செய்வோமாயின் நாம் எவ்வளவுதூரம் போய்ப் பார்த்தாலும் ஆரம்பத்தில் அது நமது கண்ணுக்கு எவ்வாறு இடமகன்றதாகத் தோற்றுமோ அவ்வா றேதான் முடிவிலும் தோற்றும். இத்தன்மைத்தான இடம கன்ற பெரிய வானத்தினின்றும் எவ்வித ஒலியேனும் உண்டா கின்றதா? ஆம்; உண்டாகின்றது. ஆயினும் அது பேரறிவாள ருடைய செவிக்கே எட்டுவதாகும்.

உலகத்தின் கண்ணேயுள்ள பொருள்கள் எல்லாவற்றிலும் மேம்பட்டு விளங்குவது சூரியன். அது தினந்தோறும் காலை யில் பெரிய தழற்பிழம்புபோல் உதித்து இவ்வுலகம் முழுவ திற்கும் வெப்பத்தையும் ஒளியையும் அளித்து ஆகாயவழி யே செல்லுகின்றது; நமது கண்ணாற் பார்க்க முடியாதவாறு அவ்வளவு ஒளியுடையதாகவும், மேன்மையுடையதாகவும் இருக்கின்றது. நாம் அதனை விடாமல் உற்று நோக்குவோ மாயின் நமது கண் குருடாகிவிடும். அது பகற்பொழுதெல் லாம் பிரகாசித்துக்கொண்டிருந்து இரவு முழுவதும் மறைந்து நிற்கிறது. எத்தனையோ பல்லாயிர வருஷங்களாக அது தவ றுமல் இங்ஙனம் செய்துவருகிறது. இத்தகைய பெருமை வாய்ந்த சூரியன் ஆகாயவழியே செல்லும்போது சத்தமொன் றும் செய்வதில்லையா? செய்வதுண்டு; ஆனால் அது மூதறிஞர் க்கே செவிப்புலனாகும்.

இரவில் சூரியன் மறைந்தபிறகு சந்திரன் தோன்றுகிறது. நாம் இரவிற்காணும் பொருள்கள் எல்லாவற்றிலும் அது சிறந் தது. சூரியன் பகலுக்கதிபதி; சந்திரன் இரவுக்கதிபதி. சந்திரன் தனது குளிர்ந்த வெண்மையான நிலவை எவ்விடத் தும் வீசுகிறது. ஒருமாதத்தின் பாதிநாட்களில் அது நாளுக்கு நாள் அதிக ஒளி வீசிக்கொண்டிருந்து மற்றப் பாதிநாட்களில் நாளுக்குநாள் குறைந்த ஒளியைக் கொடுத்துவருகின்றது.

இத்தகைய அழகிய சந்திரனுக்குக் குரல் இல்லையா? இருக்கின்றது ஆனால் அது சிற்றறிவுடையோர் செவிக்கு எட்டாது.

இரவிலே நக்ஷத்திரங்களும் ஆகாயத்தில் நிறைந்து விளங்குகின்றன அவை வானத்தினிடம் தோன்றும் வைரமணிகள்போற் காணப்படுகின்றன. அவற்றுள் ஒவ்வொன்றும் உலகங்களாற் சூழப்பெற்ற ஒவ்வொரு பெரிய சூரியனாகும். ஆயினும் அவை நெடுந்தூரத்துக் கப்பாலிருப்பதால் நமது கண்ணுக்கு மிகவும் சிறிய புள்ளிகள்போலவே தோன்றுகின்றன ஒவ்வொரு நக்ஷத்திரமும் இரவில் ஒளிவீசிக்கொண் டிருக்கும்பொழுதெல்லாம் பாடிக்கொண்டேயிருக்கிறது. ஆனால் அப்பாட்டைப் பேரறிவாளர்கள்மட்டுமே கேட்குந திறமையுடையவர்கள்.

இங்ஙனமாயின், ஆகாயமும் சூரியனும் சந்திரனும் நக்ஷத்திரங்களும் என்ன சொல்லுகின்றன? நமது காதாற் கேட்கக்கூடிய ஒலியொன்றையும் செய்யாமலே இவை சுற்றிச்சுற்றி வருகின்றனவென்பது உண்மையே. நெடுங்காலமாக இவை யாவும் இங்ஙனமே சுற்றி வருகின்றன ஆயினும் நமது மனத்தின்கண்ணேயுள்ள ஞானமாகிய செவியானது இவை செய்யும் ஒலியை மிகவும் நன்றாய்க் கேட்கும்

சூரியன் தன்னை யுண்டாக்கிய கடவுளின் மேன்மையை நன்றாக விளக்குகின்றது. கடவுள் மிகவும் பெரியவரென்றும், எங்கும் நிறைந்தவரென்றும், மிகவும் நல்லவரென்றும் அது நமக்குக் கூறுகின்றது. அது, "மனிதர்காள்! எல்லோரும் என்னைப் பாருங்கள்; யானே இவ்வளவு மேன்மையுடையேனாயின் என்னையும் என்னைப்போன்ற வேறு பல்லாயிரம் சூரியர்களையும் உண்டாக்கிய கடவுள் என்னிலும் எவ்வளவு மேன்மையுடையவரா யிருத்தல்வேண்டும்! உலகம் முழுவதற்கும் யான் ஒளியை அளிக்கின்றேன் என்னையன்றி வேறு யாரும் அழகிய உலகத்தையும், மலர்களையும், மரங்களையும், பறவைகளையும், வயல்களையும் காணமாட்டான். நான் வெப்பந் தருகின்றேன். நான் இல்லாவிட்டால் மனிதனாவது, பிராணியாவது உயிரோடிருத்தல் அசாத்தியமாகும். மரங்களும் வளரமாட்டா. என்னுடைய வெப்பத்தால் நான் கடல்நீரை

என்பால் இழுத்துக்கொண்டு பிறகு பூமியினமீது குளிர்ந்த மழையாகப் பொழிகின்றேன். என்னை இவ்வாறு செய்விப்ப வர் கடவுள். ஒரு கணப்பொழுதேனும் என்னை அவர் கவனி யாராயின் என் ஒளி போய்விடும் நான் இருக்குமிடமும் ஒரு வர்க்கும் தெரியாது இயற்கைப் பொருள்கள் யாவும் மறைந்து போம் மனிதர்களே! நீங்கள் இவ்விஷயத்தை நன்றாக ஆரா ய்ந்து பாருங்கள். மகா மேன்மை பெற்றவராகிய கடவுளை வழிபடுங்கள் அவரிடம் அன்பு பாராட்டுங்கள்" என்று சொல்லுகின்றது சந்திரனும், நக்ஷத்திரங்களும், வானமும் ஆகிய யாவும் இந்த ஒரு விஷயத்தையே கூறுகின்றன. அவை எப்பொழுதும் பாடிக்கொண்டிருக்கும் பாடல் அறி விலிகள் காதுக்கும் தீயோர் காதுக்கும் கேளாது நல்லோ ரும் அறிவுடையோரும் அப்பாட்டைக் கேட்பார்கள் பிள்ளை களே! நீங்கள் இன்றிரவு வெளியே போய் நக்ஷத்திரங்கள் பாடு வதைக் கவனமாய்க் கேளுங்கள் நீங்கள் நற்குணமுள்ளவர் களாகவும் அறிவுடையவர்களாகவும் இருந்தால் அப்பாடல் உங்களுடைய காதில் விழும்.



## 19. நல்லொழுக்கம்.

உலகத்தில் பிறருடைய மனததுக்கு ஒவ்வாதபடி நடப் போர் பலருளர் யாவராலும விரும்பப்படுவோராக நடப் போர் மிகச் சிலரேயுளர் இந்த வேறுபாட்டிற்கு யாதுகார ணம்? அவரவர்களுடைய பொதுக்குணமே சிறிதளவு காரண மாக இருப்பினும் அவரவர்களுடைய ஒழுக்க இயல்புகளே பெரும்பாலும முக்கியமான காரணமாகும். இறுமாப்பும் தீய வொழுக்கமும் உடையாரை அனைவரும வெறுப்பர். அடக்கமும் நல்லொழுக்கமும் உடையவர்கள் யாவராலும் விரும்பப்படுவார்கள்.

எந்த நாட்டினரிடத்தும் சில மேன்மைக் குணங்களும் உண்டு; குறைபாடுகளும் உண்டு. முற்காலத்தில் இந் நாட்டினர் பிறரை மரியாதையாக நடத்துவதில் மிகவும் பெயர் பெற்றிருந்தார்கள். இக்காலத்தில் அந்த நற்குணம் சிலரிடம் காணப்படவில்லையென்று பலர் குறை கூறுகின்றனர். தொன்

றுந்தொட்டு நல்ல பழக்கத்திலே இருப்பவர்கள் பெரும்பா லும் பிறரிடத்து மரியாதையாகவே நடப்பார்கள். திடீரென்று உயர்ந்த நிலைக்கு வருபவர்கள் தங்களுடைய பழைய நிலைமை களை மறந்து அடிக்கடி இழிவான தன்மைகளை வெளிக்காட்டு வார்கள். இங்கிலாந்திலுள்ள சர்வகலாசாலைகளிற் படிப்ப தால் மாணாக்கர்கள் தனவான்களுக் கிருக்கத்தக்க நற்குணங் களையடைகிறார்கள். நற்குணங்களைக் கற்பித்தலே அவ்விடத் தில் சிறந்த போதனாமுறையாகக் கருதப்பட்டு வருகின்றது. பிறரிடம் அடங்கி மரியாதையாக நடக்கும் குணமே நற்கல் விக்கு அறிகுறியாகும்.

நல்லொழுக்கத்தைப் பயிலவேண்டிய இடம் நமது இல்ல மேயாகும். "தந்தை தாயரை வந்தித்தொழுக" என்பதே முதற்கட்டளையாகும். "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்றனர் ஔவையாரும். கல்விப்பேற்றை அடைந் திராத சில பெற்றோர்கள் தங்கள் மக்களெல்லாம் அவ்வனுகூலத் தை யடையும்வண்ணம் தங்கள் பொருளனைத்தையும் செல விடுகின்றனர். இத்தகைய மாந்தர் விசேஷமான மரியாதை க்கு உரியரல்லரோ! வயதுக்கேற்ற கௌரவத்தை அவர்களுக் குக் கொடுக்கவேண்டுமல்லவா?

தன் கீழிருப்பவர்களிடம் ஒரு தனவான் நடந்துகொள் ளும் நடையே அவனுடைய குணத்தை அறிந்துகொள்ளுவ தற்குத் தக்க கருவியாகும். காலஞ்சென்ற வெல்லிங்டன் பிரபுவானவர் ஆங்கிலேய நாட்டில் படைத்தலைமைபூண்டு மிக்க புகழ்பெற்ற போர்வீரராயினும் ஒருகாலத்தில் அவ ரிடம் வேலையிலிருந்த ஏவலாளனொருவன் தன்னுடன் சிறிது தேயிலைக்கஷாயம் பருகவேண்டுமென்று அவரைக் கேட்டுக் கொண்டகாலத்து அவர், "நல்லது! உன் இஷ்டப்படியே யாகட்டும்" என்று விடை பகர்ந்தார். அவரைப்போலவே யாவரும் தாழ்ந்தோரிடத்தும் மரியாதை காட்டல் வேண்டும். சாதியையும் பிறப்பையும் கருதி ஒருவரையும் இழிவாக நடத்தலாகாது.

நீங்கள் பிறரிடம் சென்று ஏதேனும் ஒன்றைக் கேட்க விரும்பினால், "தயவு செய்யுங்கள்" என்று சொல்லவேண்டும். பிறர் உங்களுக் கேதேனும் கொடுத்தாலும் அல்லது வேறுதவி

செய்தாலும் அவர்களுக்கு நன்றி கூறவேண்டும். பெரியோர்களிடம் பேசிக்கொண்டிருக்கையில் "ஆமாம்" அல்லது "இல்லை" என்றுமட்டும் சொல்லாமல் "ஆமாம் ஐயா, இல்லை ஐயா" என்று பேசவேண்டும். பிறர் பேசிக்கொண்டிருக்கையில் நீங்கள் குறுக்கிட்டு ஒன்றும் சொல்லலாகாது. அவர்கள் சொல்லும் விஷயங்களுள் உங்கள் மனத்திற்கு ஏதேனும் தவறாகத் தோற்றுமாயின், சமயம் வாய்க்கும்போது மிக்க மரியாதையுடன் திருத்தவேண்டும். கனவான்கள் பேசும்போது மரியாதைச் சொற்களை உபயோகித்தே ஒருவரோடொருவர் பேசிக்கொள்வார்கள். பல ஜனங்களின் மத்தியில் திடீரென்று எழுந்து உரத்த குரலுடன் பேசுவதும் சில சமயங்களில் மரியாதைக் குறைவாக எண்ணப்படுகிறது.

நீங்கள் மரியாதையுடன் பழகவேண்டிய பெரியோர்களைக் காணும்போதெல்லாம் அவர்களுக்கு வந்தனஞ் செலுத்தவேண்டும். நல்லொழுக்கமுள்ளோர் புதிதாக ஒரு வீட்டுக்குள் நுழையும்போது தங்கள் பாதரட்சைகளைக் கழற்றி ஒரு மூலையில் விட்டுவைப்பார். வெளியே புறப்படும்போது தான் அவற்றை மறுபடி காலில் மாட்டிக்கொள்வர். பலர் கூடிய சபையின்கண்ணே புதிய மனிதனொருவன் வருவானாயின் அவனுக்கு ஆசனமளித்தல் சபையிலுள்ளோருக்கு முக்கிய கடமையாகும். தம்மினும் பெரியோர் நிற்கத் தாம் மட்டும் உட்கார்ந்திருத்தல் இளைஞர்க்கு அவமானமாம். பலர் நடுவில் எச்சிலுமிழ்தலும் அதிகமாக இருமுதலும் மிகவும் இழிந்த காரியங்களாகக் கருதப்படுகின்றன. அயல் தேசத்தார் மத்தியில் நாம் இருக்கும்படி நேரிட்டால் அவர்களுடைய நல்லொழுக்க முறைகள் இன்னவையென்று கண்டறிந்து அவற்றின்படி நடக்கவேண்டும். பிறருக்குத் துன்பமாவது மனவருத்தமாவது அருவருப்பாவது உண்டாகாதபடி ஒழுகுதலே நல்லொழுக்கத்துக்குற்ற சிறந்த விதியாகும்.

இவ்வுலகின்கண் ஒருவன் அடையும் இன்பம் அவனுடைய ஒழுக்க இயல்புகளுக்குத் தக்கபடி இருக்கின்றது. தம்முடைய வாழ்க்கை நலங்களையெல்லாம் தமது மரியாதைக் குறைவான நடையில் அழித்துக்கொண்டோர் பலர்; மரியாதையோடு கூடிய நடையே அநேகர் மேன்மையடைந்தமைக்கு

முக்கிய கருவியாக இருத்தலை நாம் பார்த்துவருகிறோம். ஆனால் மரியாதையென்பது உள்ளத்தினின்றே உள்ளபடி வெளிப்படவேண்டும். வெளிக்குமட்டும் மரியாதை காட்டி நடித்தல் பயனற்றது. அன்பும் அனுதாபமும் இல்லாத இடத்துக் கும்பிடுதலும், தலைவணக்கமும், நயமொழிகளும் பயன் படுவனவல்ல.



## 20. ஒளி.

ஒளியானது இன்னதென்பதை நாம் அறியோமாயினும் அதைப்பற்றிய பல விஷயங்கள் நமக்குத் தெரியும். நாம் பொருள்களைக் கண்ணுறுவதற்கு உதவியாக இருப்பதே ஒளியின் முக்கியமான பயனாகும். சூரியனையாவது விளக்கின் சுடரையாவது மின்னலையாவது மின்மினிப் பூச்சியையாவது நாம் நோக்குங்காலத்தில் அவற்றால் உண்டாக்கப்படும் ஒளியானது நமது விழிக்குள் செல்லுகின்றது. ஆகவே நாம் அவற்றைப் பார்க்கிறோம்.

மேற்கூறிய பொருள்கள் ஒளியை உண்டாக்குவனவாதலால் அவ்வொளி நமது கண்களுக்கு நேராக வருகின்றது. ஆனால் ஒளியை உண்டாக்காத பல பொருள்களையும் நாம் பார்த்துவருகிறோம். நாம் காணும் வீடுகளும், மரங்களும், மற்றுமுள்ள பல பொருள்களும் ஒளியை உண்டாக்குவன வல்ல அப்படியிருக்க எங்ஙனம் அவற்றை நாம் பார்க்கிறோம்? அவற்றின்மேல் பிரகாசித்து விழும் ஒளியானது அவற்றினின்றும் தெறித்து நமது கண்ணுக்கு வருகின்றது. இங்ஙனம் தெறித்துப்போகும் ஒளியின் செயலுக்குப் பிரதிபலித்தல் என்று பெயர்.

பிரதிபலித்தலைப்பற்றி நாம் அறியத்தக்க விஷயங்கள் பல உண்டு. ஒளியானது அடிக்கடி ஒருதரத்துக்குமேலும் சில சமயங்களில் பலதரமும் பிரதிபலிக்கும். ஒரு மரத்தை ஒரு கண்ணாடியிற் காணும்போது ஒளியானது இரண்டுமுறை பிரதிபலிக்கின்றது. முதலில் மரத்திலிருந்து கண்ணாடிக்கும், பிறகு கண்ணாடியிலிருந்து நமது கண்களுக்கும் பிரதிபலிக்கின்றது. ஆகையால் நமது முகத்தைக் கண்ணாடியிற்

காணும்போது ஒளியானது முதலில் முகத்தில் விழுந்து பிறகு கண்ணாடியிலும் அதன்பிறகு நமது கண்களிலும் பிரதிபலித்து நமது முகத்தின் வடிவத்தைக் காட்டுகின்றது.

ஒவ்வொரு பொருளும் ஒளியைத் திருப்பி யனுப்புகின்றது. ஆனால் சில பொருள்கள் மற்றவற்றைக்காட்டிலும் அதிகமாகத் திருப்பி யனுப்புகின்றன. கரடு முரடான பொருள்கள் நன்றாய்ப் பிரதிபலிப்பதில்லை. காற்றில்லாதபோது ஒரு தடாகத்து நீரின் அருகேயுள்ள வீடுகளும், மரங்களும் எவ்வளவு நன்றாய்த் தோற்றுகின்றன! நன்றாய்த் தேய்த்து மெருகிடப்பட்ட பொருள்கள் யாவும் நன்றாகப் பிரகாசிப்பதை நீங்கள் அறிவீர்கள். அவை அங்ஙனம் பிரகாசிப்பது மிகுந்த ஒளியைத் திருப்பி யனுப்புவதனாலேதான்.

இவ்வுலகிலுள்ள ஒளியிற் பெரும்பாகம் சூரியனிடமிருந்து வருகின்றது. அது வெப்பத்துடன் கலந்திருக்கிறது. சூரிய கிரணங்கள் கூட்டமாக வருகின்றன. சூரியனுக்கும் பூமிக்கும் உள்ள தூரம் அநேகலக்ஷம் மைல் இருக்கும். சூரியனிடமிருந்து பூமிக்கு ஒளியானது வந்து சேர எட்டு நிமிஷங்களுக்கு மேலாகின்றது.

ஒளி மிக்க வேகமுள்ளது. ஒலியைக்காட்டிலும் அது மிகவும் வேகமாகச் செல்லுகின்றது. தூரத்தில் ஒரு வெடி வெடிக்கும்போது நாம் முதலில் ஒளியைக் காண்கிறோம். சிறிதுநேரம் பொறுத்தே வெடியின் சத்தம் நமது காதில் விழுகின்றது. ஒலி நமது காதண்டை வந்து சேருவதற்குள்ளாக ஒளியானது நம் கண்ணுக்குள் வந்து விடுவதுதான் இதற்குக் காரணம். இங்ஙனமே, மின்னலைக் கண்டபின்னரே இடிபோசையை நாம் கேட்கிறோம். இதனைக் கவனித்தே, ஒலியும் ஒளியும் இவ்வளவு வேகமுடையன என்னும் விஷயம் கண்டுபிடிக்கப்பட்டது. கோடைக்காலத்தில் ஒரு கடிகாரத்தின் உதவியினால் இடி இவ்வளவு தூரத்திலுள்ளதென்பதை நாம் அறிதல் கூடும்.

ஒலியைக்காட்டிலும ஒளி விரைவிற் செல்லுவதல்லாமல் அதிக தூரமும் செல்லுகின்றது. நம் செவிக்கெட்டாத தூரத்தில் இடி யிடித்தல் கூடும் ஆனால் அவ்விடத்துண்டாகும் மின்னலைமட்டும் நாம் காண்போம்.

ஒளியானது மிகவும் வியக்கத்தக்க மைதீட்டுங் கருவியாக இருக்கின்றது. மனிதர்களுடைய கண்களிலும், மற்றப் பிராணிகளுடைய விழிகளிலும், கண்ணாடிகளிலும், மெருகிட்ட பொருள்களிலும் எண்ணிறந்த உருவங்களை அது தோற்றுவிக்கின்றது. உலகிலுள்ள பல்வேறு நிறங்களுக்கும் சூரியனுடைய ஒளியே முக்கிய காரணம்.

செடிகளையும் பிராணிகளையும் வளரச்செய்வது ஒளியின் மற்றொரு பயனாகும். செடிகள் யாவும் ஒளியை விரும்புவன போன்று அதனையே நோக்கி நிற்கும். அவற்றின் வளர்ச்சிக்கு ஒளி இன்றியமையாதது. இருட்டிலுள்ள ஒரு செடியைப் பார்த்தால் இதன் உண்மை விளங்கும். வெண்மையான நிறத்துடன் வலிமையின்றித் தோன்றும் செடிகள் வலிமையுடன் நன்றாய் வளர்வதற்குக் காற்றைப்போலவே ஒளியும் அவசியமாகும். பிராணிகளுக்கும் இப்படியே. சூரியனுடைய ஒளி இல்லையானால் புற்பூண்டுகளும் எல்லாப் பிராணிகளும் உயிர் துறந்து அழியுமென்பது திண்ணம்.



## 21. புத்தருடைய உபதேசங்கள்.

புத்தருக்கிருந்த முக்கியமான கொள்கையாவது, "நாம் விதைக்கின்ற விதைக்குத் தக்கவாறு பலனையடைவோம்; மனிதன் செய்கின்ற ஒவ்வொரு பாவச்செயலுக்கும் ஏற்றவாறு அவன் தண்டனையடைகிறான். மனிதன் செய்யும் ஒவ்வொரு நற்செயலும் சிறிது பாவத்தையாவது போக்குகின்றது. நம்மைச் சுற்றிலும் இருக்கும் நோயும் வருத்தமும் முற்பிறப்பிற் செய்த தீமையின் பலனாகும். தூயராக இருந்து பிறரை நேசித்து அவருக்கு நன்மைசெய்தலே, நமது கடமை. அவ்விதம் செய்தால் முன்பு புரிந்த பாவங்கள் ஒழியும்" என்பதே. இக்கொள்கையையே அவர் பிறருக்கு அறிவித்தார். புத்தர் முத்தியடைந்தபின்னர் ஆயிரமாண்டளவும் பௌத்தசமயமே தலையெடுத்து இந்துதேசத்தில் முக்கியமான மதமாயிருந்தது. சிறிதுகாலம் சென்றபின்னர் இத்தேசத்தினின்றும் அது நீங்கிற்று. இந்துக்கள் பௌத்தமதக் கொள்கைகள் பலவற்றைத் தங்கள் சமயத்தில் தழுவிக்கொண்டார்கள். ஆசியாக்கண்டத்தி

துள்ள சீனு, திபெத் முதலான நாடுகளில் இப்போதும் புத்த சமயமே முக்கியமுடையதாயிருக்கின்றது. உலகத்திலுள்ள ஜனங் களில் ஏறக்குறையப் பாதியளவுக்கு மேற்பட்டவர்கள் பௌத் தசமயிகள் என்று கணக்கு ஏற்பட்டிருக்கின்றது. புத்த ருடைய நல்லுபதேசங்களுள் சில பின்வருவனவாம்:—

1 மனிதன் ஒருவனே தூயன்; அருளிற்கும் அன்பிற் கும் அவன் இருப்பிடமானவன்

2. பிறர் உன்னிடம் எவ்விதம் நடந்துகொள்ளவேண்டு மென்று விரும்புகின்றுயோ அவ்விதமே நீ பிறரிடம் நடந்து கொள்

3 உலகவாழ்க்கையின் பயன் பிறருக்கு உதவிபுரிதலே யாம்

4. பிறருக்கு உதவிசெய்யும்பொருட்டே உன் பொருள் உனக்கு உரியதாயிற்றென்று நினை.

5. உன்னுடைய உடலை ஒருவன் வாள்கொண்டு துண்டந் துண்டமாக வெட்டப் புகுந்தாலும் நீ வன்சொல் வழங்குத லாகாது.

6 சத்தியவிரதமும் நல்லொழுக்கமும உள்ளவன் தன் னைக் கொல்ல வருகின்றவனையும் மன்னித்துவிடுகிறான்.

7. தீமை செய்வார்க்கும் நீ நன்மையையே நாடு அதனால் தீமை செய்வோரது மனமே அவரை வருத்துதலின், அவர்கள் தீமை செய்தலை ஒழித்து நேசராவர். ஆகவே பாவமும் துக்க மும் அதிகமாய் விளையா

8. எறும்பினும் கடையாயதெனினும ஒரு பிராணியைக் காப்பாற்றுவது மிக்க புண்ணியம அதனைக் கொல்வது மகா பாதகம்.

9. சத்தியமும் சீலமும் உடையவனே சுகத்துடன் வாழ் கிறான். இவ்வுலகத்தில் எவரையும் நேசித்து எவருக்கும் நன்மையை நாடுகின்றவனே சீலனாவன்.

10. உன்னுடைய தொழில்களவாக மட்டும் தூயனாக இருத்தல் போதாது. எண்ணமும் வாக்கும் அங்ஙனமே யிருத்

தல்வேண்டும். ஒருவருக்கும் கேடு நினையாதே. கொடுமை சொல்லற்க; தீமை செய்யற்க. நினைப்பதும், சொல்வதும், செய்வதும் ஒரு தன்மையாகவும் நன்மையாகவும் இருத்தல் வேண்டும்.

11. தன் பொறிகளையும் புலன்களையும் எவன் அடக்கி ஆள்கின்றானோ அவனே வெற்றி பெறுபவன்; ஆயிரம் வீரரை வென்றவரினும் அவனே மேம்பட்டவன்.

12. வாய்மை கடைப்பிடி. பொய்மை யகற்று.

## 22. உபயோகமான சில மரங்கள்.

இந்தியதேசத்தில் உள்ள மற்ற இடங்களைக்காட்டிலும் மேற்குக் கரையிலுள்ள மலையாளத்தில் மரங்கள் மிகவும் அதிகமாக உண்டாகின்றன. அதற்குக் காரணம் அவ்விடத்திலுள்ள நிலவளமே. எந்த இடத்தைப் பார்த்தாலும் சோலைகள் நிரம்பியிருக்கும். பெரும்பாலும் சோலைகளின் மத்தியிலேதான் அங்கேயுள்ளவர்கள் தங்கள் வீடுகளைக் கட்டிக்கொள்ளுகிறார்கள். அந்தப் பக்கத்தில் உண்டாகும் சில முக்கியமான மரங்களைப்பற்றி அடியிற் கூறுவோம்:—

தென்னை: இம்மரத்தின் வளர்ச்சிக்கு நிலம் ஈரக்கசிவுள்ளதாகவும் சிறிது மணற்கலப்புள்ளதாகவும் இருக்கவேண்டும். அடிக்கடி மழைபெய்து இடைக்கிடையே சூரிய வெளிச்சமும் பட்டால் இந்த மரங்கள் விரைவாக வளர்கின்றன. பெரும்பாலும் இவை முப்பதடிமுதல் ஐம்பதடிவரையில் வளர்கின்றன. கடலோரங்களில் ஒரு குழந்தை தன் கைகளை நீட்டித் தேங்காய்களைப் பறிக்கத்தக்கபடி சில மரங்கள் குட்டையாக வளரும். கடற்கழிகளின் கரைகளிலும் இவை காணப்படும். பார்வைக்குச் சிறியவைகளாகத் தோன்றினாலும் இவை தேங்காய்களைக் குறைவாகக் கொடுப்பதில்லை. வருஷந்தோறும் ஒரு மரத்தில் இருநூறு காய்கள்வரையில் கிடைக்கும். மலையாளத்தில் ஒரு பெரிய குடும்பத்தின் செலவுக்குச் சில மரங்களே போதிய அளவாக இருக்கின்றன. எந்தக்காலத்திலும் தேங்காய்கள் கஷ்டமில்லாமல் விலையாகும். சாதாரணமான காலங்களில் தேங்காயின் விலை நூற்றுக்கு ரூ. 4–0–0

ஆக இருக்கும். தென்னை மிக்க பயனுள்ள மரம். இதன் ஒவ்வொரு பாகமும் பிரயோசனமுள்ளதாக இருக்கிறது. தென்னங்கீற்றுகள் வீட்டுக் கூரைகள் வேய்வதற்கு உதவுகின்றன. தேங்காய் ஓட்டினுல் வீட்டிற்கு உபயோகமான சில பாத்திரங்கள் செய்கிருர்கள். அவற்றை அடுப்பெரிக்கவும் உபயோகிப்பதுண்டு. தேங்காய்க்குள் இருக்கும் வெள்ளைப் பருப்பை வெயிலில் உலர்த்தி அதிலிருந்து எண்ணெயெடுக்கிருர்கள். எண்ணெய் போக மிஞ்சியிருக்கும் பிண்ணுக்கு மாடுகளுக்குத் தீனியாகின்றது. கொச்சியிலிருந்தும் கள்ளிக்கோட்டையிலிருந்தும் விசேஷமான தேங்காயெண்ணெய் ஐரோப்பிய நாடுகளுக்குப் போகின்றது. அங்கே எண்ணெயைக்கொண்டு மெழுகுவத்தியும் சவக்காரமும் செய்கிருர்கள். தேங்காய் நாரிலிருந்து பலமான கயிறுகள் திரிக்கிருர்கள். தென்னம்பாளையிலிருந்து கள் இறக்குவதுமுண்டு. சில இடங்களில் தேங்காய் எண்ணெயானது தேய்த்துக்கொண்டு ஸ்நானஞ் செய்வதற்கும் வேறு சில இடங்களில் பணியாரங்கள் செய்வதற்கும் உபயோகமாகின்றது.

பனை: தென்னைக்கு அடுத்தபடி முக்கியமான மரம் பனையாகும். பனையை வளர்ப்பதற்குச் சிறிதும் வருத்தமேயில்லை. பனம்பழங்களை வெளிநிலத்திலே எறிந்துவிடுவார்கள். பிறகு குருத்துக்கள் கிளம்பினவுடனே அவற்றை நிலத்தில் ஊன்றுவார்கள். பனைக்குத் தண்ணீர் பாய்ச்சவேண்டாம் சில வருஷங்களில் அது தானே நன்ருக வளர்ந்துவிடுகிறது. மரத்திலே உருண்டையான காய்கள் கொத்துக் கொத்தாய்க் காய்க்கின்றன. அவை பார்வைக்குக் கறுப்பு நிறமுடையனவாக இருக்கும். சில ஈனஜாதி ஜனங்கள் இம்மரத்திலிருந்து கள் இறக்குவதிலே தமது கவனத்தைச் செலவிடுகிருர்கள். ஒவ்வொருநாளும் அவர்கள் காலையிலும் மாலையிலும் மரத்திலேறிப் பனங்குருத்துக்களை ஒரு சிறிய மரத்துண்டினுல் அடித்துப் பிறகு ஒன்ருகக்கட்டிச் சேர்த்துப் பாளைகளைச் சீவி அவற்றின் கீழே ஒரு மட்பாத்திரத்தைத் தொங்கவிடுகிருர்கள். பனங்கள்ளானது அந்தப் பாத்திரத்தில் சொட்டுச் சொட்டாய் விழுகின்றது. சுண்ணும்பு சேர்க்காத கள்ளுக்குப் பதநீர் என்று பெயர். கள்ளை நன்ருகக் காய்ச்சுவதனுல் அதிலுள்ள ஜலமெல்லாம் வற்றிப்போக அடியில் திரவமான பதார்த்தம்

தங்குகின்றது. அதனைக் குளிரச்செய்தால் அதுவே பனங் கட்டியென்று சொல்லப்படும் ஒருவகை வெல்லமாகும். பிறகு அதனை நன்றாகச் சுத்திசெய்து அயலிடங்களுக்கு அனுப்பு கிறார்கள். அதிலிருந்து கற்கண்டும் செய்வதுண்டு. அது சில நோய்களை குணப்படுத்துகின்றது. தென் தேசங்களிலே, பனைமட்டைகள் தென்னங் கீற்றுக்களைப்போலவே கூரைகள் வேய்வதற்கு உபயோகப்படுகின்றன. பனமரங்கள் கட்டிட வேலைகளுக்கு மிக்க உபயோகமானவை புஸ்தகங்கள் எழுது வதற்கும், கணக்குகள் எழுதுவதற்கும் பனையோலைகளை உப யோகிக்கிறார்கள். அச்சுயந்திர சாலைகள் ஏற்படுவதற்குமுன் இத்தேசத்தில் புஸ்தகங்களெல்லாம் பனையோலைகளிலேயே எழுதப்பெற்று வந்தன அவற்றிற்குப் பனையோலைச் சுவடி கள் என்றும் ஏட்டுப்பிரதிகளென்றும் பெயர்; இக்காலத்திலும் கிராமங்களிலுள்ள பள்ளிக்கூடங்களில் பிள்ளைகள் ஓலைச் சுவடிகளை வைத்துக்கொண்டு பாடம் படிப்பதை நாம் பார்க்க லாம் பனையோலைச் சுவடிகள் வெகுகாலம்வரையில் அழி யாமல் நல்ல நிலைமையில் இருக்கும் இந்தக் காரணம்பற் றியே தேவாலயங்களிலும், பெரிய கடைகளிலும் பனையோலைச் சுவடிகளிலேயே கணக்குகளை எழுதுகிறார்கள் பனையோலை யில் எழுதுவதற்கு ஏற்ற கருவிக்கு எழுத்தாணியென்று பெயர் சில ஊர்களில ஜனங்கள் பனையோலைகளினால் மிக வும் விசித்திரமான கூடைகளையும், பெட்டிகளையும், தட்டுக் களையும் முடைந்து விற்கிறார்கள் பாய்கள் பின்னுவது முண்டு

**தேக்கு:** மரங்களெல்லாவற்றிலும் அதிக விலைபெற்றது இது ஆதலால் இதனை மரங்களுக்கு அரசு என்றும் சிலர் சொல்லுவதுண்டு ~~ஏரநாடு தாலு~~காவிலுள்ள காடுகளில் இம் மரம் அதிகமாக வளர்கின்றது வருஷந்தோறும் அளவற்ற தேக்குமரங்களை வெட்டி யானைகளின்மேலேற்றிப் பெரிய சாலைகளுக்குக் கொண்டுவந்து பல துண்டுகளாக அறுப்பார் கள் பிறகு அத்துண்டுகளையெல்லாம் கப்பல்களிலேற்றி வெளி நாடுகளுக்கு அனுப்புவார்கள். அந்த மரங்கள் வீடு கள் கட்டுவதற்கும் பெட்டிகள் செய்வதற்கும், நாற்காலி, மேஜை, விசிபலகை, கட்டில், அலமாரி முதலிய சாமான்கள் செய்வதற்கும் மிகவும் உபயோகமாகின்றன.

மூங்கில்: நன்றாக யோசித்துப் பார்த்தால் மூங்கிலை மர வகுப்பிற் சேர்க்காமல் புல்லின் வகையிலேயே சேர்க்கவேண்டு மென்பது தெரியும். ஆனாலும் மற்ற மரங்களைப்போலவே அதுவும் ஜனங்களுக்கு மிகவும் பயன்படுகின்றது. சில மூங் கில்கள் நூறடி உயரமும் வளரும். அம்மரம் கொத்துக் கொத்தாகவே வளரும் இயற்கையையுடையது. மூங்கில் மரங்களையே அநேக இடங்களில் வீட்டுக் கூரைகளின்மேற் பரப்பி அப்பால் ஓடுகளை மூடுவார்கள். மூங்கிலினால் தட்டி களும், கூடைகளும், பாய்களும், குடைகளும், முடைவ துண்டு. நன்றாக முற்றின மூங்கில்கள் எத்தனை வருஷங்க ளானாலும் கெடாமலிருக்கும். மூங்கில் முள்ளினால் தோட் டங்களுக்கு வேலி கட்டுவார்கள். வளைவான மூங்கில்கள் பல்லக்குக் கொம்புகளாகவும், உறுதியான மூங்கில்கள் பெரிய வாகனங்களைச் சுமக்கக்கூடிய வாளிகளாகவும் உப யோகப்படுகின்றன. சிறு மூங்கிற்கழிகளை அநேகர் ஊன்று கோல்களாக உபயோகித்து வருகிறார்கள். மலையில் உண்டா கும் மூங்கில்கள் மிகவும் உறுதியாக இருக்கும்.

பலாமரம்: இம்மரமானது பழத்திற்காகவும் பலகைகளுக் காகவும் மிகவும் பெயர்பெற்றது. பலாப்பழத்திலுள்ள கொட் டைகளை யெடுத்து அவற்றின் மேல்தோலை நீக்கிவிட்டு நிலத் தில் ஊன்றுவார்கள். பிறகு அவற்றிலிருந்து சிறு முளைகள் குருத்து விட்டுக்கொண்டு கிளம்பும். அப்பால் அந்த முளை களையெல்லாம் பெயர்த்தெடுத்துத் தோட்டங்களிலே நடுவார் கள். சிறு கன்றுகளை ஆடுமாடுகள் மேய்ந்து தின்றுவிடாம லிருக்கும்வண்ணம் பக்கங்களில் வேலிகளை யடைத்துவைப் பார்கள். பலாப்பழம் ஜனங்களுக்கு மிகவும் பிரியமானது. அதிலுள்ள சுளைகள் அதிக ருசியானவை. மலையாள தேசத் தில் பலாப்பழங்கள் மிகவும் குறைந்தவிலைக்குக் கிடைக் கின்றன. பழங்கள் மரத்திலிருந்து உண்டாவது நின்றவுடன் மரத்தை வெட்டிப் பலகைகளாக அறுப்பார்கள். பலாப்பலகை கள் அலமாரி, மேஜை, பெட்டிகள், ஊஞ்சல் முதலான பல வித சாமான்கள் செய்வதற்கு உபயோகமாகின்றன.

கருங்காலி: இது காடுகளிலேதான் வளரும். தேக்குமரத் துக்கு அடுத்தபடியாக எண்ணப்படும் மரம் இதுவே. இம் மரத்தின் பலகை, உறுதியாகவும், கனமாகவும், கறுப்புநிற

முள்ளதாகவும் இருக்கின்றது. தேக்குமரத்தைப்போலவே இதுவும் கட்டில்கள், நாற்காலிகள், அலமாரிகள் முதலியன செய்வதற்கு உபயோகப்படுகின்றது.

மாமரம்: மாமரங்கள் இந்தியாவில் பல இடங்களிலும் உண்டு. ஆனாலும் மலேயாள தேசத்திலே மிகவும் செழிப்பாக வளர்கின்றன. அவை உயரமாகவும் பரவிய கிளைகளையுடையனவாகவும் இருக்கின்றன. மாமரத்தில் பலவகைகள் உண்டு. காய்களின் உருவம், அளவு, சுவை இவற்றில் பல வேறுபாடுகள் உள்ளன. ஆனால் ஒட்டுமாம்பழத்துக்கு ஈடாகச் சுவையில் வேறொன்றுமில்லை. பங்களூரிலும், சேலத்திலும், சித்தூரிலும் உயர்ந்த ஒட்டுமாமரங்கள் உண்டாகின்றன. மாங்காய் சமையலுக்கு மிக்க உபயோகமானது. மாம்பலகைகள் பல வேலைகளுக்கும் பயன்படுகின்றன.



## 23. தமிழ்.

இந்தியாவில் வழங்கிவரும் திராவிட பாஷைகளாவன தமிழ், தெலுங்கு, கன்னடம், மலேயாளம் என்பனவாம். அவற்றுள் மற்றவற்றிற்கு முற்பட்டதாகவும் மிகவும் சிறந்ததாகவும் வடமொழிக்கு இணையானதாகவும் கருதப்படுவது தமிழே. பல்லாயிர வருஷங்களாக இப்பாஷை தென்னிந்தியாவில் வழங்கிவருகின்றது. அதனால் இதனைத் தென்மொழியென்றும் சொல்லுவார்கள். இந்தியாவில் தமிழ் வழங்கும் நாட்டிற்கு வேங்கடமலை வடக்கெல்லையாகவும் தென்குமரி தெற்கெல்லையாகவும் கூறப்படுகின்றன. இப்போது இப்பாஷையானது ஈழநாட்டின்கண் உள்ள வடக்கு மாகாணத்திலும் கிழக்கு மாகாணத்திலும் அதிகமாகவும் மற்ற மாகாணங்களிற் சிறுபான்மையாகவும் ரங்கூன், பினங்கு, சிங்கப்பூர் முதலிய அயலிடங்களிலும் ஆபிரிகாகண்டத்தின் தென்பாகத்திலும் பேசப்பட்டுவருகின்றது. ஏறக்குறைய இரண்டரைக்கோடி ஜனங்கள் இப்பாஷையைப் பேசிவருகிறார்கள். தமிழ் என்னும் பதம் இனிமையென்று பொருள்படும். இது வெகுகாலமாக நமது நாட்டில் வழங்கிவரும் பாஷை. இதுவே நமது தாய்ப்பாஷையாம். நம்மைப் பெற்றதும் தமிழ்; வளர்த்த

தும் தமிழ்; நம்மைத் தாலாட்டித் தூங்கவைத்ததும் தமிழ். நம்முடைய மழலைச் சொல்லால் நமது தாய்தந்தையரை மகிழ்வித்ததும் தமிழ். நமது இளமைப்பருவத்தில் பேச ஆரம்பித்ததும், உச்சரித்ததும் தமிழ். நமது தாய்தந்தை குரு முதலானவர்கள் முதலில் நமக்கு உபதேசித்ததும் தமிழ். வெகுகாலத்துக்குமுன் நமது முன்னோர்கள் எல்லோரும் பேசின பாஷையும் எழுதின பாஷையும் தமிழ். இதன் பெருமை இவ்வளவென்று வரையறுக்க முடியாது.

ஆதிகாலத்தில் தமிழ்நாட்டு அரசர்களான சேர சோழ பாண்டியர்களால் இப்பாஷை மிகவும் ஆதரிக்கப்பெற்று வந்தது. அக்காலத்தில் மதுரைமா நகரின்கண்ணே முதல் இடை கடை என்னும் மூன்று சங்கங்கள் இருந்தன.

பற்பல அருமையான விஷயங்களைக் கவி ரத்தினங்களான கம்பர் முதலிய வித்வத் சிகாமணிகள் தங்கள் தங்கள் மனோ தர்மத்துக்குத் தக்கவாறு நூல்கள் முகமாக வெளியிட்டிருக்கிறார்கள்.

அகஸ்திய மகாமுனிவர் காலத்துக்குமுன் இந்தப் பாஷைக்கு இலக்கணமே இருந்ததாகத் தெரியவில்லை. அவருக்கு மாணாக்கர் பன்னிருவர். அவர்களுள் ஒருவரான தொல்காப்பிய முனிவர் என்பவர் அகத்திய முனிவர் செய்த இலக்கணத்தை முதல் நூலாகக்கொண்டு ஓர் இலக்கணத்தை எழுதினர். அதுவே தமிழ்ப்பாஷையில் மிகச் சிறந்த இலக்கணமாகும். அது தொல்காப்பியம் என்று வழங்கப்படும்.

பாண்டிய அரசர்களால் தமிழாராய்ச்சியின் பொருட்டு அமைக்கப்பெற்ற சங்கங்கள் இருந்தகாலத்து இயற்றப்பெற்ற நூல்கள் சங்கநூல்கள் என்று பெயர்பெறும். அவற்றுள் பத்துப்பாட்டும் புறநானூறு கலித்தொகை முதலியன அடங்கிய எட்டுத்தொகையும் திருக்குறள் நாலடியார் சிறுபஞ்சமூலம் ஏலாதி பழமொழி முதலிய நூல்கள் அடங்கிய பதினெண் கீழ்க்கணக்குமே பெயர்பெற்றவை. கடைச்சங்கம் இருந்த காலத்தில் நக்கீரர், கபிலர், பரணர் முதலிய நாற்பத்தொன்பது வித்துவான்கள் மிக்க புகழ்பெற்று விளங்கினார்கள்.

சிலகாலம் தமிழானது சமணர்களால் மிகவும் ஆதரிக்கப்பெற்று வந்தது. அவர்கள் காலத்திலேதான் நிகண்டு, நன்

னூல், காரிகை முதலிய நூல்களும், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் பெருங்காப்பியங்களும் எழுதப்பெற்றன.

சங்கத்தார்காலத்தில், சைவசமயாசாரியர்கள் நால்வருள் ஒருவரான மாணிக்கவாசகரென்பவர் திருவாசகம் என்னும் நூலை இயற்றினார். "திருவாசகத்திற் குருகாதார் ஒருவாசகத்துக்கு முருகார்" என வழங்கும் பழமொழியால் இதன் பெருமை விளங்கும்.

நான்காம் நூற்றாண்டுமுதல் ஒன்பதாம் நூற்றாண்டுக்குள்ளாக அப்பர், சுந்தரர், சம்பந்தர் என்னும் சைவசமயகுரவர் மூவரும் தேவாரங்களையும், நம்மாழ்வார் முதலான வைணவ சமய குரவர்கள் திவ்ய பிரபந்தங்களையும் இயற்றி முறையே சைவசமயத்தையும் வைணவமதத்தையும் பரவச் செய்தார்கள்.

உத்தர ராமாயணம் பாடிய ஒட்டக்கூத்தரும், நளவெண்பா பாடிய வெண்பாப்புலியாகிய புகழேந்திப் புலவரும், ஔவையும் கம்பர்காலத்தில் இருந்தவர்கள். கம்பர்காலத்துக்குச் சற்று முன்பின்னாக நச்சினார்க்கினியர் முதலிய புகழ்பெற்ற உரையாசிரியர்கள் இருந்திருக்கவேண்டுமென்று தெரிகிறது.

பட்டினத்தார் முதலிய பெரியோர்கள் ஞானநூல்களைப் பாடியுள்ளார்கள். அவர்களுக்குப்பின் சந்தான குரவர்கள் என்னும் நால்வர் சைவசித்தாந்த நூல்களை இயற்றினார்கள் அவர்களுள் அருணந்தி சிவாசாரியர் என்பவரால் இயற்றப்பெற்ற சிவஞானசித்தியார் மிகவும் பாராட்டாற்பாலது.

திருவாவடுதுறை யென்னும் ஆதீனத்தில் தோன்றிய சாமிநாத தேசிகரால் இலக்கணக்கொத்தும் அவரது மாணாக்கரான சங்கர நமசிவாய தேசிகரால் நன்னூல் விருத்தியுரையும் செய்யப்பெற்றன அக்காலத்தில் தருமபுர வாதீனத்தைச்சார்ந்த வைத்தியநாத தேசிகரென்பவர் இலக்கண விளக்கம் என்னும் ஒரு சிறந்தநூலை இயற்றினார். சிவப்பிரகாச சுவாமிகளும், குமரகுருபர சுவாமிகளும், தாயுமானவரும் அக்காலத்திலிருந்த மற்றப் புலவர்களாவர், அவர்களுக்குப் பிறகு காஞ

மேகப் புலவர், படிக்காசுப் புலவர், இரட்டையர்கள் முதலானவர்கள் சிறந்த வித்துவான்களாக விளங்கினார்கள். பிற்காலத்திருந்த வித்துவான்களுள் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளை சிறந்த கவித்துவமுடையோராகச் சொல்லப்படுகிறார்.

## 24. சமயத்துக்கேற்ற உத்தரம்.

பல நூற்றாண்டுகளுக்குமுன் நமது இந்தியா தேசமானது மகம்மதியர்களுடைய அரசாட்சிக்கு உட்பட்டிருந்தபோது வங்காளத்தில் ஒரு நவாபு ராஜ்யபரிபாலனம் செய்துவந்தனர். அவருடைய மந்திரிகளுள் ஒருவன் புத்திகூர்மையுள்ள சிறந்த கல்விமான்; பேசுவதில் அதிசமர்த்தன். யாரும் தன் பேச்சை விரும்பும்படி அவ்வளவு இனிமையாகப் பேசுவான். மகா சபைகளில் யாதொரு தடையுமின்றி அதிவிரைவில் சமயத்துக்குத் தக்கபடி உததரம் சொல்லுவான். அவனால் நவாபுக்கு அதிக மேன்மையும், கௌரவமும், கீர்த்தியும் உண்டாயின. நவாபின் கீழிருநத பிரஜைகள் யாவரும் மிகவும் சௌக்கியமாக வாழ்ந்துவந்தார்கள். மந்திரியின் பெயரும் பல தேசங்களிலும் பரவிற்று ஒருநாள் டில்லி சக்கரவர்ததியின் ஆலோசனை மண்டபத்தில் யாரோ ஒருவன் அம்மநதிரியைப்பற்றிச் சக்கரவர்த்தியின் சமுகத்திற் பேசியபோது அங்கிருந்த பிரபுக்களும் அதிகாரிகளும் அவனுடைய சொல்வன்மையைப்பற்றி மிகவும் வியநது பாராட்டினார்கள் சக்கரவர்த்தியும் அதிக மனக்களிப்புற்றார்.

ஆனால் சக்கரவர்த்தியின் பக்கத்திலிருந்த அவருடைய குருவுக்கு இச்செய்தியானது அதிக மனக்கொதிப்பை யுண்டாக்கிற்று. உடனே அவர், "நம்முடைய கௌரவமென்ன! படிப்பென்ன! அப்படியிருக்க இவர்கள் எல்லோரும் நாம் இருக்கிறோமென்று பாராமல் ஓர் அற்ப மனிதனை மந்திரியைக்குறித்து இவ்வளவு பேசுகிறார்களே! இருக்கட்டும். இவர்கள் கொண்டாடுகிற மந்திரியை நாம் எவ்விதத்திலும் மானபங்கப்படுத்தவேண்டும்" என்று தமக்குள்ளே நிச்சயஞ் செய்துகொண்டு சக்கரவர்த்தியை நோக்கி, "அப்படியானால் நானும் அந்த மந்திரியைப் பார்த்துவர விரும்புகிறேன்.

அதற்கு அனுமதி தரவேண்டும்" என்று சொல்லிச் சக்கரவர்த்தியினிடம் விடைபெற்று அங்கிருந்து புறப்பட்டார். அவர் தமது தேசத்துக்கு வருவதை யறிந்த வங்காளத்து நவாபு தமது பட்டணம் முழுவதையும் அலங்கரிக்கச்செய்து சதுரங்க சேனைகளுடன் வெகுதூரம் எதிர்கொண்டு சென்று அந்தக் குருவை யழைத்துவந்து மிக்க சிறப்புடன் அவரை நகர்வலஞ் செய்வித்து அப்பால் தமது கொலுமண்டபத்துக்கு அவருடன் வந்தனர் பிறகு நவாபு அந்தக் குருவை ஓர் உயர்ந்த ஆசனத்தில் இருக்கச்சொல்லி அவருக்குச் செய்ய வேண்டிய மரியாதைகளைச் செய்து அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தார். பிரதானிகளும் பிரபுக்களும் மற்றுமுள்ளவர்களும் அவர்களைச் சூழ்ந்து நின்றார்கள்.

அப்போது அந்தக் குருவானவர் நவாபினுடைய புகழ்பெற்ற மந்திரியை நோக்கி, "ஐயா, நான் உம்மைப்பற்றி அதிகமாய்க் கேள்வியுற்றிருக்கிறேன். ஒருவர் தமது மனத்திலுள்ள அபிப்பிராயத்தை வெளியிடாதிருக்கும்போதே அந்த அபிப்பிராயத்தை நீர் குறிப்பால் அறிந்து சொல்லத்தக்க திறமையுடையவரென்று அநேகர் என்னிடம் கூறியிருக்கிறார்கள். மந்திரிக்கு முக்கியமாய் இருக்கவேண்டிய குண விசேடங்களுள் இது சிறந்ததாகும். நல்லது, நான் இப்போது என் மனத்தில் என்ன எண்ணிக்கொண்டிருக்கிறேன்? அதைச் சொல்லும். எல்லோரும் கேட்டு ஆனந்தமடையட்டும்" என்று சொன்னார்.

அதிமேதையான மந்திரி சிறிதுநேரம் யோசனைசெய்து, "இவர் நம்மை இந்த மகாசபையில் மானபங்கம் செய்ய வேண்டுமென்ற மோசக் கருத்துடனே இந்தமாதிரியான கேள்வி கேட்டிருக்கிறார். ஆதலால் இதற்குத் தக்க விடையளித்தே நாம் இவர் வாயை அடக்கவேண்டும்" என்று தனக்குள் நிச்சயஞ் செய்துகொண்டு குருவைப்பார்த்து, "சுவாமீ, உங்களுடைய நல்வரவை எங்கள் நவாபு மிக்க ஆவலோடு எதிர்பார்த்திருந்து உங்களிடம் அந்தரங்கமான பக்தியைச் செலுத்தி உங்களுக்கு மிக்க அன்புடன் வேண்டிய உபசாரணைகளைச் செய்திருக்கிறார். அதனால் நீங்கள் அவரிடம் கருணைகொண்டு அவருக்கு நீண்ட ஆயுளும், சந்தான விருத்தியும், நோயற்ற வாழ்வும், குறைவற்ற செல்வமும்

மேன்மேலும் பெருக உண்டாகும்படி செய்விக்கவேண்டு மென்று எல்லாம்வல்ல கடவுளை இப்போது பிரார்த்திக்கிறீர்கள். இதுதானே உங்கள் மனக்கருத்து?" என்று கேட்டான்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட குருவானவர் திகைத்துப் போய், 'நம்முடைய எண்ணம் அப்படியல்லவென்று மறுத்துக் கூறுவோமானால் நம்மிடம் நவாபுக்கு வெறுப்பு உண்டாகும். நமது எண்ணம் அதுவேயென்று சொல்லுவோமானால் அரசனுடைய பிரீதியும் எல்லாருடைய நன்மதிப்பும் நமக்கு அதிகமாகக் கிடைக்கும். ஆகையால் மந்திரி சொல்லுவதை ஒப்புக்கொள்வதே நலம்" என்று தமக்குள் முடிவு செய்து கொண்டு மந்திரியைப் பார்த்து, "நீர் மகா புத்திமான். நான் எண்ணியிருந்ததை உள்ளபடி தெரிவித்துவிட்டீர். கடவுளை நான் பிரார்த்தித்தது உண்மையே. நல்லது இப்போது நான் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறேன்? சொல்லும்" என்று வினவினார்.

அப்போது மந்திரி, "அரசனுக்கு அடுத்தபடி அவனுடைய குடிகளேயாவர். ஆகையால் இந்தக் கருத்தை வைத்துக்கொண்டு நாம் இப்போது இவரை வெல்லவேண்டும்" என்று தனக்குள் நிச்சயித்துக் குருவைப்பார்த்து, "நீங்கள் இப்போது இந்த ராஜ்யத்திலுள்ள பிரஜைகளின் க்ஷேமத்தைக் குறித்துக் கடவுளைப் பிரார்த்திக்கிறீர்கள்" என்று சொல்லவே குருவானவர் அந்த உத்தரத்தையும் மறுக்கமுடியாமல் "நீர் சொல்வது சரிதான்" என்று சொல்லி "அரசனைப்பற்றியும் குடிகளைப்பற்றியும் சொல்லியாய்விட்டது. இனிமேல் என்ன சொல்லுவான் பார்ப்போம். இந்தத்தடவையாவது அவன் நம்மிடம் நிச்சயமாய் அகப்பட்டுக்கொள்ளுவான்" என்று எண்ணி மந்திரியை நோக்கி, "உம்முடைய புத்திவிசாலத்தை நான் மிகவும் பாராட்டுகின்றேன். உம்முடைய விடையைக் கேட்கக் கேட்க எனக்கு ஆனந்தமுண்டாகிறது. இப்போது என் மனத்திலுள்ள அபிப்பிராயம் என்ன? சொல்லும்" என்று கேட்டனர்.

மூன்றுந்தடவையும் மந்திரி சிறிதும் அஞ்சாமல் நன்றாக யோசனைசெய்து குருவைப்பார்த்து, "இந்த ராஜ்யம் இவ்வளவு சீருஞ் செல்வமுமாயிருப்பதற்கும் இந்த நவாபு இவ்வ

ளவு புகழ்பெற்றிருப்பதற்கும் காரணம் யாதென்று யோசித்து இந்த நவாபினுடைய பத்தினியோ மகா பதிவிரதாசிரோமணி; உத்தமோத்தமி; அந்த உத்தமியைப்போன்ற பதிவிரதையைக் காணலரிது ஆகையால் நவாபினுடைய இந்தச் செல்வங்களுக்கும் புகழுக்கும் அவருடைய பத்தினியின் கற்பே காரணம் என்று நீங்களே முடிவு செய்துகொண்டீர்கள். இதுவே உங்கள் மனத்தில் இப்பொழுது குடிகொண்டிருக்கும் எண்ணமாகும். ஏதோ என் சிற்றறிவிற் கெட்டியமட்டிற் சொன்னேன் நான் சொல்லுவது தவருக இருந்தால் சொல்லவேண்டும்" என்று கேட்டான்

குருவானவர் அப்போது மிகவும் வியப்புற்று, "நாம் தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டோம். இந்த மந்திரியிடத்தில் நம்முடைய ஜபம் பலிக்காது இவனை நம்மால் வெல்லவும முடியாது நவாபின் பத்தினியைப்பற்றியல்லவோ இப்போது இவன் பேசிவிட்டான்' அந்த விஷயத்தைப்பற்றிச் சிறிதளவாவது நாம் மறுத்துச சொல்லுவோமாளுல் நமது உயிருக்கே மோசம் வந்துவிடும் ஆகையால் மரியாதையாக வந்தவழியைப் பார்த்துக்கொண்டு ஊருக்குப் போய்விடுவதே நலம்" என்று தமக்குள் எண்ணித் தாம் அவ்விடம் வந்த காரியத்தைச் சிறிதும் வெளிக்காட்டாமல் மந்திரியின் புத்தி விசாலத்தைப்பற்றி மிகவும் பாராட்டிப் பேசிவிட்டு அவ்விடத்திலேயே சில தினங்கள் தங்கியிருந்து நவாபினிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு டில்லி நகரம் போய்ச் சேர்ந்தார்.



## 25. மூத்தோர்சொல் வார்த்தை அமிர்தம்.

நம்மைக்காட்டிலும் வயதில் மிகுந்த பெரியவர்கள் சொல்லும் புத்திமதிகளைக் கேட்டு அவற்றின்படி நடக்கவேண்டும் உலக அனுபவத்தினுல் பல அருமையான விஷயங்களை அவர்கள் அறிந்திருப்பவர்கள். ஆதலால் அவர்கள் சொல்லும் புத்திமதிகள் யாவும் நமக்கு மிக்க நன்மையை விளைவிக்கும். அவர்கள் வார்த்தையை மீறி நடக்கத் தொடங்குவோமாயின் தீமைதான் நமக்கு உண்டாகும்.

## 25. மூத்தோர்சொல் வார்த்தை அமிர்தம்.

முன்னொருகாலத்தில் பாரசீகதேசத்து அரசனொருவ யவனதேசத்துக்கு விரோதமாகப் படையெடுத்துச் சென்று போர்புரிய எண்ணித் தனது பெரிய தந்தையிடம் அதைப்பற்றி ஆலோசனை கேட்டான். அப்பொழுது அவன் அரசனை நோக்கி, "மகனே, என் வயதின் முயற்சியாலும் உலக அனுபவத்தினாலும் உன்னுடைய நல்வாழ்வைக்குறித்துச் சில யோசனைகள் சொல்லவேண்டுமென்று வெகுநாளாக எனக்குக் கவலை உண்டு. அவற்றைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. உன்னுடைய தந்தை ஸிரியா நாட்டினர்க்கு விரோதமாய் யுத்தஞ்செய்யக் கருதிய்பொழுது அவ்வாறு யுத்தம் செய்யவேண்டாமென்று உன் தந்தையை என்னால் ஆனமட்டும் முயன்று தடுத்தேன். அந்த ஜாதியாரைக்காட்டிலும் யவனர்கள் மிகவும் பலசாலிகளாக இருக்கிறார்கள். பெயர்பெற்ற இரண்டு படைத்தலைவர்கள் நடத்தின திரளான சேனையை யவனதேசத்தின் ஒரு பாகத்தில் உள்ளவர்களே ஒருமுறை மடக்கி அடித்திருக்கிறார்கள். அப்படியிருக்க அந்நாட்டிலுள்ள எல்லோரும் ஒருமிக்கச் சேர்ந்தால் உன் சேனையை எதிர்த்து என்னபாடு படுத்தமாட்டார்கள்? மத்தியிலுள்ள ஒரு கால்வாயின்மேல் ஒரு பாலத்தைக் கட்டி அதன்வழியாக நீ உன் பெருத்த சேனையுடன் ஆசியாவைக் கடந்து ஐரோப்பாவிலுள்ள யவனதேசத்திற்குப் போக நிச்சயித்திருக்கிறாய். ஆனால் அதீனியர்கள் தங்கள் சேனையுடன் வந்து அந்தப் பாலத்தை இடித்து உன் சேனையை அப்பால் போகவிடாமல் தடுத்தால் நீ என்ன செய்வாய்? அதனால் உனக்கும் உன் சேனைக்கும் என்ன என்ன நஷ்டங்கள் உண்டாகுமோ அறியேன். வீணாக நாமே நம்மை அப்படிப்பட்ட நஷ்டங்களுக்கு ஏன் உள்ளாக்கிக் கொள்ளவேண்டும்? ஆகையால் இவ்விஷயத்தைப்பற்றி இப்பொழுதே நாம் தீர்க்காலோசனை செய்யவேண்டும். ஒரு காரியத்தைச்செய்வதற்குமுன்பு நாம் நன்றாக அதைப்பற்றி ஆலோசனை செய்துவிடுவோமானால் அக்காரியம் நிறைவேறினாலும் நிறைவேறாவிட்டாலும் அதனால் நமக்கு வருத்தமொன்றும் ஏற்படாது. முன்யோசனையில்லாமல் படபடப்பாய் ஒரு காரியத்தைச் செய்வோமானால் அது பெரும்பாலும் அனுகூலமாக முடிகிறதேயில்லை. ஆகையால் வீண் பெருமையினால்

மயக்கம் அடையாமல் மிகவும் ஜாக்கிரதையாயிருப்பதே நலம். மிகவும உயரமாக வளர்ந்திருக்கிற மரங்களே இடியி ஞல் அழிக்கப்படுகின்றன. தாழ்ந்து வளர்ந்திருக்கின்ற செடிகளுக்கு இடியினுல் ஒருவிதமான அசௌகரியமும் ஏற் படாது நான் சொலலக்கருதிய யோசனைகள் இவ்வளவே" என்ருன்.

பிறகு அவன் அரசனுடைய சேனைத்தலைவனை அழைத்து அவனைப்பார்த்து, "யவனதேசததுக்கு விரோதமாகப் போர் புரியவேண்டுமென்று நீதானே யோசனை சொல்லுகிருய்; நீ தானே சேனையை நடத்திக்கொண்டுபோ நமக்கெல்லாம் அரு மையான அரசன் பாரசீக தேசத்திலேயே இருக்கட்டும். இந்த யுத்தம் நமக்கு அனுகூலமாக முடியுமென்று உனக்கு நிச்சய மாய்த் தோற்றுமானுல் உன் பிள்ளைகளைப் பிணையாக ஒப்பிப்பா யாக. நானும் என் பிள்ளைகளே ஈடாக வைக்கிறேன். காரியம சித்தித்தால் என் பிள்ளைகளைக கொன்றுவிடலாம் அதைப் பற்றி இப்பொழுதே எழுதிக்கொடுக்கிறேன் காரியம் சித்திக் காவிட்டால் உன் பிள்ளைகளைக் கொல்லுவதற்கு நீ சம்மதிக்க வேண்டும்" என்ருன்.

இவ்வாறு தன் பெரியதகப்பன் சொன்ன விவேகமுள்ள ஆலோசனைகளைக் கேட்ட அரசன் அந்த யோசனைகள் தன் பெருமைக்கு விரோதமானவை என்று எண்ணி அகங்காரம் கொண்டு அவனைப்பார்த்து, "நீர் என்னுடையபெரிய தந்தையா யிருப்பதனுல் இபபொழுது உயிர் தப்பினீர்; இல்லாவிட்டால் உம்மைக் கடுமையான தண்டனைக்கு உள்ளாக்கியிருப்பேன். நீர உயிர்தப்பியதற்காகக் கடவுளுக்கு வந்தனைசெய்யும் ஆயி னும் உமக்கு ஒருவிதமான தண்டனையை ஏற்படுத்துகிறேன். நீர் எப்பொழுதும் ஸ்திரீகளின் மத்தியில் இருக்கும்படி கட் டளையிடுகிறேன். பலத்திலும் அதைரியததிலும் நீர் அவர்க ளுக்குச் சமானமாய் இருக்கிறீரல்லவா? என் சேனைகளே என் கௌரவத்துக்குத் தகுந்தபடி நடத்திக்கொண்டு புறப்பட்டுப் போகையில் நீர் பெண்கள் மத்தியிலிரும்" என்று கட்டளை யிட்டான்.

பிறகு அவன் தன் பெருத்த சேனைகளுடன் யவனதேசம் சென்று அங்கே யவனர்களுடன் யுத்தம்செய்ய ஆரம்பித்தான். ஆனுல் யவனர்களே [illegible] திலும், போர்த்தொழிலி

லும், புத்திகூர்மையிலும் பெயர்பெற்றவர்களாக இருந்தமை யால் இவர்கள் பாரசீக அரசனுடைய சேனைவீரர்களைச் சிதற அடித்து அவர்களில் அநேக ஆயிரம் ஜனங்களை வாளுக்கு இரையாக்கினார்கள் அதனைக்கண்ட அரசன் வெட்கம் அடைந்து தான் உயிர்தப்பினாற் போதும் என்று எண்ணி ஊருக்கு ஓட்டம்பிடித்தான் பரம விவேகியான தன் பெரியதந்தை யின் புத்திமதிகளை அவன் கேட்டிருப்பானாயின் அவனுக்கு இப்படிப்பட்ட நஷ்டமும், மானக்கேடும் வந்திருக்கமாட்டா. ஆகையால் பெரியோர்களுடைய வார்த்தைகளை அசட்டை செய்யலாகாது



## 26. உள்ளன்பு.

இங்கிலாந்துதேசத்தில் இருந்த பழைய அரசர்களுள் லீயர் என்பவர் ஒருவர் அவருக்கு மூன்று குமாரிகள் உண்டு. விருத்தாப்பியத்தினால் நாளுக்குநாள் அவருடைய தேகம மெலிவை அடைந்தது அதனை அவர் உணர்ந்து தாம் உயி ரோடு இருக்கையிலே தமது குமாரிகளுக்கு மணம் புரிவித்து அவர்களுக்கு ஸ்திரீதனமாக தமது ராஜ்யத்தைப் பங்கிட்டுக் கொடுக்கவேண்டுமென்று தமக்குள் நிச்சயம் செய்துகொண் டார். அததீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு முன்பு தமது குமாரிகளுள் எவள் தம்மை அதிகமாக நேசிப்பவள் என்று அறிய விரும்பினார். அதற்காக அவர் மூத்த குமாரியை அழைத்து அவளை நோக்கி, "நீ என்னை எவ்வாறு நேசிக்கிறாய்? அதனை நான் அறிய விரும்புகிறேன்" என்று சொன்னார்

அப்பொழுது அவள் தன் பிதாவின் பேதைமையையும், புகழ்ச்சியில் அவருக்குள்ள பிரியத்தையும் நன்றாய் அறிந்து கொண்டு, "என் உயிரைக்காட்டிலும் அதிகமாக நான் உங்களை நேசிக்கிறேன்" என்று பதில் உரைத்தாள் அதனைக் கேட்ட வுடன் அரசர் ஆனந்த பரவசராகி, "குழந்தாய்! நீ மகா உத் தமி ஆவாய். உனக்கு நிகரான பெண் இவ்வுலகத்தில் உண்டோ? உனக்கும் உனக்கு வரப்போகிற புருஷனுக்கும் உபயோகமாக என்னுடைய ராஜ்யத்தில் மூன்றில் ஒருபங்கு கொடுக்கிறேன்" என்றனர். பின்பு அவர் தமது இரண்டாம்

குமாரியையும் முதல் புத்திரியைக் கேட்டதுபோலவே கேட்க, அவள் தன் தமக்கைக்குத் தான் பின் அடையக் கூடாதென்று எண்ணிக்கொண்டு தந்தையை நோக்கி, "இந்த உலகத்திலுள்ள பொருள்கள் எல்லாவற்றிலும் உங்களையே நான் மேலாக மதிக்கிறேன். இது சத்தியம்" என்று கூறினள். அதைக் கேட்ட மாத்திரத்தில் மிக்க மகிழ்ச்சியை அடைந்து அரசர் தமது மூத்த குமாரிக்கு வாக்களித்தபடியே தமது நாட்டில் மூன்றில் ஒரு பங்கு தருவதாக அவளுக்கும் வாக்குக்கொடுத்தார். அதன் பின்பு அவர் மற்றஎல்லாரிலும் அதிகமாக அன்புபாராட்டிவந்த மூன்றாவது குமாரியினிடம் சென்று, "குழந்தாய், நீ என்னை எவ்விதமாய் நேசிக்கிறாய்? அதனை நான் அறிய விரும்புகிறேன்" என்று கூறினார் மனத்திலும் வாக்கிலும் எப்பொழுதும் உண்மையையே நாடுகிற உத்தமியான அந்த மூன்றாவது குமாரி சற்று முன்பு தன்னுடைய தமக்கைமார்கள் இருவரும் சிறிதும் அச்சமில்லாமல் நயவஞ்சகமாகக் கூறிய வார்த்தைகளைத் தன் பிதா கேட்டு மிகுந்த சந்தோஷம் அடைந்ததைப் பார்த்து நின்றனள். ஆயினும் அவர்களைப்போலவே தானும் வீணான வார்த்தைகளைச் சொல்லி மயக்குதல் தகாதென்றும் எப்படியும் உண்மை பேசுவதே நியாயமாகுமென்றும் அவள் தன் மனத்தில் நிச்சயம் செய்துகொண்டு பிதாவைநோக்கி, "அப்பா, ஒரு பிள்ளை எந்த அளவில் தன் பிதாவை நேசிக்கவேண்டுமோ அந்த அளவில் சிறிதும் குறையாதபடி நான் உங்களை நேசிக்கிறேன் என்பது சத்தியம். ஆனால் இதைக்காட்டிலும் அதிகம் நேசிப்பதாகச் சொல்லுபவர்களையெல்லாம் முகத்துக்கு இனிய இச்சக வார்த்தைகள் பேசும் மாயக்காரிகள் என்றே எண்ணுங்கள்" என்று கூறினாள். அதனைக்கேட்ட அரசர் தாம் எதிர்பார்த்திருந்ததற்கு மாறாக உத்தரம் சொன்னதைக் கண்டு அதிக வருத்தமுற்று, அவளைப் பார்த்து, "நீ மிக்க கர்வங்கொண்டவள் என்பதை நான் இப்பொழுது நன்றாக அறிந்துகொண்டேன். இந்தத்தடவை மட்டும் நான் பொறுத்துக்கொள்ளுகிறேன் நீ மறுபடியும் இதைப்பற்றி நன்றாக ஆலோசனைசெய்து எனக்குப் பதில் சொல்லுவாயாக" என்றார். அப்போதும் மூன்றாவது புத்திரி தான் முன்சொன்ன வார்த்தைகளையே திரும்பவும் தன் தந்தையிடம் சொல்ல, அவர் கடுங்கோபம் அடைந்து அவளை

நோக்கி, "மிக்க வயோதிகனான என்னிடத்தில் உன்னுடைய தமக்கைகள் இருவரும் மிக்க பக்திவிநயத்தோடு இருப்பதை அவர்களுடைய வார்த்தைகளால் நீ அறிந்துகொண்டும் என்னை மதியாமல் போய்விட்டாயல்லவா! நீ மிக்க கர்வங்கொண்டவள். நன்றிகெட்ட மகா பாதகி, உன்னுடைய துர்க்குணத்துக்குத் தக்கபடி நான் உன்னைத் தண்டிப்பேன். என்னுடைய ராஜ்யத்திலாவது, ஐசுவரியத்திலாவது உனக்குச் சிறிதேனும் பங்கு இல்லை" என்று சொன்னார்.

சில தினங்களுக்குப் பிறகு அவர் தமது மூத்தகுமாரிகள் இருவரையும் இரண்டு பெரிய பிரபுக்களுக்கு விவாகம் செய்து கொடுத்து அப்போதே தமது ராஜ்யத்தில் பாதியைப் பங்கிட்டு அவர்களுக்கு ஸ்திரீதனமாக கொடுத்துத் தமது ஜீவகாலத்திற்குப் பிறகு ராஜ்யத்தின் மற்றொரு பாதியை அவர்களே சரிபாதியாகப் பிரித்து எடுத்துக்கொள்ளலாமென்றும் ஒரு தான சாசனம் எழுதினார். உடனே இச்செய்தி இங்கிலாந்திலும் மற்ற நாடுகளிலும் பரவிற்று. அப்போது பிரான்சு தேசத்து அரசன் அந்த மூன்றாம் குமாரியின் நற்குணங்களையும் பிதா அவளுக்குப் புத்தியில்லாமல் செய்த அநீதியையும் செவ்வையாக அறிந்து அவள்மேல் மிக்க பிரியங்கொண்டு அவளுக்குச் ஸ்திரீதனம் கிடைக்காவிட்டாலும் அவளுடைய நற்குணமே தனக்குப் பெரிய தனம் என்று எண்ணி அவளை விவாகம் செய்துகொண்டான்.

பின்பு லீயர் அரசர் விருத்தியாப்பியத்தால் நாளுக்கு நாள் மெலிவை அடையவே அவருடைய மூத்த குமாரிகள் இருவரும் அவர்களுடைய கணவர்களும் ராஜ்யத்தில் தங்களுக்குக்கிடைத்த பாகங்களை வரவர விருத்தியாக்கத் தொடங்கி அந்த ராஜ்யமுழுவதையும் ராஜ்யாதிகாரம் அனைத்தையும் சில தினங்களில் தங்களுடைய வசமாக்கிக்கொண்டார்கள். அப்போது லீயர் அரசர் அறுபது வீரர்களோடு அடங்கிய பரிவாரத்துடன் தமது மூத்த குமாரியின் மாளிகைக்குப் போய்ச் சேர்ந்தார். அவளுடைய ஆதரவில் சிலநாள் அவர் இருந்து வருகையில் அவள் தந்தையை நோக்கி, "உங்களுடைய பரிவார ஜனங்கள் கூட்டமாக இருப்பதால் எங்களுக்கு அதிக அசௌகரியம் உண்டாகிறது. ஆதலால் அவர்களில் முப்பது வீரர்களைமட்டும் வைத்துக்கொண்டு மற்றவர்களை நீக்கிவிடுங்

கள்" என்று சொல்லவே அரசர் வேறு வகையில்லாமல் அதற்கு இணங்கினார். ஆயினும் அவர் இந்த அவமானத்தைப் பொறுக்கமாட்டாமல் தமது மூத்தமகளின் மாளிகையை விட்டுவிட்டு இரண்டாவது குமாரி இருந்தவிடத்துக்குத் தமது பரிவாரத்துடன் போய்ச் சேர்ந்தார். அங்கே போன சில தினங்களுக்குப்பிறகு அவள் தன் பிதாவுடன் வந்திருந்தவர்களில் ஐவரைத்தவிர மற்றவர்களை யெல்லாம் துரத்திவிட்டனள். அதனைப் பார்த்தவளவில் அரசர் மிக்க துக்கமடைந்து தம்முடைய வேலைக்காரர்கள் ஐவரையும் அழைத்துக்கொண்டு மறுபடி மூத்தமகளின் மாளிகைக்குப் புறபபட்டுச் சென்றார். ஆனால் அவள் தன்னுடைய பிதா ஒரு வேலைக்காரனைமட்டும் வைத்துக்கொண்டு மற்றவர்களை நீக்கிவிடாதபட்சத்தில் தன் வீட்டில் அவருக்கு இடங்கிடைக்கமாட்டாதென்று கண்டிப்பாய் உரைத்தனள். விருத்தாப்பியரான அரசர் அப்போது தமது மூன்றாவது குமாரியை நினைத்து, "முன்பு அவள் நம்மிடம் சொன்னவை யாவும் உண்மையே. அவளே உத்தமியென்று இப்போது நன்றாகத் தெரிகிறது. அறியாமையினால் நாம் அவளுக்கு மிக்க கொடுமையைச் செய்தோம். ஆயினும் அவள் சற்குணமுள்ளவளானதால் நாம் அவளிருக்குமிடஞ் செல்வோமானால் அவள் நமது நிலைமையைக்கண்டு நம்மிடம் இரக்கமுற்று நம்மை மிகவும் ஆதரிப்பாள். ஆகையால் அவ்விடம் போவதே நல்லது" என்று தமக்குள் முடிவுசெய்துகொண்டு முன்னதாக அவளுக்குக் கடிதமனுப்பி அவள் இருந்த பிரான்சுதேசத்துக்குப் புறப்பட்டார். அவர் அங்கே போய்ச் சேருவதற்கு முன்னமே அவள் தன் பிதாவுக்கு நேரிட்ட துன்பத்தைக் கேள்வியுற்று மிகவும் வருந்தியழுது தானாவது தன் புருஷனாவது தன் தேசத்திலுள்ள வேறு யாராவது தன் பிதாவின் கோலத்தைக் காணக்கூடாதென்று கருதித் தன்னிடம் நம்பிக்கையாயுள்ள சில உத்தியோகஸ்தர்களை அழைத்து அவர்களை நோக்கி, "என்னுடைய பிதா இங்கே வரப்போகிறார். அவர் கப்பலைவிட்டிறங்கியவுடன் அவரைத் தனியே ஓரிடத்துக்கு அழைத்துச்சென்று அங்கே தகுந்த ஆடையாபரணங்களால் அவரை அலங்கரிப்பித்து அவருடைய கௌரவத்துக்குத் தக்கபடி பரிவாரங்களைக் கொடுத்து அவர் இங்கிலாந்திலிருந்து அங்கே வந்திறங்கி

யிருக்கிற செய்தியை நமது அரசருக்கு யார்முகமாகவாவது சொல்லியனுப்புங்கள்" என்றனள். அவளுடைய கட்டளைப்படியே அவர்கள் துறைமுகஞ்சார்ந்து அங்கே லீயர் அரசர் வந்தவுடன் அரசி சொன்னவிதமாக அவருக்கு எல்லாவிதமான சௌகரியங்களையும் செய்வித்து அவர் வந்த செய்தியைச் சொல்லியனுப்பினார்கள் உடனே அவளும் அவளுடைய புருஷனாகிய பிரான்சுதேசத்து அரசனும் தங்கள் மந்திரிகள், பிரதானிகள், பிரபுக்கள், வீரர்கள் முதலியவர்களுடன் சென்று லீயர் அரசரை மிக்க மரியாதையாக எதிர்கொண்டழைத்துவந்து அவருக்கு எல்லாவிதமான உபசாரணைகளையும் செய்தார்கள் மூத்த குமாரிகள் இருவரும் தம்மை மிகவும் அவமரியாதையாக நடத்தினார்கள் என்று அவர் அவளிடம் சொல்ல, அவள் மிக்க கோபமுற்று உடனே தகுந்த சேனைகளுடனே இங்கிலாந்துக்குப் புறப்பட்டுச் சென்று தன் சகோதரிகளையும் அவர்களுடைய கணவர்களையும் ஜயித்து அவர்கள் வசத்திலிருந்த ராஜ்யத்தைப் பிடுங்கித் தன் பிதாவின் வசமாக விட்டு அவர் கவலையற்று வாழ்ந்திருக்கும்வண்ணம் தகுந்த ஏற்பாடுசெய்து தன் தேசத்துக்குத் திரும்பினாள் "வெளி வார்த்தைகளால் நாம் மோசம்போனோம் உண்மையில் நம்மிடம் அன்புடையவள் நமது மூன்றாவது புத்திரியே" என்று லீயர் அரசர் அப்போது எண்ணினார்



## 27. தாயுமானவர்.

சோழவளநாட்டின்கண் உள்ள வேதாரணியம் என்று சொல்லப்படும் திருமறைக்காட்டில் ஏறக்குறைய மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பு கேடிலியப்பபிள்ளை என்றொரு சைவவேளாளர் இருந்தனர். அவர் தெய்வ பக்தியிலும் அருள் அடக்கம் நடை முதலியவற்றிலும் சிறந்து விளங்கினார். அதனால் அவர் அந்நகரத்திலுள்ள சிவாலயத்தின்மேல் விசாரணைக் கர்த்தராக நியமிக்கப்பெற்று அவ்வாலயத்தை மிகவும் ஒழுங்காகப் பரிபாலனம் செய்துவந்தார். அவருடைய தமையனுக்குப் புருஷசந்ததி யில்லாமையால் அவருக்கு இருந்த மனக்குறையை நீக்கும்பொருட்டுத் தம்மு

டைய ஒரே குமாரனைச் சுவீகாரமாகக் கொடுத்துவிட்டுத் தம க்கு மக்கட்பேறு உண்டாகவேண்டுமென்று ஒவ்வொருநாளும் கடவுளை வழிபட்டு வருவாராயினர். அவருடையகாலத்தில் திருச்சிராப்பள்ளியில் அரசாட்சி செய்துவந்த விஜய ரகு நாத சொக்கலிங்க நாயகர் என்பவர் கேடிலியப்பபிள்ளை யின் குணவிசேஷங்களைக் கேள்வியுற்று அவரைத் தம்மிடம் தருவித்துத் தமது அரண்மனையில் பெரிய சம்பிரதி (Head Accountant) என்னும் உத்தியோகத்தைக் கொடுத்தனர். அதுமுதல் கேடிலியப்பபிள்ளை தமது குடும்பத்துடன் திரிசிரபுரத்திலேயே யிருந்துகொண்டு தமக்குக் கிடைத்த உத்தி யோகத்தைச் செவ்வையாகப் பார்த்துவந்ததோடு புத்திரபாக் கியத்தைக் கருதித் தினந்தோறும் ஆலயம் சென்று திரிசிராமலை நாதரான தாயுமானவரைத் தரிசித்துவந்தார்

இவ்வாறு அவர் செய்துவருகையில் கடவுளின் பெருங் கருணையால் அவருக்கு ஒரு நல்லதினத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதுகண்ட அவர் பேருவகைகொண்டு தாயுமானவருக்குப் பலவிதமான காணிக்கைகளைச் செலுத்தி அளவற்ற தானங்களைச் செய்து தமது குழந்தைக்குத் தாயு மானவனென்றே நாமகரணம் செய்தார்.

தாயுமானவர் உரிய பருவத்தில் வித்தியாரம்பம் செய்விக் கப்பெற்று நல்லாசிரியர்பால் நல்ல நூல்களை முறையே பாடங் கேட்டுத் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களில் நல்ல பயிற் சியை யடைந்ததோடு வடமொழியும் பயின்று அறுவகைச் சமய நூல்களையும் ஞான நூல்களையும் செவ்வனே ஆராய்ந் தறிந்து மிக்க புகழோடு விளங்கினார்

அங்ஙனம் இருக்கையில் அவருடைய தந்தையாரான கேடிலியப்பபிள்ளை யென்பவர் உலகவாழ்க்கையை விட்டு நீங்கினார். தந்தையின் பிரிவாற்றாது வருந்தித் தாயுமானவர் அவருக்குச்செய்யவேண்டிய உத்தரக்கிரியைகளை ஒழுங்காகச் செய்து முடித்தனர். திரிசிரபுரத்து அரசர் தாயுமானவரை ஒருநாள் வருவித்துத் தந்தையினும் அவர் மிக்க வல்லுநராய் இருத்தலை நன்குணர்ந்து பெரிய சம்பிரதி உத்தியோகத்தை அவருக்கே கொடுத்தனர். தாயுமானவர் அதனை அன்புடன் ஏற்றுச் சோர்வில்லாமல் அதனைப் பார்த்துவந்ததுடன் தம

ஒழுக்கநெறி தவறுமலும் சாஸ்திர ஆராய்ச்சி குறைவுபடாமலும் சிறப்புற்று இருந்தார்.

திருமூலர் மரபில் உதித்தவரும் தருமபுர ஆதீனத்தைச் சார்ந்தோருமான மௌனகுரு தேசிகர் என்னும் சிவயோகி ஒருவர் சிவஸ்தலயாத்திரை செய்துகொண்டுவந்து ஒருநாள் திரிசிராமலையிலுள்ள சிவபெருமானைத் தரிசித்து அங்கேயுள்ள சாரமாமுனி மடத்தில் தங்கினர். அவரை அவ்வூரிலுள்ள சிவநேசச் செல்வர்கள் பலரும் அடைந்து வணங்கிச் சிவஞான சித்தியார் முதலிய சித்தாந்த நூல்களை அவரிடம் முறையாகப் பாடங்கேட்டு வந்தார்கள். அப்போது ஒருநாள் தாயுமானவர் சாரமாமுனிவர் மடத்துக்கருகேயுள்ள குமாரக் கடவுளை வணங்கிவிட்டு மீண்டு வரும்போது மௌனதேசிகரைக் கண்டு மனமுருகிப் பரவசமுற்று அவருடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கினர். அவருடைய பரிபக்குவ நிலைமை மௌனதேசிகர் கண்டு ஆனந்தமுற்று அவரைத் தமது அருகே அழைத்து அவருக்கு ஞானோபதேசஞ் செய்தார். அன்று முதல் தாயுமானவர் சைவசித்தாந்த நூல்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்து முன்பு தாம் பயின்ற வேதாந்த நூல்களோடு மாறுபடாமல் சமரசவழியிலே ஒழுகுவாராய்த் தமது ஞானசாரியாராகிய மௌனதேசிகரிடத்தில் மிக்க பக்தி கொண்டு தினந்தோறும் அவர் உபதேசித்தருளியவற்றை நன்றாகச் சிந்தித்துத் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் நிஷ்டையில் இருப்பாராயினர்.

இவ்வாறு ஞானத்தால் கடவுளின் இயல்பை அறிந்த தாயுமானவர் மனமகிழ்ந்து உலகத்தோருக்கு உபகாரமாக, "திருவருள்விலாசப் பரசிவவணக்கம்" என்னும் மூன்று பாடல்களால் முதற்கடவுளையும் அம்முதற்கடவுள் சிவபெருமான் எனக்கொண்டு சிவபெருமானையும் சிவசக்தியையும் குறித்துப் "பரிபூரணானந்தம்" என்னும் பத்துப் பாடல்கள் பாடினர். பிறகு தாம் நிஷ்டைகூடுமிடத்தில் நின்று தக்ஷிணாமூர்த்திக் கடவுளாகி, கல்லாலின் கீழமர்ந்து நான்மறை யாறங்கம்முதல் கற்ற கேள்வி வல்லார்கள் நால்வருக்கும் சிவபெருமான் உபதேசித்தருளிய நிலைமையை விளக்கி, "சின்மயானந்தகுரு" என்னும் பதினொரு பாடல்கள் பாடித் தமது ஆசிரியரது ஒருமையைப் பத்துப் பாடல்களால் விளங்கக் கூறினர்.

மேலே சொன்ன பாடல்களுள் சில வருமாறு:--

அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமா
யானந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினிற்
றட்டாம னின்றதெது சமய கோடிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்கா
யாதினும் வல்ல வொரு சித்தாகி
யென்றைக்கு முள்ளதெதுமேற்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ்சலி செய்குவாம்

ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோநெடிய
வாலமமுதாக விலையோ
வக்கடலின் மீதுவட வனனிற்க வில்லையோ
வந்தரத் தகிலகோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ மேருவுந்
தனுவாக வளையவிலையோ
சப்த மேகங்களும் வச்ரதர னாணையிற்
சஞ்சரித்திட வில்லையோ
வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டு சித்திகளுலக
மார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவது னக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

ஐந்துவகை யாகின்ற பூத பேதத்தினால்
ஆகின்ற ஆக்கைநீர்மேல்
அமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்னநான்
அறியாத காலமெல்லாம்
புந்திமகி ழுறவுண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி யென்றிருந்தேன்
பூராய மாகநின தருள்வந் துணர்த்தவிவை
போனவழி தெரியவில்லை
எந்தநிலை பேசினும் இணங்கவிலை யல்லால்
இறப்பொடு பிறப்பையுள்ளே
யெண்ணினால் நெஞ்சது பகீரெனுந் துயிலுறா
திருவிழியு மிரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கமிவை யென்கொலோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயானந்த குருவே.

கல்லாத அறிவுமேற் கேளாத கேள்வியும்
கருணைசிறி தேதுமில்லாக்
காட்சியும் கொலைகளவு கள்காம மாட்சியாக்
காதலித்திடு நெஞ்சமும்
பொல்லாத பொய்ம்மொழியு மல்லாது நன்மைகள்
பொருந்துகுண மேதுமறியேன்
புருஷர்வடி வானதே அல்லாது கனவிலும்
புருஷார்த்த மேதுமில்லேன்
எல்லா மறிந்தநீ அறியாத தன்றெனக்கு
எவ்வண்ண முய்வண்ணமோ
இருவினையிரு ளென்றவர்க் கொளிதாரகம் பெறும்
எனக்குநின் னருடாரகம்
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தேயிந்த
வஞ்சகனை யாளநினையாய்
மந்திர குருவேயோக தந்திர குருவேமூலன்
மரபின்வரு மௌனகுருவே.

தாயுமானவருடைய சிறிய தாயாரின் குமாரரான அருளையபிள்ளை யென்பவர் அவருடைய பாடல்களை யெல்லாம் பாராயணஞ் செய்துகொண்டு அவற்றை எங்கும் பரவச் செய்தார்.

இவர் கணக்குகளில் எல்லாம் சிவமயம், திருச்சிற்றம்பலம் என்னும் சொற்களை ஏடுதோறும் எழுதிக்கொண்டுவந்தனர். அரசர் இவருடைய பக்தி விசேஷத்தையும் யோக முதிர்ச்சியையும் அற்புதச் செயல்களையும் கண்டு இவரை வணங்கி. "இதுவரையில் அடியேன் தேவரீருடைய பெருமையைக் கண்டுகொள்ளாத அபராதத்தைப் பொறுத்தருள வேண்டும். அல்லாமலும் அடியேனால் ஆகவேண்டியதைச் செய்வித்துக்கொண்டு நிஷ்டைக்குக் குறைவுவாராமல் இருந்தருள வேண்டுகிறேன்" என்று கூறினார். தாயுமானவர் அது கேட்டு மகிழ்ந்து அன்றுமுதலாக ஞான் யோகத்தில் இருந்துகொண்டு கடவுளைத் துதித்துவந்தார்.

இப்படியிருக்கையில் அரசர் இறந்துபோனார். ராஜ்யம் அவரது மனைவியின் கைக்கு வந்தது. இராசாங்க காரியங்களை ஒழுங்குபடுத்தும்பொருட்டு அரசி தாயுமானவரை மறுபடி பெரிய சம்பிரதி யுத்தியோகத்தி லிருக்கும்படி வேண்ட அவர் அதனை மறுத்தற்கஞ்சி அன்றிரவே தம் வீட்டிலுள்ள அருளைய பிள்ளையுடன் புறப்பட்டு ஸ்தலயாத்திரை செய்யக் கருதித் தென்றிசை நோக்கிச் சென்றார். பத்துமைல் தூரத்துக் கப்பாலுள்ள நல்லூர் என்னும் கிராமத்தை யடைந்து தாம் பூசைசெய்யும் சிவபூசைப் பெட்டியை எடுத்துவர மறந்தமையால் வீட்டுக்குச் சென்று அதனை எடுத்து வருமாறு அருளையபிள்ளையை அனுப்பி ஓரிடத்தில் பட்டினியாக இருந்தார். ஆங்குள்ளோர் அவருடைய தோற்றப் பொலிவையும் நிஷ்டையையும் கண்டு அருகேவந்து வணங்கி உணவு கொண்டருள வேண்டுமென்றார்கள். பூசைசெய்யாமல் உண்ண முடியாது என்று சொல்லி அவர் மறுக்கவே பாலேனும் உட்கொள்ளலாமென்று கொணர்ந்து கொடுத்தார்கள். மறுக்க முடியாமல் அதனை வாங்கி வைத்துத் தாம் பூசை பண்ணுமல் அருந்தவேண்டியதைக் குறித்து,

"பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித்திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்கமனமு
நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனில்
நாணுமென் னுளநிற்றிநீ

நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்யல்முறையோ
விண்ணே விணாதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தேயவ் வித்தின்முளையே
கண்ணே கருத்தேயென் எண்ணே எழுத்தே
கதிக்கான மோனவடிவே
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே"

என்னும் செய்யுளைப் பாடினார். அப்போது திருச்சிராப்பள்ளியில் மந்திரி முதலானோர் தாயுமானவரைச் காணாமையால் அரசியிடம் தெரிவிக்க அவள் கட்டளைப்படி, அவரைத் தேடும்பொருட்டுச் சிலர் புறப்பட்டார்கள். அவர்களுள் மந்திரவித்தை தெரிந்த ஒருவன் நல்லூரையடைந்து தியானத்திலிருந்த தாயுமானவரின் பின்புறத்தே வந்து வசீகர மந்திரத்தைப் பிரயோகித்தான். அப்போது தாயுமானவர் விழித்து அவனை நோக்க, அவன் மனங்கலங்கி அவரை வணங்கித் தான் செய்த குற்றத்தைப் பொறுத்தருளுமவண்ணம் பிரார்த்தித்து மீண்டுபோனான். பிறகு பூசைப்பெட்டியுடன் வந்த அருளைய பிள்ளையோடு இராமேசுவரம் நோக்கிச் சென்றார்.

வழியில் விராலிமலை திருக்கோகர்ணம் என்னும் தலங்களைத் தரிசித்துக்கொண்டு கடைசியில் இராமேசுவரத்தையடைந்தார். அங்கே கடலில் நீராடி இராமநாதரைப் போற்றி மலைவளர் காதலி யென்னும் உமாதேவியாரைக் குறித்து,

"பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரொணாந்திடர மணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காய சித்திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மை நின்றாளிற்
கருத்தொன்று முண்டாகுமேல்

நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவா னந்தவொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூதனன் றங்கையையே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர் காதலிப் பெண்ணுமையே''

என்பது முதலான பத்துப் பாடல்களைப் பாடினார். அங்கேயே சிலகாலமிருந்து அப்பால் அருளைய பிள்ளையுடன் வடதிசை நோக்கிப் புறப்பட்டார். பிறகு சிலநாளில் இருவரும் வேதாரணியம் போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடத்தில் இவருக்கு விவாகம் செய்விக்க வேண்டுமென்று இவருடைய தாயும் தமையனும் முயன்றார்கள். தமக்கு விவாகமே வேண்டாமென்று பலவாறு வெறுத்துக் கூறினார். அவர்கள் சந்ததி விளங்கவேண்டுமென்று வற்புறுத்திக் கூறினமையால் இவர் உடன்பட்டார். பிறகு நல்ல குலத்தில் உதித்த ஓர் உத்தமக் கன்னிகையை இவருக்கு மணம் புரிவித்தார்கள். அப்பால் தாயுமானவர் சிலகாலம் இல்லறம் நடத்திவந்தார். அப்போது அவர் பாடிய பாடல்கள் பல.

இங்ஙனமிருக்கையில் தாயுமானவரின் தாயார் சிவபதமடைந்தனர். பிறகு தாயுமானவரின் மனைவி ஓர் ஆண்மகவைப் பெற்றனள். அக்குழந்தைக்குக் கனகசபாபதி யென்னும் பெயர் வைக்கப்பட்டது. மைந்தனைப்பெற்ற சிலகாலத்தில் தாயுமானவரின் மனைவியும் இறந்தனள். அப்பால் தாயுமானவர் தம்முடைய செல்வத்தையும் குமாரனையும் தமது தமையனிடம் ஒப்பித்துக் கடுந்துறவு பூண்டு தேசசஞ்சாரம் செய்வாராயினர். அருளையபிள்ளையும் அவருடன் சென்றார்

பிறகு திரிசிரபுரம் வந்து தமது குருவைத் தரிசித்துப் பல அற்புதமான பாடல்கள் பாடித் துதித்துக்கொண்டு அங்கேயே சிலகால மிருந்தார். அப்போது மௌனகுரு காலஞ்செல்லவே தாயுமானவரே அந்த மடத்துக்குத் தலைவரானார்.

அங்கே சிலகாலமிருந்து பிறகு தென்றிசை நோக்கிப் புறப் பட்டார்

சிவதலம் பலவற்றையும் தரிசித்துக்கொண்டு இராமநாத புரத்தின் கீழ்பால் காடுசூழ்ந்த இடத்தில் ஒரு புளியமரத்தி னடியில் தங்கியிருந்தார். அங்கேயே அவர் தவநிலையில் இருந்தனர்.

இராமநாதபுரத்தின் கிழக்கேயுள்ள இலட்சுமிபுரத்தில் ஓரக்கிரகாரம் உண்டு. அங்கே ஒரு பிராமணமாது வீட்டில் தமக்குப் பசிவந்தபோது அவர் சோறுவாங்கி யுண்டு மரத்தடி யில் நிஷ்டைகூடி யிருப்பார். ஒரு சமயம் அநேகநாள் பிரேதா சனமான நிஷ்டையிலேயே இருக்க ஆங்குள்ள சிலர் இவ ரைப் பிணமென்று நினைத்து அரசனுக்குத் தெரிவித்தார். அரசன் ஆராய்ந்து பாராமல் உடனே இவரை நெருப்பி டும்படி கட்டளையிட்டான். அப்படியே சிதையடுக்கித் தாயுமானவரை யெடுத்து அதன்மீது வைத்து நெருப்பு மூட்டிவிட்டார்கள். அந்தத்தீ சரீரத்தில் தாக்கிப் பற்றிய வுடன் தாயுமானவர் யோகநிஷ்டை தெளிந்து விழித்தெழுந் தனர். அப்போது அருளையபிள்ளை ஓடிவந்து புலம்பி இவரை யெடுக்கத் துணியவும், இவர் "என் சரீரத்தில் சில பாகம் வெந்துவிட்டது; இனி உயிர் நில்லாது" என்று சொல்லியருளி அன்றைத்தினமே மாலையில் அர்த்தமண்டல சமயத்தில் தேகவியோகமானார்.



# செய்யுட் பாடம்.

## அருணாசலகவி ராமாயணம்

### சீதையின் நிலைமையை இராமருக்கு அனுமார் கூறல்.

விருத்தம்.

வண்டேபோல் மனம்சுழல இந்தவண்ணம்
மடலேபோல் சுக்ரீவனுடனே சொல்லிக்
கொண்டேதென் முகத்திலே முகத்தை வைத்துக்
குறித்துரா கவனிருந்த சபைக்கு முன்னே
பண்டேஅங் கதன்முதற்சே னைகள்பின் செல்லப்
பறந்துவந்து கரங்குவித்துப் பணிந்து கண்டேன்
கண்டேன்சீ தையையென்று கூவிக் கூவிக்
கதிகொண்டான் அனுமன்வந்து குதிகொண் டானே.

தரு.

இராகம், முகாரி.] [அடதாள சாப்பு.

பல்லவி.

கண்டேன் கண்டேன் கண்டேன் சீதையைக்
கண்டேன் ராகவா.

அநுபல்லவி.

அண்டரும் காணாத இலங்கா புரத்திலே
அரவிந்த வேதாவைத் தரவந்த மாதாவைக்—கண்டேன்.

சரணங்கள்.

1. காவி விழிகளில்உன் உருவெளி மின்னக்
கனிவாய் தனிலேஉன் திருநாம மேபன்ன
ஆவித் துணையைப் பிரிந்த மடஅன்னம்
ஆணுள்நான் சொல்வ தென்ன
பூவைத் திரிசடை நித்தம்நித்தம் சொன்ன
புத்தி வழியேதன் புத்திநிலை மன்னப்
பாவி அரக்கியர் காவற்சிறை துன்னப்
பஞ்சுபடிந்த பழம்சித் திரமென்னக்—கண்டேன்.

2. பனிக்கால வாரிசம் போல நிறம்கூசிப்
பகலொரு யுகமாகக் கழித்தாளே பிரயாசி
நினைத்தங்கே ராவணன் அந்நாள் வரச்சீசி
நில்லடா என்றேசி
தனித்துத்தன் உயிர்தன்னைத் தான்விட மகராசி
சாரும் பொழுதுகாணும் சமயமிது வேவாசி
இனித்தா மதஞ்செய்யல் ஆகாதென் றிடர்வீசி [டேன்.
ராமராமராம ராமவென் றெதிர்பேசிக்—கண்

3. அடல்சேரும் வாலியை வானுல கிலேகூட்டி
அவனியைச் சுக்கிரீவன் ஆள முடிசூட்டி
உடனேநீ தூதுபோ என்றசொல் அமுதூட்டி
உன்னெழில் பாராட்டி
விடவந்த அனுமந்தன் நானென்று சீராட்டி
விவரஞ் சொல்லஉயிர்கொண் டிருக்கிறாள் சீமாட்டி
திடமா லட்சுமணன்செய்த பர்ணசாலை வீட்டில் [டேன்.
தேவாதி தேவாஉன் திருவாழி தன்னைக்காட்டிக்—கண்



சிவப்பிரகாச சுவாமிகள்

இயற்றிய

# நன்னெறி.



1 மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க;— ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ, நன்னுதால்! ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு?

2 பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி ஆக்குபவர் பேறும்; பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு

3. நீக்கம் அறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர்பெருமை நொய்தாகும்—பூக்குழலாய்!
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழுதைபோல்
புல்லினும் திண்மைநிலை போம்

4. காதல் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதில் ஒருகருமம் செய்பவே ஓதுகலை
எண்ணிரண்டும் ஒன்றுமதி என்முகத்தாய்! நோக்குமால்
கண்ணிரண்டும் ஒன்றையே காண்

5. கடலே அனையம்யாம் கல்வியால் என்னும்
அடலே றனையசெருக் காழ்த்தி - விடலே.
முனிக்கரசு கையால் முகந்து முழங்கும்
பனிக்கடலும் உண்ணப் படும்

6 உள்ளம கவர்நதெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ, தடங்கரைதான் பேர்த்து
விடுததல் அரிதோ, விளம்பு.

7. தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்;—திங்கள்
கறையிருளை நீககக் கருதா துலகின்
நிறையிருளை நீககுமேல் நின்று

8. தொலையாப் பெருஞ்செல்வத தோற்றததோமென்று
தலையா யவர்செருககுச் சார்தல்—இலையால்
இரைக்கும் வண்டூதுமல ரீர்ங்கோதாய் மேரு
வரைக்கும வநதன்று வளைவு

9 இல்லானுக் கன்பிங் கிடம்பொருள் ஏவலென்
றெல்லாம் இருநதுமற் றென்செய்யும்?—நல்லாய்!
மொழியிலார்க் கேது முதுநூல்? தெரியும்
விழியிலார்க கேது விளக்கு?

10. தம்மையும் தங்கள் தலைமையையும் பார்த்துயர்நதோர்
தம்மை மதியார் தமையடைந்தோர்—தம்மின்
இழியினும் செல்வர்: இடர்தீர்ப்பர்; அல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல்?

11. எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ?—பைந்தொடீஇ!
நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்றும் உதவும் கனி.

12. இன்சொலால் அன்றி [illegible] வியனுலகம்
வன்சொலால் என்றும் [illegible]—பொன்செய்
அதிர்வளையாய்! [illegible] தண்ணென்
[illegible]

13. [illegible]லோர் வரனால் நகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவால் அழுங்குவார்—வல்லோர்
இருந்தும் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்தும் சுழல்கால் வர

14. பெரியவர்தம் நோய்போல் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியின் இழுதாவர் என்க;—தெரியிழாய்!
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்

15. எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத்தறிவார்க் காணின் இலையாம்—எழுத்தறிவார்
ஆயும் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்
வீயும் சுரநீர் மிகை

16 ஆக்கு மறிவா னலது பிறப்பினால்
மீக்கோ ருயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரார் ரரவின் பருமணிகண் டென்றும்
கவரார் கடலின் கடு

17 உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே;—வண்டுமலர்ச்
சேக்கை விரும்பும் செழும்பொழில்வாய் வேம்பன்றே
காக்கை விரும்பும் கனி

18. உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்—மடவரால்!
கண்ணளவாய் நின்றதோ, காணுங் கதிரொளிதான்
விண்ணளவா யிற்றோ? விளம்பு.

19. கைம்மா[illegible]றறிந்தோர் மெய்வருந்தித்
[illegible]செய்வர்.—அம்மா!
[illegible] எயிறு [illegible] விற்கு
[illegible] மென்று.

20. மூனிவினும் நல்குவர் மூதறிஞர்; உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்—நனிவிளைவில்
காயினும் ஆகும் கதலிதான்: எட்டிபழுத்
தாயினும் ஆமோ அறை.

21. உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபாத் துற்றோர்
அடுக்கு மொருகோடி யாக—நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியா யஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான்.

22. கொள்ளுங் கொடுங்கூற்றம் கொல்வான் குறுகுதன்முன்
உள்ளம் கனிந்தறஞ்செய் துய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணைகோலி வையார்;
பெருகுதற்கண் என் செய்வார் பேசு.

23. பேரறிஞர் தாக்கும் பிறர்துயரம் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்.—நேரிழாய்!
மெய்சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேல்
கைசென்று தாங்கும் கடிது. half yearly Examined

24. பன்னும் பனுவல் பயன்றேர் அறிவிலார்
மன்னும் அறங்கள் வலியிலவே.—நன்னுதாஅல்!
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றுன்?

25. எள்ளா திருப்ப இழிஞர்போற் றற்குரியர்
விள்ளா அறிஞரது வேண்டாரே—தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல்.

26. அறிவுடையார் அன்றி அதுபெறார் தம்பால்
செறிபழியை அஞ்சார் சிறிதும்.—பிறைநுதாஅல்!
வண்ணஞ்செய் வாள்விழியே அன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு.

27. தக்கார்க்கே ஈவர் தகார்க்களிப்பார் இல்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்.—எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய்.

28. நல்லார் செயுங்கேண்மை நாடோறும் நன்றாகும்:
அல்லார் செயுங்கேண்மை ஆகாதே.—நல்லாய்கேள்!
காய்முற்றின் தின்றீங் கனியாம்: இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்னாகிப் போம்?

29. கற்றறியார் செய்யும் கடுநட்பும் தாங்கூடி
உற்றுழியும் தீமை நிகழ்வுள்ளதே;—பொற்றொடீஇ!
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
அன்றே மணமுடைய தாம்.

30. பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத்தாம் மற்றெவ்வார்—மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே அதுபுனையாக்
காணுங் கண்ணொக்குமோ காண்?



முன்றுறையரையனார்

இயற்றிய

# பழமொழி.

1. ஓவத்தனை வைப்பென் றுணரற்க தாமதனைத்
துய்த்து வழங்கி யிருபாலும்—அத்தகத
தக்குழி நோக்கி யறஞ்செய்யி னஃதன்றோ.
எய்ப்பினில் வைப்பென் பது?

2. பட்ட வகையால் பலரும் வருந்தாமல்
கட்டுடைத் தாகக் கருதிய நல்லறம்
முட்டுடைத தாக இடைதவிர்ந்து வீழ்தலில
நட்டறுன் ஆதலே நன்று.

3. மாய்வதன் முன்னே வகைப்பட்ட நல்வினையை
ஆய்வின்றிச் செய்யாதார் பின்னை வழிநினைந்து
நோய்காண் பொழுதின் அறஞ்செய்வார்க் காணுமை
நாய்காணிற் கற்காணு வாறு.

4. வழங்கலுந் துய்த்தலுந் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்—தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப அதுவன்றோ
நாய்பெற்ற தெங்கம் பழம்.

5. அருமை யுடைய பொருளுடையார் தங்கண்
கருமம் உடையாரை நாடார்.—எருமைமேல்
நாரை துயில்வதியும் ஊர! குளந்தொட்டுத்
தேரை வழிச்சென்றா ரில்.

6. புன்சொல்லும் நன்சொல்லும் பொய்யின் றுணர்கிற்பார்
வன்சொல் வழியராய் வாழ்தலும உண்டாமோ?
புன்சொல் இடர்ப்படுப்ப தல்லால் ஒருவனை
இன்சொல் இடர்ப்படுப்ப தில்

நன்கோன் றறிபவர் நாழி கொடுப்பவர்க்
கென்று முறுதியே சூழ்க வெறிதிரை
சென்றுலாஞ் சேர்ப்ப வதுபோல நீர்போயும்
ஒன்றிரண்டாம் வாணிக மில்

8. எனக்குத் தகவன்று லென்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் தானாய்த் தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் தென்னவனுங் காணார்
எனசசெய்யார் மாணா வினை

9. பொல்லாத சொல்லி மறைநதொழுகும பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்படுக்கும்—நல்லாய்!
மணலுள் முழுகி மறைநது கிடக்கும்
நுணலுநதன் வாயாற் கெடும

10 பயனோக்கா தாற்றவும் பாததறிவொன் றின்றி
இசைநோக்கி ஈகின்றார் ஈகை—வயமாபபோல்
ஆலித்துப் பாயும் அலைகடல் தண்சேர்ப்ப!
கூலிக்குச் செய்துண்ணும் ஆறு

11. மூட்டின் றொருவ னுடைய பொழுதின்கண்
அட்டிற்றுத் தின்பவ ராயிரவ ராபவே
கட்டலர்தார் மார்ப கலியூழிக் காலத்துக்
கெட்டார்க்கு நட்டாரோ இல்.

12. இரப்பவர்க் கீயக் குறைபடுமென் றெண்ணிக்
கரப்பவர் கண்டறியார் கொல்லோ?—பரப்பில்
துறைத்தோணி நின்றுலாம் தூங்குநீர்ச் சேர்ப்ப!
இறைத்தோறும் ஊறுங் கிணறு

13. கன்றி முதிர்ந்த கழியப்பல் நாட்செயினும்
என்றும் சிறியார்கண் என்னுந் தோன்றாவாம்
ஒன்றாய் விடினும் உயர்ந்தார்ப் படுங்குற்றம்
குன்றின்மேல் இட்ட விளக்கு.

14. தெரியா தவர்தம் திறனில்சொல் கேட்டால்
பரியாதார் போல இருக்க—பிரிவில்லா
வம்பலர் வாழை அவிப்பான் புகுவாரேல்
அம்பலம் தாழ்க்கூட்டு வார்

15. நீர்த்தக வில்லார் நிரம்பாமைத் தந்நலியின்
கூர்த்தவரைத் தாநலிதல் கோளன்றால்—சான்றோர்கருப்
பார்த்தோடிச் சென்று கதம்பட்டு நாய்கௌவில்
பேர்த்துநாய் கௌவினா ரில்.

16. நேராவ உரைத்தாரைத் தாம்பொறுக் கல்லாதார்
நாவின் ஒருவரை வைதால் வயவுரை,
பூவிற் பொலிந்தகன்ற கண்ணாய்! அதுவன்றோ
தீயில்லை ஊட்டும் திறம்?

17. எண்ணக் குறைபடாச் செல்வமும், இற்பிறப்பும்
மன்ன ருடைய உடைமையும்,—மன்னரால்
இன்ன ரெனல், வேண்டா இம்மைக்கும் உம்மைக்கும்
தம்மை உடைமை தலை.

18. இன்றியமையா இருமுது[illegible]களும் [வோ
பொன்றி னமைகண்டும் பொருள்பொருளாக் கொள்ப
ஒன்றும் வகையா னறஞ்செய்க ஊர்ந்துருளின்
குன்றும் வழிதடுப்ப தில்.

19. முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார்
பிற்பெரிய செல்வம் பெறலாமோ—வைப்போ
டிகலிப் பொருள்செய்ய எண்ணியக்கா லென்னும்
முதலிலார்க்கு ஊதிய மில்.

20. மறுமனத்தான் அல்லாத மாநலத்த வேந்தன்
உறுமனத்த னாகி யொழுகின்—செறுமனத்தார்
பாயிரம் கூறிப் படைதொக்கால் என்செய்ப
ஆயிரங் காக்கைக்கோர் கல்.

21. உணற்கினிய இன்னீர் பிறிதுழியில் என்னும்
கிணற்றகத்துத் தேரைபோ லாகார்—கணக்கினை
முற்றப் பகலும் முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று.

22. ஆற்றவுங் கற்றார் அறிவுடையார்; அஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை; அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம்; ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில்.

23. எமக்குத் துணையாவார் வேண்டுமென் றெண்ணித்
தமக்குத் துணையாவார் தாந்தெரிதல் வேண்டா;
பிறர்க்குப் பிறர்செய்வ துண்டோமற் றில்லை;
தமக்கு மருத்துவர் தாம்.

24. ஆயிரவரானு மறிவிலார் தொக்கக்கால்
மாயிரு ஞாலத்து மாண்பொருவன் போல்கலார்
பாயிருள் நீக்கும் மதியம்போல் பன்மீனும்
காய்கலா வாகும் நிலா.

25. கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்
பொல்லாத தில்லை யொருவற்கு—நல்லாய்
இழுக்கத்தின் மிக்க இழிவில்லை யில்லை
ஒழுக்கத்தின் மிக்க உயர்வு.

26. உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
அடக்கமில் உள்ளத்த னாகி—நடக்கையின்
ஒள்ளியன் அல்லான் மேல்வைத்தல் குரங்கின்கைக்
கொள்ளி கொடுத்து விடல்.

27 நெறியால் உணராது நீர்மையும் இன்றிச்
சிறியார் எளியரால் என்று பெரியாரைத்
தங்கணோர் வைத்துத் தகவல்ல கூறுதல்'
திங்களை நாய்குரைத் தற்று

28 பெரிய நட்டார்க்கும் பகைவர்க்கும சென்று
திரிவின்றித் தீர்ந்தார்போல் சொல்லி யவருள்
ஒருவ ரொடுமொன்றி யொருப்படா தாரே
இருதலைக் கொள்ளி யென்பார்



# பட்டினத்துப்பிள்ளை பாடல்.

1. ஊருஞ்சதமல்ல, உற்றார்சதமல்ல, உற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்ல, பெண்டீர்சதமல்ல, பிள்ளைகளும்
சீருஞ்சதமல்ல, செல்வஞ்சதமல்ல, தேசத்திலே
யாருஞ்சதமல்ல, நின்தாள்சதம்கச்சி யேகம்பனே!

2. ஓயாமற்பொய்சொல்வர், நல்லோரைநிந்திப்பர், உற்றுப்பெற்ற
தாயாரைவைவர், சதியாயிரஞ்செய்வர், சாத்திரங்கள்
ஆயார், பிறர்க்குபகாரஞ்செய்யார், தம்மை அண்டினர்க்கொன்
றீயார், இருந்தென்ன? போயென்னகாண்கச்சி யேகம்பனே!

3. சொல்லால்வருங்குற்றம், சிந்தையால்வரும் தோடம், செய்த
பொல்லாததீவினை, பார்வையிற்பாவங்கள், புண்ணியநூல்
அல்லாதகேள்வியைக் கேட்டிடுந்தீங்குக ளாயவு,மற்
றெல்லாப்பிழையும் பொறுத்தருள்வாய்கச்சி யேகம்பனே!

4. ஓடாமல்பாழுக் குழையாமல்ஓரம் உரைப்பவர்பால்
கூடாமல்நல்லவர் கூட்டம்விடாமல்வெங் கோபநெஞ்சில்
நாடாமல்நன்மை வழுவாமல்இன்றைக்கு நாளைக்கென்று
தேடாமல்செல்வம் தருவாய்சிதம்பர தேசிகனே.

5. அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே. விழி யம்பொழுக
மெத்தியமாதரும் வீதிமட்டே. விம்மி விம்மியிரு
கைத்தலைமேல்வைத் தழுமைந்தரும் [illegible] காடுமட்டே
பற்றித்தொடரு[illegible]ண்ணிய பாவமுமே.

6. ஒன்றென்றிரு [illegible]இரு, உயர்செல்வமெல்லாம்
அன்றென்[illegible]ட, நல்லறமுநட்பும்
நன்[illegible] கிட்டபடி
[illegible]றென்றிரு, மனமே! உனக்கோருப தேசமி[illegible]த.

7. [illegible]யெனக்கென்னும், புழுவோவெனக்கென்னும், இந்தமண்ணும்
[illegible]யனக்கென்னும், பருந்தோவெனக்கென்னும், தான்புசிக்க
[illegible]யனக்கென்னும். புன்னாயெனக்கென்னும் இந்நாறுடலைப்
[illegible]முடன்வளர்த்தேன் இதனாலென்ன பேறெனக்கே

8. பேய்போற்றிரிந்து பிணம்போற்கிடந்திட்ட பிச்சையெல்லாம்
நாய்போலருந்தி நரிபோலுழன்றுநன் மங்கையரைத்
தாய்போற்கருதித் தமர்போலனைவர்க்குந் தாழ்மைசொல்லிச்
சேய்போல் இருப்பர்கண்டீர் உண்மைஞானந் தெளிந்தவரே.

9. கையொன்றுசெய்ய விழியொன்றுநாடக் கருத்தொன்றெண்ண
பொய்யொன்றுவஞ்சக நாவொன்றுபேசப் புலால்கமழும்
மெய்யொன்றுசாரச் செவியொன்றுகேட்க விரும்புமியான்
செய்கின்றபூசை யெவ்வாறுகொள்வாய் வினைதீர்த்தவனே.

10. சொல்லிலுஞ்சொல்லின் முடிவிலும்வே ச் சுருதியிலும்
அல்லிலுமாசற்ற வாகாயந்தன்னிலு மாய்ந்துவிட்டோர்
இல்லிலுமன்ப ரிடத்திலுமீச னிருப்பதல்லால்
கல்லிலுஞ்செம்பிலு மோவிருப்பனெங்கள் கண்ணுதலே.

11. மனையாளுமக்களும் வாழ்வுந்தனமுந்தன் வாசன்மட்டே
இனமானசு ற மயானமட்டேவழிக் கேதுதுணை
தினையாமளவெள் ளளவாகினுமுன்பு செய்ததவம்
தனையாளவென்றும் பரலோகஞ்சித்திக்குஞ் சத்தியமே.

12. [illegible]ம்பேசித் தினந்தி ஈமும்
[illegible] பரானந்தத்தின்
[illegible]பனக் காமிடத்தே
[illegible] வரும்பொருளே.

13. நீ[illegible]போயென்ன நீமனமே
[illegible]யில்லை மாமறைநூல்
[illegible]காடிமந்திர மென்னகண்டாய்
ஆற்றி[illegible]டாதுந துனை [illegible]யாம லலைகின்றையே.

14. தாயாருஞ்சுற்றமும் [illegible]பண் [illegible] தாழந்[illegible]நாள்
நீயார்நானுரெனப் [illegible]
[illegible] நாய ரும்வந்து கு [illegible] நாயுமொரு
பாயாருநீயுமல்லாற் பி[illegible] னையேதுநட் பாமுட[illegible]